# இனிய சுவைகள்

திருகூடசுந்தரம்

காந்தி நிலையம்



## பொ. திருகூட சுந்தரம் எழுதிய அறிவு நூல்கள்.

---

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | விவாகமானவர்கட்கு ஒரு யோசனை | ... | 3 | 4 | 0 |
| 2. | குழந்தை எப்படிப் பிறக்கிறது ? | ... | 1 | 12 | 0 |
| 3. | தாசியின் காதல் | ... | 2 | 4 | 0 |
| 4. | கொக்கோக விளக்கம் | ... | 5 | 0 | 0 |
| 5. | குழந்தைகள் கேள்வியும் பதிலும் | ... | 3 | 0 | 0 |
| 6. | அப்பாவும் மகனும் | ... | 3 | 0 | 0 |
| 7. | தந்தையும் மகளும் | ... | 3 | 0 | 0 |
| 8. | அண்ணனும் தங்கையும் | ... | 3 | 0 | 0 |
| 9. | ஜவஹர் கதை | ... | 1 | 0 | 0 |
| 10. | எனது பூங்கா | ... | 2 | 0 | 0 |
| 11. | பாஞ்சாலி சபதம் | ... | 1 | 12 | 0 |
| 12. | இதய உணர்ச்சி | ... | 1 | 0 | 0 |
| 13. | மந்தரை சூழ்ச்சி | ... | 0 | 4 | 0 |
| 14. | அறிவுக்கனிகள் | ... | 3 | 0 | 0 |
| 15. | அமுத மொழிகள் | ... | 3 | 0 | 0 |
| 16. | ஆங்கிலக் கவிதை மலர்கள் | ... | 1 | 12 | 0 |
| 17. | விஞ்ஞானம் எதற்கு ? | ... | 1 | 12 | 0 |
| 18. | விஞ்ஞானப் பெரியார்கள் | ... | 3 | 8 | 0 |
| 19. | சைவ உணவு எது ? | ... | 0 | 8 | 0 |
| 20. | இனிய சுவைகள் | ... | 3 | 0 | 0 |
| 21. | அணையா விளக்கு | ... | 3 | 0 | 0 |

---

# இனிய சுவைகள்

ஆசிரியர்

**பொ. திருகூடசுந்தரம்,** எம். ஏ., பி. எல்.,
சென்னைப் பல்கலைக் கழகத் தங்கப் பதக்கம் பெற்றவர்
கலைக் களஞ்சியம் கூட்டாசிரியர்.

முகவுரை
சென்னை அரசாங்க விவசாய மந்திரி

**எம். பக்தவத்ஸலம்,** பி. ஏ., பி. எல்.,



**காந்தி நிலையம்**
தியாகராயநகர் :: சென்னை-17.

**விலை ரூ. 3—0—0**

50 படங்கள் சேர்ந்த
முதற் பதிப்பு 1955





ஆசிரியர்

# பொ. திருகூடசுந்தரம், எம். ஏ., பி. எல்.,

1891—ஆம் ஆண்டில் பிறந்தவர். 5-வது பாரம் முதலே-முதற் பரிசு பெற்றார். எம். ஏ. இல் பல்கலைக் கழகத் தங்கப் பதக்கம் பெற்றார். 1921-ல் வக்கீல் வேலையைவிட்டு ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டார். திருநெல்வேலி ஜில்லாவிலும் செட்டி நாட்டிலும் காந்தீய இயக்கத்தை வேரூன்றச் செய்தார். காந்தியடிகளின் கட்டுரைகளை முதன் முதலில் தமிழில் மொழி பெயர்த்தவர். திருநெல்வேலி நகர சபையில் அங்கத்தினராகவும், தேவகோட்டை நகரசபையில் வைஸ் சேர்மனாகவும் இருந்து சமூக சேவை செய்தார். தீண்டாமை விலக்குக்குத் தீவிரமாக உழைத்தார். அவரும் அவர் மனைவியாரும் நாகர் கோவிலில் தீண்டாமை விலக்குச் சங்கம் நிறுவி ஆலயப் பிரவேசத்துக்கு அடிகோலினர். தமிழ் ஹரிஜன் பத்திரிகைக்கு ஆசிரியராயிருந்தார். ஆங்கிலத்திலும் தமிழிலும் பாண்டித்திய முடையவர். சென்னை செனட் சபையில் அங்கத்தினராக இருந்தார். தமிழில் சொந்தமாகப் பத்து நூல்களும் மொழி பெயர்ப்பாகப் பத்து நூல்களும் எழுதியுள்ளார். அவை அறிவும் இன்பமும் பெறவிரும்புவோர், படிக்க வேண்டிய நூல்கள். சென்னை சர்க்கார் மூன்று நூல்களுக்கு பரிசு அளித்துள்ளார். சிறந்த கட்டுரையாளர். விஞ்ஞானம் முதலிய கடினமான பொருள்களை எளிதில் விளங்குமாறு எழுதக் கூடியவர். இப்பொழுது கலைக் களஞ்சியக் கூட்டாசிரியர். எளிய வாழ்க்கையும் உயர்ந்த சிந்தனையு முடையவர்.



சென்னை அரசாங்க விவசாய மந்திரி

தமிழ் அறிஞர்

## கனம் எம். பக்தவத்சலம் அவர்கள்

### முகவுரை

" **இனிய சுவைகள்** " என்னும் இந்த நூலை நான் மகிழ்ச்சியுடன் வரவேற்கிறேன். உலக அறிஞர்கள் பலரின் பொன்மொழிகள் இதில் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இவை பல தலைப்புக்களின் கீழ் வகுக்கப்பட்டுள்ளன.

இந்த அரிய நூல் படிப்பதற்கு ருசிகரமாகவும் சிறந்த கருத்துக்களை வற்புறுத்துவதாகவும் விளங்குகிறது. அறிவு வளர்ச்சிக்கு உகந்த இந்த இனிய நூலை யாவரும் பாராட்டுவார்கள் என்பதில் ஐயமில்லை.

இதை ஆக்கிய திரு. திருகூடசுந்தரனாரை நான் போற்றுகிறேன்.

மயிலை
6—9—55

**எம். பக்தவத்சலம்.**

# படங்கள்

# பொருள் அகராதி

---

# இனிய சுவைகள்

## அடக்கம்

### 1

சென்ற நூற்றுண்டில் பிரான்ஸ் நாட்டில் பிறந்து கிருமிகள் உண்மையைக் கண்டு பிடித்து உலகத்துக்கு மகத்தான நன்மை தேடிவிட்ட பெரியார் லூயி பாஸ்டியரை லண்டனில் நடைபெற்ற சர்வதேச வைத்திய மகா நாட்டுக்கு அழைத்தார்கள்.


பாஸ்டியர்

அவர் அங்கே சென்ற போது அங்குள்ள அறிஞர்கள் அவரைத் தக்கபடி வரவேற்று மேடைமீது அவருக்காக அமைத்திருந்த இருக்கைக்கு அழைத்துச் சென்றூர்கள்.

அப்போது சபையோர் கரகோஷம் செய்தார்கள். அந்தக் கரகோஷம் தமக்காக என்று எண்ணுமல் அவர் "வேல்ஸ் இளவரசர் வருகிறூர் போலிருக்கிறது. நான் சிறிது பின்னுலேயே வந்திருக்கவேண்டும்" என்று வருத்தம் தெரிவித்தார்.

அப்போது சபையின் தலைவர், "இந்தக் கரகோஷம் தங்களுக்காகத்தான்" என்று கூறினுர்.

### 2

இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் ரோமாபுரியிலிருந்த மிகக் கீர்த்தி பெற்ற தளகர்த்தர் எமிலியஸ் என்ப

வர் கிரீஸ்தேசத்து மாஸிடன் அரசன் பெர்ஸியஸைப் போரில் முறியடித்தார்.

அவருடைய உத்யோகஸ்தர்கள் அந்த மன்னனையும் அவனுடைய மக்களையும் சிறைபிடித்துக் கொண்டுவந்த போது அவர்களை உட்காரும்படி சொல்லிவிட்டுச் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்.

அதன்பின் அவர் தம்முடைய உத்யோகஸ்தர்களைப் பார்த்து "வெற்றி பெற்றால் அது நம்முடைய நல்ல அதிர்ஷ்டத்தைக் காட்டுகிறதா? அல்லது மனிதனுடைய க்ஷேமம் நிலைத்திருப்பதில்லை என்பதைக் காட்டுகிறதா? அரசர்களாயிருந்தவர் இவ்வாறு அல்லற்படநேர்ந்துவிட்டதைக் கண்டு நமக்கும் இந்தக்கதி வரலாம் என்று எண்ண வேண்டாமா? அதனால் இளைஞர்களே! தற்பெருமையையும் ஆணவத்தையும் விட்டொழித்தல் நமது கடமை என்று உணருங்கள்" என்றுகூறி அனுப்பினார்.

## 3



நியூட்டன்

முந்நூறு வருஷங்களுக்கு முன் வாழ்ந்த ஆங்கில விஞ்ஞானியான நியூட்டன் என்பவரே பௌதிக விஞ்ஞான வளர்ச்சியின் தந்தையாவர். அவர் கண்டுபிடித்த உண்மைகள் மிக முக்கியமானவை.

அவரைக் குறித்து பிரஷ்ய தேசத்து ராணி கணிதத்திலும் தத்துவ சாஸ்திரத்திலும் பேர்போன அறிஞராயிருந்தவரான லீப்னிட்ஜ் என்பவரிடம் கேட்ட போது

அவர் "உலகம் தோன்றிய நாள்முதல் கணித சாஸ்திரத்தில் கண்டு பிடித்துள்ள உண்மைகளுள் பெரும் பகுதி நியூட்டனால் காணப்பட்டவையாகும்" என்று புகழ்ந்தார்.

இத்தகைய புகழ்வாய்ந்த பெரியாரான நியூட்டனே தம்மைப்பற்றிக் கீழ்க்கண்டவாறு கூறினார்.

"என்னுடைய பணிகளைப்பற்றி உலகம் என்ன நினைக்குமோ அறியேன். ஆனால் எனக்கு என்ன தோன்றுகிறதென்றால், உண்மை என்னும் கரைகாணாக்கடல் என்னைச் சூழ்ந்து நிற்க அதன் கரையில் என்நண்பர்கள் பொறுக்குவதைவிட நான் அதிக அழகான சிப்பிகளைப் பொறுக்கி விளையாடும் சிறு குழந்தையே ஆவேன்" என்பதாகும்.

# அடிமை முறை

## 4

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் பாரசீக நாட்டை ஆண்ட ஸெர்க்ஸிஸ் என்னும் மன்னன் கிரீஸ் நாட்டை வெல்லுமாறு படையெடுத்தான். பெரும் போர் நடந்தது.

அவன் தன்னுடைய மந்திரிகள் சிலரை அனுப்பித் தனக்கு அடிபணியுமாறு கிரேக்கர்களிடம் கூறுமாறு செய்தான்.

அப்போது கிரேக்க நாட்டு வீரர்களான ஸ்பார்ட்டர்கள் அந்தத் தூதர்களிடம் "நீங்கள் கூறுவதன் பொருளை நீங்கள் அறியீர்கள். நீங்கள் அடிமைகளாக இருக்கிறீர்கள். சுதந்திரத்தின் இனிமையை நீங்கள் சுவைத்ததே யில்லை. சுவைத்திருந்தால் ஈட்டிகளைக் கொண்டு மட்டுமன்றிக் கோடரிகளைக் கொண்டும் போர் புரியும்படி கூறுவீர்கள்" என்று கூறினார்கள்.

5

அமெரிக்கா நாட்டில் நிலவி வந்த அடிமை நிலையை அகற்றிய உத்தமசீலரான ஆப்பிரகாம் லிங்கன் ஜனாதிபதியாவதற்குமுன் ஒரு சமயம் ஓர் ஊரில் நீதிபதி டிக்கி என்பவரைச் சந்தித்தார். இருவரும் ஒரே ஓட்டலில் தங்கியிருந்தனர்.

அமெரிக்க அரசியல் சட்டமானது அடிமை நிலையை அனுமதிப்பதாகவும் அந்தச் சட்டத்தை மாற்றுவது சரியாகாது என்பதாகவும் டிக்கி விவாதித்தார். ஆனால் ஆப்பிரகாம் லிங்கன் அடிமை நிலை எப்படியும் போயே தீரவேண்டும் என்று கூறினார்.



லிங்கன்

அதன்பின் இருவரும் படுத்துக் கொண்டார்கள். ஆனால் அப்போதும் லிங்கன் விவாதித்தார். பிறகு இருவரும் படுத்துக்கொண்டார்கள். அதிகாலையில் டிக்கி விழித்தபோது ஆப்ரகாம்லிங்கன் கட்டிலில் உட்கார்ந்து கொண்டிருப்பதைக் கண்டார்.

"என்ன, டிக்கி! இந்த நாடு பாதி சுதந்திரமாகவும் பாதி அடிமையாகவும் இருக்க முடியாது" என்று லிங்கன் கூறினார்.

அதற்கு டிக்கி "என்ன, லிங்கன்! இன்னும் உறங்கவில்லையா? இப்போது படுத்து உறங்கும்" என்று கூறினார்.

6

சென்ற நூற்றாண்டில் அமெரிக்க ஜனாதிபதி ஆபிரகாம்லிங்கனுடைய பகீரதப்பிரயத்தனத்தால் அடிமை நிலை ஒழிந்தது.

அடிமை முறை ஒழிந்தது என்ற பிரகடனத்தில் கையெழுத்திடுமாறு காரியதரிசி லிங்கனிடம் கொண்டு வந்தபோது, லிங்கன் பேனாவில் மசி தோய்த்தார். அதில் கையெழுத்திடாமல் பேனாவை மேசை மீது வைத்தார். அதே மாதிரி இரண்டு மூன்று முறை செய்தார்.

அப்போது அருகில் நின்ற காரியதரிசி ஸீவார்டிடம், "இன்று காலை முதல் என்னைப் பாராட்ட வந்தவர்களுடைய கையைக் குலுக்கிக் குலுக்கி என் வலது கை வலியெடுத்திருக்கின்றது. இந்த அடிமைமுறை ஒழிப்புத்தான் என்னுடைய உயிர்நாடி. நான் கை நடுங்கிக்கொண்டு கையெழுத்திட்டால் நான் அரை மனதுடனேயே இந்தக் காரியத்தைச் செய்தேன் என்று கூறுவார்கள்" என்று சொன்னார்.

## 7

பிரிட்டிஷ் பார்லிமெண்ட் சபையார் தங்களுக்குச் சொந்தமாயிருந்த மேற்கு இந்தியத் தீவுகளில் நடைபெற்று வந்த அடிமை முறையை ஒழிப்பதாக 1836-ம் ஆண்டு ஆகஸ்டு முதல் தேதியன்று சட்டமியற்றினார்கள். அதில் அந்தச் சட்டம் ஒரு வருஷம் கழித்தே அமலாகும் என்று கண்டிருந்தது.

1837-ம் ஆண்டு ஜூலை 31-ம் தேதியன்று இரவு 11 மணிக்கு அந்தத் தீவுகளுள் மிகப் பெரியதான ஜெமாய்க்காவிலிருந்த 20 ஆயிரம் அடிமைகள் வெள்ளுடை தரித்துக்கொண்டு ஒன்றாகக் கூடி முழங்கால் பணியிட்டு நின்றார்கள்.

பன்னிரண்டு மணியடித்ததும் அவர்கள் அனைவரும் ஒரே குரலில், "நாங்கள் சுதந்திரம் அடைந்து விட்டோம்; நாங்கள் சுதந்திரம் அடைந்து விட்டோம்" என்று ஆனந்தக் கூத்தாடினார்கள்.

## அதர்மம்

8

உலகப் பிரசித்தி பெற்ற ஆங்கில நாவலாசிரியரா யிருந்த ஸர். வால்டர் ஸ்காட் என்பவருடைய மகள் அவரிடம் பேசிக்கொண்டிருந்த போது எதையோ இழிவாகக் கூறினாள்.


ஸ்காட்

அப்போது ஸ்காட் தம்முடைய மகளைப் பார்த்து "அம்மா! நீ ஒரு பெரிய மனுஷி பாதிரி பேசுகிறாயே, அது தவறு. உலகத்தில் இழிவாகக் கருதத் தக்கது ஒழுக்கயினமொன்றே" என்று புத்திமதி கூறினார்.

## அமரத்துவம்

9

ஸ்காட்லாந்து நாட்டு மகா கவியாகிய ராபர்ட் பர்ன்ஸ் என்பவருடைய குதிரை ஒரு சமயம் அவருடைய நகரச்சபையின் தோட்டத்தில் போய் மேய்ந்துவிட்டது. நகரசபைத் தலைவர் அதைப் பவுண்டில் அடைக்குமாறு உத்தரவிட்டார்.

பிறகு யாருடைய குதிரை என்பதைக் கேட்டுத் தெரிந்தபோது, அவர் அதை உடனே அவிழ்த்து விட்டு விடுமாறு கூறினார்.

"அவிழ்த்து விட்டு விடுங்கள்; இல்லையானால் ஊழூழி காலம் இது பேசப்படும்" என்றார்.

ஆனால், பர்ன்ஸ் இதைப்பற்றி பாடல் பாடியிருப்பதால் நகரசபைத் தலைவர் அஞ்சியது நிகழ்ந்துவிடவே செய்தது.

## அரசன்

### 10

பண்டைக்காலத்தில் கிரீஸ் நாட்டில் மக்களுக்குச் சிறந்த சட்டங்களை வகுத்துக் கொடுத்தவர்' என்று புகழ் வாய்ந்தவர் ஸோலன் என்னும் பெரியாராவர். அவரை கிரீஸ் நாட்டில் அவதரித்த ஏழு ஞானிகளுள் ஒருவராகக் கொண்டாடினார்கள்.

மக்கள் எல்லோரும் அவரை அரச பதவி ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டினார்கள். ஆனால், ஸோலன் அதற்குச் சம்மதிக்கவில்லை.

அதுபற்றி அவருடைய நண்பர்கள் அவரிடம் வருத்தப்பட்டபோது அவர் கூறினார் :—

"அரச பதவி சந்தோஷமான இடந்தான். ஆனால், அதைவிட்டு வெளியே வரமட்டும் வழி கிடையாது."

### 11

பண்டைக்காலத்தில் கிரீஸ்நாட்டில் மக்களுக்குச் சிறந்த சட்டங்களை வகுத்தவர் என்று புகழ் பெற்ற ஸோலன் என்னும் பெரியார் ஒரு சமயம் லிடியா நாட்டு அரசராகவிருந்த குரோஸஸ் என்னும் மன்னனிடம் செல்ல நேர்ந்தபோது அந்த மன்னன் அப்பெரியாரைத் தக்க விதமாக வரவேற்கவில்லை.

அதைக் கண்ட ஈஸாப் என்னும் அறிஞர்க்கு மிகுந்த வருத்தமுண்டாயிற்று. அதன் மேல் அவர் ஸோலனிடம்

சென்று, "நண்பரே! அரசர்களிடம் அதிகமாகப் பேசக் கூடாது, அல்லது அவர்கள் அதிகமாகக் கேட்க விரும்பு வதையே பேசவேண்டும்" என்று யோசனை கூறினர்.

அதற்கு ஸோலன், "அப்படியில்லை, நண்பரே! அவர்க ளிடம அதிகமாகப் பேசக்கூடாது, அல்லது அவர்களுக்கு அதிகமாக நன்மை தருவதையே பேசவேண்டும்" என்று பதிலளித்தார்.

## 12

இங்கிலாந்தில் அரசராயிருந்த ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் ஒருநாள் தம்முடைய பேரன் சிறுவன் ஏதோ ஆழ்ந்து படித்துக் கொண்டிருப்பதைக் கண்டு என்ன படிக்கிறன் என்று அறிய விரும்பினர்.

பேரனைத் தட்டிக்கொடுத்துக் கொண்டு, "அப்பா நீ யாரைப்பற்றிப் படித்துக் கொண்டிருக்கிருய்?" என்று கேட்டார்.

"பீட்டர் வார்பெக் என்பவரைப் பற்றி" என்று பையன் கூறினன்.

"அவர் யார்?"

"அவரா? தாம் அரசர் மகன் என்று பாசாங்கு செய்த ஒருவர். ஆனல் உண்மையில் அரசர் மகன் அல்ல, கௌரவமான பெற்றேர்களின் மகன்" என்று பேரன் பதில் கூறினன்.

## 13

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்தில் பிரதம மந்திரியாக இருந்தவர்களுள் ஒருவரான டிஸ்ரேலி என்பவர் ஒருநாள் நண்பர் ஒருவரோடு பேசிக்கொண்டிருந்த போது, அந்த நண்பர் "தாங்கள் எதைச் சொன்னலும்

அரசி கேட்கிருரே, அதன் காரணம் யாது?" என்று கேட்டார்.

அதற்குப் பிரதம மந்திரி "அதன் காரணம் இது தான். நான் ஒரு முறை கண்டுபிடித்திருக்கிறேன். நான் ஒரு போதும் இல்லை என்பதுமில்லை. மறுத்துக் கூறுவது மில்லை. சில வேளைகளில் மறந்தும் விடுவேன்" என்று கூறினர்.

## 14

16-ம் நூற்றுண்டில் ஸ்பெய்ன் நாட்டை ஆண்ட கீர்த்தி பெற்ற ஐரோப்பிய அரசரான ஐந்தாம் சார்லஸ் மன்னன் இறுதி நாளில் அரச பதவியைவிட்டு யூஸ்ட் என்னுமிடத்திலுள்ள துறவிகள் மடத்தில் போய் வசித்து வந்தபோது இரண்டு கடிகாரங்களை ஒன்றுபோல் போகு மாறு செய்ய முயல்வதைப் பொழுதுபோக்காக வைத் திருந்தார். அதில் அவர் எவ்வளவு முயன்றும் அவை ஒன்று போல் ஓடவில்லை.

அதன்மேல் அவர் ஒரு நண்பரிடம் "பார்த்தீரா, இந்த இரண்டு கடிகாரங்களும் ஒத்துப்போகமாட்டேன் என்கின்றனவே, இவ்வாறிருக்க நான் இலட்சக் கணக்கான மக்களை ஒன்றுபோல் சிந்திக்கவும் நடக்கவும் செய்யமுடியும் என்று கருதினேனே!" என்று கூறினர்.

## 15

சென்ற நூற்றுண்டில் ஒரு கனவான், பக்கிங் காம் கோமகனரிடம் சென்று அரசரிடம் சொல்லித் தமக்கு ஒரு நன்மை பெற்றுத் தருமாறு வேண்டிக் கொண்டார்.

"பிரபுவே! கடவுளையும் தங்களையும் தவிர எனக்குத் துணை நிற்பவர் வேறு யாருமிலர்" என்று சொன்னர்.

அதற்குக் கோமகனார் "அப்படியானால் உம்முடைய நிலைமை மோசமாச்சே! நீர் கூறிய இருவரைப் போல் அரசரிடம் செல்வாக்கில்லாதவர்கள் வேறு யாருமிலரே" என்று கூறினார்.

## 16

இங்கிலாந்து நாட்டில் 16-ம் நூற்றாண்டில் அரசாண்ட எட்டாம் ஹென்றி மன்னர் ஒரு சமயம் பிரஞ்சு அரசர் முதலாம் பிரான்ஸிஸ் மீது கோபம்கொண்டு பானர் என்னும் பாதிரியாரை அழைத்து பிரான்ஸிஸிடம் சென்று கோப மொழிகள் கூறிவருமாறு சொன்னார்.

அரசர் கூறுவதுபோல் பிரான்ஸிஸிடம் கூறினால் இங்கிலாந்துக்கு உயிரோடு திரும்பி வரப்போவதில்லை என்று பானர் உணர்ந்தார். அதை மெதுவாக ஹென்ரி மன்னரிடம் விண்ணப்பித்துக் கொண்டார்.

அதற்கு அரசர் "அதைப்பற்றி நீர் கவலை கொள்ள வேண்டாம். பிரஞ்சு அரசர் உம்மைக் கொல்வாரானால் அதன்பின் என் கையிலகப்படும் பிரஞ்சுக்காரர்களின் தலைகளை யெல்லாம் கொய்துவிடுவேன்" என்று கூறினார்.

அதைக் கேட்ட பாதிரியார் தம்முடைய தலையைத் தடவிப் பார்த்துக்கொண்டு—"அரசே! அதில் எனக்கு சந்தேகமில்லை. ஆனால் இங்கிலாந்திலுள்ள தலைகளெல்லாம் இந்தத் தலையைப் போல் என்கழுத்தில் வேறு எந்தத்தலையும் பொருந்தாதே" என்று பதிலளித்தார்.

## 17

18-ம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் அரசாயிருந்த மூன்றாம் ஜார்ஜ் மன்னர் கிளாஸ்கோ நகரத்தில்

ஒரு அறிஞர் சில எஞ்சின்களைச் செய்திருப்பதாகக் கேள்வியுற்று, அவரைப் பார்ப்பதற்கு அங்கு சென்றார்.

எஞ்சின்களைச் செய்த இளைஞர் ஜேம்ஸ் வாட் என்பவரைக் கண்டதும் ஜார்ஜ் மன்னர் தாம் அரசர் என்ற மமதையோடு அவரிடம் "அப்பா! விற்பதற்கு என்ன வைத்திருக்கிறாய்?" என்று கேட்டார்.

அதற்கு வாட் "அரசே! மன்னர்கள் ஆவலோடு விரும்புவதை—சக்தியை" என்று பதிலளித்தார்.


பர்ன்ஸ்

## 18

ஸ்காட்லாந்து தேசத்து உலகப்பிரசித்தி பெற்ற மகா கவியாகிய ராபர்ட் பர்ன்ஸ் ஏழையாக இருந்தபடியால் கிரகாம் என்னும் கனவான் கவிஞர்க்கு அரசாங்கக்கலால் இலாகாவில் ஓர் உத்தியோகம் வாங்கிக்கொடுத்தார்.

அரசாங்கத்தார் பர்ன்ஸுக்குப் புரட்சிக்காரரிடம் அனுதாபம் இருப்பதாகச் சந்தேகித்தார்கள். அப்போது கிரகாம் துரை வந்து கவிஞருக்காகப் பரிந்து பேசினார்.

அதன் பயனாக அரசாங்கத்தார் பர்ன்ஸைக் கண்டித்துவிட்டு "உம்முடைய காரியம் செய்யவேண்டியதே, சிந்திக்க வேண்டியதன்று" என்று நினைவூட்டினார்கள்.

# அழகு

## 19

18-ம் நூற்றாண்டில் ஸ்வீடன் நாட்டில் பிறந்து தலைசிறந்த தாவரநூற் புலவராக விளங்கிய லீனியஸ் என்

பவர் ஒரு நாள் வெளியே உலாவப்போனபோது "கோர்ஸ்" என்னும் காட்டுச் செடியைக் கண்டார்.

அதை அவர் அதுவரை கண்டதில்லை. அதன் மஞ்சட்பூக்கள் அவருடைய உள்ளத்தைக் கவர்ந்தன.

அவர் உடனே முழங்கால் பணியிட்டு "ஆண்டவனே; இவ்வளவு ஆச்சரியமான எழிலுடைய மலர்ச் செடிகளைப் படைத்த நின் கருணைக்கு நன்றி செலுத்துகின்றேன்" என்று கடவுளைத் துதித்தார்.

## 20

**ப**ண்டைக் காலத்தில் கிரீஸ் தேசத்தில் பிலப் போன் என்று ஒரு பெரியவர் இருந்தார். அவரை ஒரு தனிகர் தம்முடைய வீட்டில் நடத்தும் விருந்துக்கு அழைத்திருந்தார். அந்தப் பெரியார் மற்ற விருந்தினர் வருவதற்கு வெகு நேரத்துக்கு முன்னரே வந்து விட்டார்.

அதனால் விருந்துக் கழைத்தவருடைய மனைவியார் அவரை இன்னார் என்று அறியாததால், "இந்த அழகற்ற அசங்கியமான மனிதன் எவனோ பணியாள்" என்று எண்ணி சமையல் வேலை செய்பவருடன் சேர்ந்து வேலை செய்யுமாறு பணித்தாள்.

அவருடைய நண்பர்கள் வந்தபோது அவர் வேலை செய்து கொண்டிருந்ததைக் கண்டார்கள். ஆச்சரியப் பட்டார்கள்.

அப்போது அவர், "அழகில்லாதிருப்பதற்குரிய தண்டனையை அனுபவிக்கின்றேன்" என்று கூறினார்.

## 21

சென்ற நூற்றுண்டின் பிற்பகுதியிலும் இந்த நூற்றுண்டின் முற்பகுதியிலும் பிரான்ஸ் நாட்டிலிருந்த பேர் பெற்ற சிற்பியான ரோடின் என்பவர் ஒருநாள் தமது நண்பர் கர்னீலியர் என்பவருடன் பேசிக்கொண்டிருந்த போது, அந்த நண்பர் ஒரு பெண்ணைக் குறிப்பிட்டு அவள் அழகாயில்லை என்று கூறினர்.

அதைக் கேட்டதும் ரோடின் "என்ன! அழகாயில்லாத பெண்ணைச் சந்திக்க உமக்கு நேர்ந்துளதா? அழகாயில்லாத பெண்ணை நான் சந்தித்ததே யில்லை" என்று கூறினர்.

உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளும் அழகானதே என்பது அவர் கருத்து.

## அறவழி

## 22

இயேசு கிறிஸ்துவிடம் ஒரு மதநூல் பண்டிதர் வந்து "குருவே! மத நூல்களில் கூறியுள்ள விதிகளுள் மிகப் பெரியது யாது?" என்று கேட்டார்

அதற்கு இயேசு சொன்னர்: "உன்னுடைய இதயம், ஆன்மா, உள்ளம் அனைத்தையும் கொண்டு இறைவனை நேசி. இதுவே முதல் விதியும் பெரிய விதியுமாகும்.

இதைப் போன்ற இரண்டாவது விதி இது: உன்னை நேசிப்பது போலவே உன்னுடைய அயலாரையும் நேசி.

இந்த இரண்டு விதிகளுமே சகல மத நூல்களுக்கும் வியாக்கியானங்கட்கும் அடிநிலை."

# அறிஞர்

## 23

இங்கிலாந்தில் 18-ம் நூற்றுண்டில் பிரதம மந்திரியா யிருந்த நியூகாஸில் பிரபு ஒருசமயம் புகழ்பெற்ற நாவலாசிரியர் ஸ்டேர்ன் என்பவரிடம் "அரசாங்க காரியங்களைச் செய்யும் ஆற்றல் அறிஞர்களுக்குக் கிடையாது" என்று சொன்னர்.

அதற்கு ஸ்டேர்ன் "அவர்களுக்கு ஆற்றல் இல்லை என்பதில்லை, அவர்கள் அதை விரும்புவதில்லை. கழுதை போல் பொதி சுமக்கக் குதிரைக்கும் சக்தியுண்டு, ஆனல் அது பொதியை வைக்கச் சம்மதிப்பதில்லை" என்று பதிலளித்தார்.

## 24


எமர்ஸன்

அமெரிக்க நாட்டில் பிரசித்தி பெற்ற ஞானியாயிருந்த எமர்ஸனிடம் பக்கத்து வீட்டுக்காரர் வந்து உலகப் பிரசித்தி பெற்ற கிரேக்க அறிஞர் பிளேட்டோவினுடைய நூல் ஒன்றைப் படிப்பதற்காக இரவல் வாங்கிக்கொண்டு சென்றுர்.

அவர் அதைப் படித்துவிட்டு எமர்ஸனிடம் கொண்டுவந்து கொடுத்தபோது எமர்ஸன் அவரிடம் "என்ன இந்த நூல் தங்கட்கு இன்பமாய் இருந்ததா?" என்று கேட்டார்.

அதற்கு நூல் வாங்கிச் சென்றவர் "ஆமாம். இன்பமாய் இருந்தது; ஆனல் இந்த பிளேட்டோ என்னுடைய

கருத்துக்கள் பலவற்றை உடையவராயிருக்கிறார்" என்று பதில் கூறினார்.

# அறிவு

## 25

18-ம் நூற்றாண்டில் பிரான்ஸ் நாட்டிலிருந்த பயட் என்பவர் மிகக் கீர்த்தி பெற்ற விஞ்ஞானிகளில் ஒருவர்.



பயட்

அவர் ஒருவிதப் படிகங்களைப் பற்றி முப்பது ஆண்டுகளாகச் சோதனை செய்தும் ஆராய்ந்தும் காணாத ஓர் உண்மையை அப்போது கலாசாலையில் படித்துத்தேறிய இளைஞரான லூயி பாஸ்ட்டியர் என்பவர் அவரிடம் சென்று தாம் கண்ட உண்மையைக் கூறி அதைச் சோதனை செய்துகாட்டினார்.

அதைக் கண்டதும் உண்மையைக் காண்பதில் ஆசை மிக்க பயட் அறிஞர் பாஸ்ட்டியரைக் கட்டி அணைத்துக் கொண்டு, "அப்பா! நான் விஞ்ஞானத்திடம் காதல் கொண்டவன். இந்தச் சோதனை என்னுடைய நெஞ்சை அள்ளுகின்றது" என்று கூறி மகிழ்ந்தார்.

## 26

ருஷ்யாவில் பிறந்த பெரிய நாவலாசிரியர்களுள் ஒருவரும் உலகப் பிரசித்தி பெற்றவருமான மாக்ஸிம் கார்க்கி என்பவர் தமக்கு அறிவு தேடுவதிலுள்ள ஆசையைக் குறித்து ஒருசமயம் கீழ்க் கண்டவாறு கூறினார்:

"ஒவ்வொரு ஞாயிறன்றும் நடுச் சந்தியில் விட்டு அடிப்போம், அதற்குச் சம்மதித்தால் நீ படிக்கலாம் என்று ஒருவர் கூறுவாரானால் நான் அந்த நிபந்தனைக்குச் சம்மதிக்கவே செய்வேன்."

## 27


ஸ்டீவன்ஸன்

ஆங்கில நாவலாசிரியர் ஆர். எல். ஸ்டீவன்ஸன் என்பவர் தம்முடைய இறுதிக் காலத்தை பசிபிக் சமுத்திரத்திலுள்ள ஸமோவாத் தீவில் கழித்தார். அங்குள்ள மக்கள் அவரிடம் மிகுந்த அன்புடையவராயிருந்தார்கள். அவரும் அவ்விதமே. ஒருசமயம் அவருடைய பணியாள் ஸோஸிமோ என்பவன் ஏதோ அதிகநேரம் சிந்தனையில் ஆழ்ந்திருப்பதைக் கண்டதும் ஸ்டீவன்ஸன் "அப்பா! அறிவே உயர்ந்தது" என்று கூறினர்.

அதற்கு அந்தப் பணியாள் "அப்படியில்லை. அன்பு தான் உயர்ந்தது" என்று பதிலளித்தான்.

## 28

உலகப் பிரசித்தி பெற்ற இத்தாலிய மகாகவி தாந்தே ஒருசமயம் வெரோனுவின் மன்னருடைய அரச சபைக்குச் செல்ல நேரிட்டபோது அந்த மன்னர் தாந்தேயிடம் "கவிஞர் ஏறே! தங்களைப் போன்ற அறிஞரை இந்தப் பிரபுக்கள் போற்றுவதில்லை. முட்டாள்களையே விரும்புகிறுர்கள்" என்று கூறினர்.

அதற்குத் தாந்தே "அரசே! இதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. நம்மைப் போலொத்தவர்களையே நாம்

பெரிதும் விரும்புகின்றோம் என்பது உண்மை அல்லவா ?" என்று கேட்டார்.

## 29

இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் கிரீஸ் நாட்டில் வாழ்ந்த தேல்ஸ் என்பவரே நட்சத்திரங்களைக் குறித்து ஆராய்ச்சி செய்த முதல் கிரேக்கரானவர்.

அவர் ஒரு நாள் வானத்திலிருந்த நட்சத்திரங்களையே பார்த்துக் கொண்டிருந்தபொழுது, பக்கத்திலிருந்த கிணற்றில் விழுந்து விட்டார்.

அப்போது அவருடைய பணிப்பெண் சிரித்துக் கொண்டு தன்னுடைய சகாவிடம், "பார்த்தாயா, மேலே யுள்ள கவனத்தால் கீழேயுள்ளதைக் கவனியாது போகிறார்" என்று கூறினாள்.

## 30

18-ம் நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் இருந்த ஜென்னர் என்னும் அறிஞரே அம்மை குத்தி வைத்து வைசூரி என்னும் கொடிய நோயை வரவொட்டாமல் தடுக்கும் மார்க்கத்தைக் கண்டுபிடித்து உதவியவர்.

அதனால் பிரான்ஸ் தேசத்தை ஆண்ட நெப்போலியச் சக்கரவர்த்திக்கு ஜென்னரிடம் அதிக மதிப்புண்டு.

ஒரு சமயம் இரண்டு ஆங்கிலேயர் பிரான்ஸ் நாட்டில் அகப்பட்டுக் கொண்டார்கள். அவர்களை இங்கிலாந்துக்கு வர அனுமதிக்க வேண்டுமென்று கோரி ஜென்னர் பிரஞ்சு சக்கரவர்த்திக்கு ஒரு கடிதம் எழுதினார்.

நெப்போலியன் அனுமதிதர மறுப்பதாக அக் கடிதத்தின்மீது எழுதப்போகும் சமயத்தில் அவருடைய ராணியார் அம்மை குத்தல் கண்டு பிடித்தவர் கடிதம் என்று நினைப்பூட்டினார்.

அவ்வளவுதான்! உடனே நெப்போலியன் "ஆகா ஜெனரா! அந்தப் பெரியார்க்கு நாம் எதையும் மறுக்க முடியாது" என்று கூறினார்.

**31**

**செ**ன்ற நூற்றாண்டில் அமெரிக்க ஜனாதிபதியாயிருந்த ஆப்பிரகாம் லிங்கன் அந்தப் பதவிக்கு அபேட்சகராகக் குடியரசுக் கட்சியாரால் நிறுத்தப்பட்டபோது அங்கீகாரப் பத்திரத்தில் கையெழுத்திட்டு அனுப்பினார்.

ஆனால், அனுப்பும் முன்னர் அதைக் கல்வி அதிகாரியிடம் கொண்டுபோய் ஏதேனும் இலக்கணத் தவறு உளதா என்று பார்க்குமாறு வேண்டினார். "தவறுகள் இருப்பின் திருத்தாமல் அனுப்ப விருப்பமில்லை" என்று கூறினார்.

கல்வி அதிகாரி பார்த்துவிட்டு ஒரு திருத்தம் செய்ய வேண்டும் என்று கூறினார். ஆப்பிரகாம் லிங்கன் அவ்வாறே திருத்தியே அனுப்பினார்.



பாரடே

**32**

**நூ**று வருடங்கட்கு முன் இங்கிலாந்து நாட்டில்வாழ்ந்த பாரடே என்னும் விஞ்ஞானியே இப்போது நமக்குக் கிடைக்கும் மின்சார வசதிகளுக் கெல்லாம் அடி நிலையாகவுள்ள டைனமோவின் தத்துவத்தைக் கண்டு பிடித்தவர்.

அதைப் பற்றிப் பேச நேர்ந்தபோது ஓர் அம்மையார் "தாங்கள் கண்டு பிடித்துள்ளது வியப்பான விஷயம் தான். ஆனால் அதனால் உண்டாகும் நன்மை எதுவோ" என்று கூறினர்.

அதற்கு அறிஞர் பாரடே "அம்மா! குழந்தை பெறுகின்றீர்களே, குழந்தையால் யாது பயன்?" என்று கேட்டார்.

## 33

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் பிறந்து பல முக்கியமான விஞ்ஞான உண்மைகளைக் கண்டு பிடித்து உலகுக்கு உதவிய பெரியாரான கெல்வின் பிரபு உலகப்பிரசித்தி பெற்ற ராயல் கழகம் என்னும் விஞ்ஞான சபையின் தலைவராக இருந்தார்.


கெல்வின்

அவர் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராயிருந்த பதவியை 75-வது வயதில் ராஜிநாமா செய்த பின்னர், பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சி மாணவராகத் தம்முடைய பெயரைப் பதிவு செய்து கொண்டார்.

## 34

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்தில் வாழ்ந்த அறிஞர் கார்லைல், ஹைட்பார்க் என்னுமிடத்திற்கு அடிக்கடி பஸ்ஸில் போய் வந்ததால் அந்த பஸ்ஸின் கண்டக்டர் அவரை நன்கறிவார்.

ஒரு நாள் கார்லைல் பஸ்ஸை விட்டு இறங்கிச் சென்ற போது பஸ்ஸில் பிரயாணம் செய்த ஒருவர் கண்டக்டரைப் பார்த்து "விசித்திரமான தொப்பி வைத்துக்கொண்டு போகும் அந்தக் கிழவர் யார்?" என்று கேட்டார்.

அதற்குக் கண்டக்டர் "விசித்திரமான தொப்பியா? அவர் தொப்பி விசித்திரமாயிருக்கலாம், ஆனால் அதனடியிலுள்ள தலை எவ்வளவு சிறந்தது!" என்று பதில் கூறினார்.

## 35

பதினாறும் நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் பிரான்ஸிஸ் பேக்கன் என்ற ஒரு பெரிய அறிவாளி இருந்தார். அவரையே விஞ்ஞான முறையின் தந்தை என்று கூறுவர். அரசாங்கத்தில் பெரிய பதவிகள் வகித்தார். சிறந்த நூல்கள் எழுதியுள்ளார்.

அவர் தமது 65-வது வயதில் ஒரு நாள் உறைபனி அதிகமாகப் பெய்து கொண்டிருந்த சமயம் வண்டியில் ஏறிப்போனார். உறைபனி இறைச்சியைக் கெட்டுப் போகாமல் பாதுகாக்குமோ என்ற எண்ணம் அவருக்குப் போகும்வழியில் உதித்தது.

உடனே பரிசோதிக்க விரும்பி பக்கத்திலிருந்த வீட்டாரிடம் ஒரு கோழியை வாங்கிக் கொன்று உறைபனியில் பொதிந்து வைத்தார்.

ஆனால், அவருக்குக் கடுஞ்சுரம் கண்டு விட்டது. அது குணத்துக்கு வராமல் இறந்து போனார்.

ஆயினும் அவர் நோயாய்ப் படுத்துக் கொண்டிருக்கும் போது நடுங்கிய கையில் பேனாவைப் பிடித்து தாம் செய்த சோதனை வெற்றி பெற்றது பற்றித் தெளிவாக எழுதிவைத்தார்.

இப்போது இறைச்சி, காய்கறி, பழங்கள் முதலிய வற்றைக் குளிர்ப்பெட்டியில் வைத்துப் பாதுகாப்பதை எல்லோரும் அறிவார்கள்.

## 36

பதினும் நூற்ருண்டில் ஜெர்மனி நாட்டில் ஜாண் கெப்ளர் என்ற உலகப் பிரசித்தி பெற்றவான சாஸ்திரி யிருந்தார். அவரே கிரகங்கள் சூரியனைச் சுற்றிவரும் பாதை, வேகம், காலம் ஆகியவை குறித்து விளக்கியவர். அவை கெப்ளர் விதிகள் என்று இன்றளவும் கூறப்பட்டு வருகின்றன.



கெப்ளர்

அவர் இந்த விதிகளை விளக்கிய நூல் எழுதிமுடித்ததும் "எழுதிமுடித்து விட்டேன், இக்காலத்தவர் படித்தாலும் சரி, வருங்காலத்தவர் படித்தாலும் சரி, எனக்குக் கவலையில்லை. இத்தனை ஆயிரம் ஆண்டுகளாக இறைவன் காத்திருந்த போது இருநூறு ஆண்டுகளுக்கு நான் காத்திருந்தால் என்ன?" என்று கூறினர்.

## 37

ஜெர்மன் மகாகவி கதே என்பவர் வீமர் நகரில் வாழ்ந்து வந்தார். அவ்வூர்ச் சிற்றரசரும் இவரும் பரஸ்பரம் மிகுந்த அன்புடையவர்களா யிருந்தனர்.

அச்சிற்றரசர் இறந்துபோன செய்தியைக் கேட்டதும் கதே பெருந்துக்கத்தில் ஆழ்ந்தார். நண்பர்கள் கூறிய ஆறுதல் மொழிகள் பயன் தரவில்லை. அவர் இறுதியில் கூறினர்:—


கதே

"அவருக்கு முன் நான் இறக்க எண்ணியிருந்தேன். ஆனால் ஆண்டவன் தாம் விரும்பியவாறு ஆற்றுகின்றார். இறக்கவேண்டிய மக்களாகிய நாம் செய்யக் கூடியதெல்லாம் எவ்வளவு தூரம், எவ்வளவு காலம் நம்மால் முடியுமோ அவ்வளவு நாம் துக்கத்தைப் பொறுத்துக் கொள்ளுவதும், அறநெறி வழுவாமலிருப்பதுமே யாகும்".

## 38

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்து நாட்டில் ஏழைகளுக்காகப் பாடுபட்டுப் பல நன்மைகள் தேடிக் கொடுத்த மேரி ஹ்யூஜிஸ் என்ற அம்மையார் எட்டடி அகலமும் பத்தடி நீளமுமுள்ள அறையொன்றில் வாழ்ந்து வந்தார். அதுவே அவர் வேலை செய்யும் காரியாலயம், படுக்கையறை, நண்பர்களுடன் பேசுமிடம் அனைத்துமாகும்.

அவருடைய நண்பர் மூரியல் லெஸ்டர் அம்மையார் ஒரு நாள் அவரைப்பார்க்கப் போனபோது, குளிர்காயும் அடுப்பு மூட்டப்படாமலிருப்பதைக் கண்டு, "என்ன இந்தக் குளிர்மிகுந்த பருவத்திலும் நெருப்பில்லாமல் இருக்கிறீரே கஷ்டமாக இல்லையா?" என்று கேட்டார்.

அதற்கு ஹ்யூஜிஸ் அம்மையார் தமதுகையை நீட்டி லெஸ்டருடைய கையைப் பிடித்துக்கொண்டு "என்னைத் தொட்டுப் பாரும், ஏழைகளின் துன்பங்களை நினைத்து எப்போதும் நான் கோபத்தால் தீயாக இருந்துகொண்டிருக்கும்போது எனக்கு எப்படிக் குளிரும்?" என்று கூறினார்.

## அனுதாபம்

### 39

18-ம் நூற்றுண்டில் இங்கிலாந்தில் முதன் முதலாக அகராதி இயற்றிய பெரும் புலவரான டாக்டர் ஜான்ஸன் என்பவர் ஒருநாள் வீதியில் ஒரு பிச்சைக்காரருக்கு சில பென்ஸ் பணம் கொடுத்தார்.



ஜான்ஸன்

அப்போது அவருடனிருந்த நண்பர் "இவர்கட்குப் பணம் கொடுப்பதால் என்ன பயன்? இவர்கள் அதை மதுவுக்கும் புகையிலைக்குமே செலவு செய்வர்" என்று கூறினார்.

அதற்கு டாக்டர் ஜான்ஸன் "அவர்களுக்கு வாழ்வை இனியதாகச் செய்யும் இவற்றை ஏன் அவர்களுக்குக் கொடுக்காமல் இருக்க வேண்டும்?" என்று பதிலுரைத்தார்.

### 40

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்தில் பிரதம மந்திரியாயிருந்த ஸர் ராபர்ட் பீல் என்பவர் பள்ளிக்கூடத்தில் படித்துக் :கொண்டிருந்த சமயத்தில் ஒரு நாள் ஒரு முரட்டுப் பையன் இவரை அடிக்கலானன்.

அதைக்கண்டதும் இவருடன் படித்த பைரன் என்னும் சிறுவன் அந்த முரடனை விலக்கக்கூடிய அளவு பலமில்லாதவனுயிருந்தும் கோபத்துடனும் கண்ணீருடனும் அவனிடம் சென்று " எத்தனை அடிகள் கொடுக்கப் போகிருய்?" என்று குளறிக் குளறிக் கேட்டான்.



பைரன்

"ஏண்டா, சிறுபயலே! எதற்காகக் கேட்கிருய்?" என்று முரடன் இரைந்தான்.

"நீ விரும்பினல் அவனுக்குக் கொடுக்கும் அடிகளில் பாதியை எனக்குக் கொடுக்கலாம் என்பதற்காகவே" என்று பைரன் என்னும் சிறுவன் சொன்னன்.

இந்தச் சிறுவன்தான் இங்கிலாந்தில் பிறந்த மகா கவிகளுள் ஒருவரெனப் புகழ் பெற்ற பைரன் பிரபுவாகும்.

## ஆசிரியர்

## 41

சென்ற நூற்றுண்டில் இங்கிலர்ந்து நாட்டிலிருந்த பெரிய நாடகாசிரியர்களுள் ஒருவர் அயர்லாந்தில் பிறந்து இங்கிலாந்தில் வாழ்ந்த ஆஸ்கார் ஒயில்ட் என்பவர்.

ஆவ்பரி பிரபு என்னும் அறிஞர் உலகில் காணப்படும் தலைசிறந்த நூல்களுள் நூறு இவை என்று ஒரு பட்டி தயாரித்தார்.

அதுபோல் ஒன்று தயாரிக்குமாறு ஆஸ்கார் ஒயில்டைக் கேட்டுக்கொண்டபோது அவர் "நான் எப்படி நூறு சிறந்த நூல்களைக் கூறமுடியும்? நான் ஐந்துதானே இயற்றியுள்ளேன் ?" என்று கூறினர்.


ஒயில்ட்

## 42

அமெரிக்காவில் பிரசித்திபெற்ற ஹார்வார்ட் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராயிருந்த சார்ல்ஸ் டவுண்செண்ட் கோப்லண்ட் என்பவர் பல ஆண்டுகளாக உச்சி மாடியிலுள்ள ஒரு சிறு அறையிலேயே வசித்து வந்தார்.

கீழே நல்ல சௌகர்யமான அறையில் வந்து வசிக்குமாறு நண்பர்கள் கூறும்போதெல்லாம் அவர், அவர்களிடம் "இல்லை நான் இந்த மாடி அறையிலேயே வசிப்பேன், இறைவன் எனக்கு மேலர்கவுள்ள இடம் இது ஒன்றே. அவர் தாம் சதா வேலை செய்துகொண்டிருந்தாலும் சற்றும் சப்தம் செய்யாதிருப்பவர்" என்று கூறுவார்.

## 43

இங்கிலாந்து நாட்டில் யாரும் அரசர் முன்னிலையில் தலையில் தொப்பி வைத்துக்கொண்டிருக்கக்கூடாது என்பது வழக்கம்.

இரண்டாம் சார்லஸ் அரசர் ஆண்ட போது அந்த நாட்டில் பேர் பெற்ற ஆசிரியராயிருந்த டாக்டர் புஸ்பி என்பவர் ஒரு நாள் அரசரைத் தம்முடைய பாடசாலை முழுவதும் அழைத்துப் போய்க்காட்டினர். அப்போது அவர் தம்முடைய தலையில் தொப்பியுடனேயே இருந்தார்.

அவ்வாறு தொப்பியை எடுக்காமல் இருந்ததற்காக அரசரிடம் மன்னிப்புக் கோரினர். "நான் ஏன் எடுக்கவில்லை என்றால் இந்த உலகத்தில் டாக்டர் புஸ்பியைவிட உயர்ந்தவர் யாரும் இருப்பதாக என்னுடைய மாணவர்கள் எண்ணிவிடக்கூடாது என்பதற்காகத்தான்" என்று கூறினர்.

## 44

பிரபல பிரஞ்சு பெரிய எழுத்தாளரான வால்டேர் ஜெனிவாவில் வசித்தபோது ஒரு நாள் இத்தாலிய அறிஞர் காஸனுவோ அவரிடம் வந்து பேசிக்கொண்டிருந்தார். அப்போது வால்டேர் தாம் ஹாலர் என்னும் அறிஞருடைய நூல்களைப் படித்ததாகவும் அவை சிறந்தனவாக இருப்பதாகவும் கூறினர்.


வால்டேர்

"ஆனால் அவர் தங்கள் நூல்களை மிகக் கேவலமாகக் கருதுகின்றாரே" என்று காஸனேவா கூறினர்.

"அப்படியானல் நாங்கள் இருவரும் எண்ணியது தவறு என்று தோன்றுகிறது" என்று வால்டேர் கூறினர்.

## 45

இங்கிலாந்து நாட்டில் முதலாம் ஜேம்ஸ்மன்னன் அரசாண்ட காலத்தில் கிரேவன் பிரபு என்பவர் பிரபல நாடகாசிரியரான பென் ஜான்ஸனைப் பார்க்க விரும்பினர்.

இதை அறிந்ததும் பென் ஜான்ஸன் பிரபுவின் வீட்டுக்குச் சென்றார். ஆனல் அவர் அணிந்திருந்த அழுக்குப்

படிந்த கிழிந்த சட்டைகளைக் கண்டு, காவலாளி அவரை மாளிகைக்குள் அனுமதிக்க மறுத்தான். கவிஞர் அவனைத் திட்டினர், அவனும் திட்டினன்.


பென் ஜான்ஸன்

இந்த சப்தத்தைக் கேட்டுப்பிரபு வெளியே வந்து விஷயம் என்ன வென்று விசாரித்தார்.

அப்போது பென் ஜான்ஸன் "தாங்கள் என்னைப் பார்க்க விரும்பினீர்களாமே?" என்று கேட்டார்.

"என்ன, உம்மையா? நீர் யார்?"

"பென் ஜான்ஸன்"

"நீரா பென் ஜான்ஸன்? மௌனப் பெண் என்னும் கவிதை எழுதிய பென் ஜான்ஸன் நீராக இருக்க முடியாது. முட்டாள் இரைந்தால் பூ என்று கூற முடியாத நீரா பென் ஜான்ஸன்?"

"அப்படியானல், பூ" என்று பென் ஜான்ஸன் கத்தினர்.

அதைக் கேட்டதும் பிரபு சிரித்துக்கொண்டு "இப்பொழுது நீர் பென் ஜான்ஸன்தான்" என்று கூறி மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

## 46

பெரும்புகழ் வாய்ந்த அமெரிக்க நாவலாசிரியர் நத்தானியேல் ஹாத்தார்ன் தாம் பார்த்துவந்த அரசாங்க உத்தியோகம் போய்விடவே மிகுந்த வருத்தத்தோடும் மனச்சோர்வோடும் வீடுவந்து சேர்ந்தார். அவருடைய மனைவியார் அவருடைய துக்கத்தின் காரணத்தை அறிந்து அவரிடம் எவ்வித வருத்தமும் கொள்ளாமல்

பேனவும் பேப்பரும் எடுத்து மேசைமீது வைத்துவிட்டு அவரைக் கட்டித் தழுவிக் கூட்டிக்கொண்டு "இப்போது நீர் எழுத விரும்பிய புத்தகத்தை எழுதுவீர்" என்று அன்போடு கூறினர்.

ஹாத்தார்ன் மனச்சோர்வு நீங்கி உற்சாகத்துடன் ஒரு நாவல் எழுதி முடித்தார். அதுதான் இப்போது மிகச் சிறந்த நாவல்களுள் ஒன்ருகக் கருதப்படும் "சிவப்பு எழுத்து" என்னும் நூலாகும்.

## 47

பதினரும் நூற்ருண்டில் இருந்தவரும் ஆங்கில நாட்டு மகா கவிகளுள்ஒருவருமான எட்மண்ட் ஸ்பென்ஸர் என்பவர் தமது "வனதேவதா ராணி" என்னும் மிகச் சிறந்த காவியத்தை இயற்றி முடித்ததும் அந்தக் காலத்தில் கவிஞர்களை ஆதரிப்பதில் அதிக அக்கரையுடையவர் என்று புகழ்ப் பெற்ற ஸவுதாம்டன் பிரபுவிடம் காட்டுவதற்காகக் கொண்டு போனர்.

வாயிற் காவலன் அதை வாங்கிக்கொண்டுபோய் பிரபுவிடம் கொடுத்தான். பிரபு சிறிது படித்ததும் ஆசிரியருக்கு 20 பவுண்கள் கொண்டு போய்க் கொடுக்குமாறு பணித்தார். மறுபடியும் மேற்கொண்டு சிறிது படித்ததும் "சரி, அவருக்கு இன்னும் 20 பவுண்கள் கொண்டுபோய்க் கொடு" என்று கூறினர். மீண்டும் சிறிது படித்ததும் அவ்வாறே கூறினர்.

இறுதியில் அவரால் பொறுக்க இயலவில்லை. "அந்த மனிதரை வீட்டைவிட்டுத் துரத்திவிடு, நான் இதைப் படித்துக் கொண்டே இருந்தால் என் பணம் எல்லாம் போய்விடும்" என்று கூறினர்.

## 48

ஆங்கில நாடகாசிரியர் ஆஸ்கார் ஒயில்டும் அவருடைய நண்பரும் ஆசிரியருமான பிராங் ஹாரிஸ் என்பவரும் ஒருநாள் ஒரு விருந்துக் கூட்டத்திலிருந்தனர்.

ஹாரிஸ் பிறர் உண்டாக்கிய கதைகளைத் தாம் உண்டாக்கியது போலவே கூறுவது வழக்கம். இன்று பிரஞ்சுப் பேராசிரியர் அனட்டோல் பிரான்ஸ் உண்டாக்கிய கதையொன்றைச் சில சிறு மாறுதல்களுடன் கூறினர். எல்லோ லோரும் இது பிராங் இயற்றிய கதையே என்று எண்ணிக்கொண்டு பேசாமல் இருந்தார்கள்.

அப்போது ஆஸ்கார் ஒயில்ட் "என்ன, பிராங்! இந்தக் கதையை அனட்டோல் பிரான்ஸ் இவ்வளவு அழகாகக் கூற முடியாது" என்று கூறினர்.

## 49

ஆங்கில மகாகவிகளுள் ஒருவரான வில்லியம் வோர்ட்ஸ்வர்த் என்பவர் ஒரு நாள் பிரசித்தி பெற்ற விமர்சகரான சார்லஸ் லாம் என்பவருடன் பேசிக்கொண்டிருந்தார்.

அப்போது வோர்டஸ்வர்த் "நான் மனம் வைத்தால் ஷேக்ஸ்பியர் மாதிரி எழுத முடியும் என்று எண்ணுகிறேன்" என்று கூறினர்.

அதைக் கேட்டதும் ஷேக்ஸ்பியர் பக்தரான சார்லஸ் லாம் "ஆமாம், எல்லாம் இருக்கிறது, மனம்தான் இல்லை" என்று கூறினர்.



வோர்ட்ஸ்வர்த்

## 50

இங்கிலாந்தில் முதலாம் எலிஜபெத் ராணி அரசாண்ட காலத்தில் டாக்டர் ஹேவார்ட் என்பவர் "நாலாம் ஹென்றி அரசரின் வாழ்க்கை வரலாறு" என்று ஒரு நூலை எழுதினர்.

அதைக் கண்டதும் அரசி அளவுகடந்த கோபம் அடைந்து தமது மந்திரிகளில் ஒருவரும் பெரிய அறிஞரு மான பேக்கன் பிரபுவிடம் அந்த நூலில் ராஜத்துரோக மாக எதுவேனும் இருக்கிறதா என்று பார்க்குமாறு பணித்தார்.

பேக்கன் பார்த்துவிட்டு "அரசியே! இதில் ராஜத் துரோகமாக எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனல் திருட்டுத்தான் அதிகமாகக் காணப்படுகிறது" என்று கூறினர்.

"எப்படி? எங்கே?" என்று அரசி ஆத்திரத்துடன் கேட்டார்.

அதற்கு பேக்கன் "அவர் தாஸிட்டஸ் என்னும் பண்டைய ரோமானிய வரலாற்று ஆசிரியருடைய நூல் களிலிருந்து பல பகுதிகளைத் திருடி யிருக்கிறர்." என்று பதிலளித்தார்.

## 51

ஜார்ஜ் பெர்னர்ட்ஷா என்னும் உலகப் பிரசித்தி பெற்ற ஆங்கில நாடகாசிரியர் அயர்லாந்தில் பிறந்தவர். அதனல் ஒருசமயம் லில்லா மக்கார்தி என்பவர் "தாங்கள் அயர்லாந்தில் தங்கித் தங்கள் நூல்களை எழுதாமல் இங்கிலாந்துக்கு வரக் காரணம் யாது?" என்று கேட்டார்.

அதற்கு பெர்னுர்ட்ஷா "அதற்குக் காரணமா? இங்கிலாந்து அயர்லாந்து நாட்டை ஜெயித்துக் கொண்டது. அதனுல் இங்கு வந்து இங்கிலாந்தை செயிப்பதைத்தவிர எனக்கு வேறு வழியில்லே. நான் இங்கிலாந்தை செயித்துவிட்டேன் என்பதை அறிவீர்கள்" என்று பதிலளித்தார்.


பெர்னுர்ட்ஷா

## 52

பிரபல அமெரிக்க நாவலாசிரியரான வில்லியம் டீஸ் ஹவல்ஸ் என்பவரிடம் ஒருசமயம் ஒரு இளைஞர் தாம் இயற்றிய ஒரு காவியத்தைக் கொண்டு வந்து கொடுத்தார்.

அதை ஹவல்ஸ் படித்துப் பாரத்துவிட்டு "ஆகா மிக அழகாயிருக்கிறது. இதை நீங்கள்தான் இயற்றினீர்களோ?" என்று கேட்டார்,

அதற்கு அந்த இளைஞர் "ஆமாம், நானே இதிலுள்ள ஒவ்வொரு சொல்லையும் எழுதினேன்" என்று பதில் கூறினுர்.

அதைக் கேட்டதும் ஹவல்ஸ் உட்கார்ந்திருந்தவர் எழுந்து "பைரன் பிரபுவே! தங்களைக் காண மிக்க சந்தோஷம். தாங்கள் இத்தாலியில் இறந்துவிட்டதாக அல்லவோ எண்ணிக் கொண்டிருந்தேன்?" என்று கூறினுர்.

## 53

ஆங்கில ஆதி அகராதி கர்த்தாவும் பெரிய கவிஞருமாகிய டாக்டர் ஜான்ஸனிடம் அவருடைய தோழரும் அவருடைய வாழ்க்கை வரலாற்றை எழுதிய

வருமான பாஸ்வெல் ஒருநாள் "ஒரு நல்ல சமையற்காரர் ஒரு நல்ல கவிஞரை விடச் சமூகத்திற்கு இன்றியமையாதவரல்லவா?" என்று கேட்டார்.


பாஸ்வெல்

அதற்கு டாக்டர் ஜான்ஸன் "இந்த நகரத்திலுள்ள எந்த நாயைக் கேட்டாலும் அந்த விதமாகத்தான் கூறும்" என்று பதிலளித்தார்.

## 54

அமரிக்கர் ஒருவர் ஆங்கிலப் பெரு நாவலாசிரியரான எச். ஜி. வெல்ஸ் என்பவரின் நாவல்களில் மிகுந்த ஈடுபாடுடையவராக இருந்தார். அவரை நேரில் சந்திக்கத் துடித்துக் கொண்டிருந்தார்.

ஒரு நாள் ஒரு விருந்துக்குச் சென்றபோது தம்முடைய அருகிலிருந்தவரிடம் எச். ஜி. வெல்ஸைப் பற்றிப் புகழ்ந்து கூறிக் கொண்டிருந்தார்.

விருந்து முடிந்தபின் அவருடைய நண்பர் ஒருவர் "என்ன அப்பா! இன்று உன்னுடைய நாவலாசிரியருடன் பேச உனக்குக் கிடைத்ததல்லவா?" என்று கேட்டார்.

"யாருடன்? எச். ஜி. வெல்ஸுடனா?"

"ஆமாம், அவருடன்தான். அவர்தானே உன்னுடைய அருகில் உட்கார்ந்திருந்தவர்?"

"அப்படியா? உண்மையாகத்தானா? அவரிடம் அவருடைய பிரிட்லிங் நாவல் கதை முழுவதையும் கூறிக் கொண்டிருந்தேன். அந்த நூலைப் படித்திருக்கிறீர்களா என்று கேட்டதற்கு இல்லை என்றே கூறினார்" என்று சொன்னார்.

## 55

ஸர் லூவிஸ் மாரிஸ் என்பவர் ஒருநாள் பிரபல ஆங்கில நாடகாசிரியரான ஆஸ்கார் ஒயில்ட் என்பவருடன் பேசிக் கொண்டிருந்த பொழுது தம்முடைய கவிதைகளைப் பற்றி எதுவும் எழுதாமல் பத்திரிகைகள் எல்லாம் மௌனம் சாதிப்பதாகக் கூறினர்.

"இது ஒரு சதியாலோசனை போலவே தோன்றுகிறது. நான் என்ன செய்ய வேண்டும், ஆஸ்கார்." என்று கேட்டார்.

அதற்கு ஆஸ்கார் ஒயில்ட் "அந்தச் சதியாலோசனையில் சேர்ந்துகொள்க" என்று பதிலளித்தார்.

## 56

ஜெர்மனி நாட்டில் 18-ம் நூற்றுண்டில் கிளாப்ஸ்டாக் என்ற பெயருடைய ஒரு கவிஞர் இருந்தார். அவருடைய பாடல்களில் அதிக ஈடுபாடுடைய சிலர் அவருடைய ஊராகிய ஹாம்பர்க் நகரம் சென்று அவரிடம் சென்று அவருடைய நூலில் ஒரு பகுதியைக் காட்டி அதன் பொருளை விளக்குமாறு வேண்டிக் கொண்டார்கள்.

கவிஞர் அதை மெதுவாகப் படித்து விட்டு "அதை எழுதியபோது யாது எண்ணி எழுதினேனே, ஞாபகமில்லை- ஆனல் நான் எழுதியவற்றுள் எல்லாம் இதுவே மிச்ச் சிறந்த பகுதி என்பது என் ஞாபகம். அதன் பொருளைக் கண்டுபிடிப்பதில் உங்கள் வாழ்நாள் முழுவதையும் செலவழித்தாலும் அது தவருகாது" என்று கூறினர்.

3

## 57

ஆங்கில நாவலாசிரியரான ஆர். எல். ஸ்டீவன்ஸன் என்பவர் ஒரு நாள் இன்பக் கனவு கண்டு அதில் எதையோ பார்த்து அச்சம் கொண்டு கத்தினர்.

அவர் அருகிலிருந்த அவருடைய மனைவியார் உடனே அவரை எழுப்பினர். ஆனல் அவருக்கு மிகுந்த கோபம் உண்டாயிற்று.

"என்னை ஏன் எழுப்பினய்? நான் ஒரு அழகான பயங்கரக் கதை ஒன்றைக் கனவு கண்டுகொண்டிருந்தேன்" என்று கூறினர்.

இந்தக் கனவை ஆதாரமாகக் கொண்டே அவர் பின்னல் தமது சிறந்த "டாக்டர் ஜெக்கில்—மிஸ்டர் ஹைட்" என்னும் நாவலை எழுதினர்.

## 58


யுரிப்பிடீஸ்

பண்டைக் காலத்தில் ஏதன்ஸ் நகர வாசிகளுள் சிலர் சைரக்கூஸ் நகரம் சென்றபோது சிறையிடப்பட்டனர். அவர்கள் பொழுது போக்காகச் சிறையில் தம்முடைய நாட்டு நாடகாசிரியர் யுரிப்பிடீஸ் இயற்றிய நாடகங்களை நடித்தார்கள்.

இவற்றைக் கண்ணுற்ற சிறை அதிகாரிகள் வழக்கம் போல் கைதிகளைக் கொடூரமாக நடத்தாமல் மிகுந்த பட்சமாக நடத்தினர்கள்.

ஆதலால் அந்த ஏதன்ஸ் நகர வாசிகள் விடுதலை அடைந்து ஏதன்ஸ் வந்ததும் யுரிப்பிடீஸிடம் வந்து தங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

## 59

சென்ற நூற்றுண்டிலிருந்த பிரஞ்சுப் பேரறிஞரான பாய்லோ என்பவர் ஒரு நல்ல கவிஞரை டாஹெமரி என்னும் பிரபுவிடம் கூட்டிக் கொண்டு போய் :—

"பிரபுவே! தங்களுக்கு அமரத்துவம் வழங்கக் கூடிய ஒருவரைக் கூட்டி வந்துள்ளேன். தாங்கள் அவர் உயிர் வாழ்வதற்கு வேண்டிய பொருளை அவருக்கு வழங்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்.

## 60

அமரிக்க நகைச்சுவை ஆசிரியரான மார்க் ட்வைன் என்பவரிடம் ஒரு நாள் ஒரு அம்மையார் வந்து அவருடைய நூல்களில் தமக்குள்ள ஈடுபாட்டைக் கூறி ஆசிரியரைப் புகழ்ந்து கூறினர்.


ட்வைன்

இறுதியில் "ஆண்டவருக்கு உம்மிடம் அதிகமான அன்பு இருக்கும் என்று எண்ணுகிறேன்" என்று கூறினர்.

அதற்கு ட்வைன் "அப்படியேதான் எண்ணுகிறேன்" என்று பதிலளித்தார்.

அந்த அம்மையார் போனபின் ட்வைன் புன்முறுவலுடன் "இறைவனுக்கும் எனக்கும் இப்போது நேசமில்லை என்பதை இவர் அறியார் போலும்!" என்று கூறினர்.

## ஆவிகள்

### 61

18-ம் நூற்றுண்டில் இங்கிலாந்து நாட்டில் பேரறிஞர் என்று பேர் பெற்ற டாக்டர் ஜான்ஸன் என்பவரும் அவருடைய நண்பர்களும் ஒரு நாள் இறந்தோர் ஆவிகள் பற்றிப் பேச நேர்ந்தது.

அப்போது அவர் "உலகம் படைக்கப்பட்டு ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகியும் இறந்தோர் ஆவி வருவதுண்டா என்ற கேள்விக்கு இன்னும் விடைகாண முடியாமலிருப்பது விந்தையே. இல்லை என்று அறிவு கூறும். ஆனல் உண்டு என்றே நம்பிக்கை கூறுகின்றது" என்று சொன்னர்.

## ஆன்மா

### 62

ஜெர்மன் தேசத்து மகாகவி கதே என்பவரும் அவருடைய நண்பர் எக்கர்மன் என்பவரும் ஒரு நாள் வீமர் சாலையில் சென்ற போது அஸ்தமன சூரியனைக் கண்டார்கள்.

கதே அதைக் கண்டதும் அப்படியே சிந்தனையில் ஆழ்ந்துபோய் சிறிது நேரம் நின்ருர். பிறகு எக்கர்மனைப் பார்த்து "அது மறையும் போதும் பழைய சூரியனே என்று பண்டைப் புலவர் ஒருவர் பாடியிருக்கிருர். வயது எழுபத்தைந்து ஆகும்போது மரண நினைவு சில

சமயங்களில் வருவதுண்டு. ஆனால், அது எனக்கு ஒருபோதும் அயர்வு உண்டாக்குவதில்லை. ஆன்மா என்றும் அழியாது என்னும் நம்பிக்கை யுடையவன் நான். சூரியன் நம்முடைய ஊனக்கண்களுக்கு மறைவது போல் தோன்றினும் அது உண்மையில் மறைவதே யில்லை. எப்பொழுதும் ஒளிர்ந்து கொண்டே யிருக்கிறது. அதுபோன்றதே ஆன்மா " என்று கூறினர்.

## 63

18-ம் நூற்றுண்டின் இறுதியில் எடின்பரோ நகரத்திலிருந்த் ஆசிரியர் ஒருவர் தாம் சிறந்த ஸ்காட்டிஷ் பாடல்களைத் தொகுக்க விரும்புவதாகவும் உலகப் பிரசித்திபெற்ற மகாகவி பர்ன்ஸ் தம்முடைய பாடல்களுள் சிறந்தனவற்றைத் தேர்ந்து அனுப்ப வேண்டும் என்பதாகவும் அதற்குத் தக்க சன்மானம் தருவதாகவும் பர்ன்ஸுக்குக் கடிதம் எழுதினர்.

ஆனால், பர்ன்ஸ் இந்த வேலையை பக்தி சிரத்தை யான பணியாகக் கருதினரே யன்றி பணம் சம்பாதிக்கும் தொழிலாகக் கருதவில்லை.

அதனால் அவர் அந்த ஆசிரியர்க்கு " தாங்கள் சன்மானம் தருவதாகச் சொல்லுகிறீர்கள். என்னுடைய பாடல்கள் விலை யில்லாதனவாகவோ அல்லது விலை மதிக்க முடியாதனவாகவோ இருக்கலாம். எதுவாயினும் சன்மானம் பற்றிப் பேசுவது ஆன்மாவைப் பங்கப் படுத்துவதாகும் " என்று பதில் எழுதினர்.

## 64

இயேசு கிறிஸ்துவிடம் அவருடைய விரோதிகளான பரிசேயர் என்னும் யூத வகுப்பினருள் ஒருவரான நிக்கோடிமஸ் என்பவர் ஒரு நாள் வந்து "மதகுருவே! யாருடன் கடவுள் உளரோ அவரே நீர் செய்யும் அற்புதங்களைச் செய்ய முடியும், அதனால் நீர் கடவுள் அனுப்பிய குருவே என்று நாங்கள் உணர்கின்றோம்." என்று கூறினார்.

அதற்கு இயேசு "நான் உறுதியாகச் சொல்வதைக் கேளும், எந்த மனிதனும் மறுபடியும் பிறந்தாலொழிய கடவுள் இராச்சியத்தைக் காணமாட்டான்" என்று பதிலளித்தார்.

அதைக் கேட்ட நிக்கோடிமஸ் "மனிதன் கிழவனான பிறகு எப்படி மறுபடியும் பிறக்க முடியும்? மறுபடியும் தாயின் கருப்பையுள் புகுந்து பிறக்க முடியுமா?" என்று கேட்டான்.

அதற்கு இயேசு "நான் உறுதியாகச் சொல்வதைக் கேளும், மனிதன் ஆன்ம ரீதியாக மறுபடியும் பிறந்தாலொழிய கடவுள் இராச்சியத்தினுள் காலெடுத்து வைக்க முடியாது" என்று கூறினார்.

## 65

இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்கு முன் கிரீஸில் வாழ்ந்த உலகப் பிரசித்தி பெற்ற உத்தம ஞானியான சாக்கரட்டீஸ் மரண தண்டனை அடைந்து ஹேம்லாக் என்னும் விஷச்சாற்றை குடிக்கப் போகும்

தருணம் அவருடைய நண்பரான கிரைட்டோ என்பவர் அவரிடம் "தங்களை எங்கே புதைக்க வேண்டும் என்று விரும்புகின்றீர்?" என்று கேட்டார்.


சாக்கரட்டீஸ்

அதற்கு சாக்கரட்டீஸ் "எங்கே வேண்டுமாயினும் புதையுங்கள், ஆனால் என்னைப் பிடிக்க முடியுமோ உங்களுக்கு?" என்று கூறினர்.

## 66

**சா**லியாப்பியன் என்பவர் ருஷ்யாவின் சிறந்த இசைக் கலைஞர்களுள் ஒருவர்.

அவரைக் கௌரவிக்கும் பொருட்டு 1902-ம் ஆண்டில் மாஸ்கோவில் ஒரு பெரிய விழா நடத்தப் பெற்றது.

அப்போது ருஷ்யப் பெரு நாவலாசிரியர்களுள் ஒருவரான மாக்ஸிம் கார்க்கி எழுந்து சாலியாப்பியனைப் பார்த்துக் கூறினர்:—

"தாங்கள் ஒரு பெரிய மேதை. ஆனல் தங்கள் பாடல்கள் தனவந்தர் மாளிகைகளில் பாடப்பட்டுப் பயன்படா தொழிகின்றன. தரித்திரர் தாழ்த்தப்பட்டோர் ஆகியவர்களுக்கு உற்சாக மூட்டுங்கள். அப்பொழுதே உண்மையான பெருமையை அடைவீர்கள்".

## 67

சென்ற நூற்றுண்டில் பிரசித்தி பெற்ற இசை வாணராக இருந்த பாதரெஸ்கி என்பவர் போலந்து நாட்டினர். அவர் ஒரு சமயம் இங்கிலாந்தில் விக்டோரியா அரசி முன் வயோலின் வாசித்தபோது அரசியார் மிகுந்த மகிழ்ச்சி அடைந்து "பாதரெஸ்கியாரே! நீர் ஒரு மேதையே" என்று பாராட்டினுர்.

அதற்கு பாதரெஸ்கி "அரசியே! அவ்வாறு இருக்கலாம். ஆனுல் நான் மேதையாவதற்கு முன் சாதனை செய்தது மிக அதிகமாகும்" என்று பதிலளித்தார்.

## 68

சென்ற நூற்றுண்டில் ருஷ்யாவிலிருந்த பிரசித்தி பெற்ற பியானே வாசிப்பவரான ரூபின்ஸ்டீன் என்பவரிடம் ஒரு நாள் ஒரு யுவதி தான் பியானே வாசிப்பதைக் கேட்கவேண்டும் என்று வேண்டிக் கொண்டாள்.

ரூபின்ஸ்டீன் சம்மதித்தார். அந்தப் பெண் வாசித்து முடிந்ததும் அவரிடம், "நான் இப்போது என்ன செய்ய வேண்டுமென்று நீங்கள் கருதுகிறீர்கள்?" என்று கேட்டாள்.

"கலியாணம் செய்து கொள்ளவேண்டும்" என்று ரூபின்ஸ்டீன் பதில் கூறினுர்.

## 69

நார்வே நாட்டில் 18-ம் நூற்றாண்டில் பிரசித்தி பெற்ற வயோலின் வாசிப்பவர் ஒல்புல் என்பவர் இங்கிலாந்துக்கு வந்திருந்தபோது சில நண்பர்களிடம் தம்முடைய நாட்டிலுள்ள மலைகளையும் மலை வீழ் அருவிகளையும் அவற்றில் எழும் இசையையும் பற்றி வர்ணித்தார்.

அப்போது ஒருவர் "தாங்கள் அவற்றினிடம் வயோலின் வாசித்தீர்களோ?" என்று கேட்டார்.

அதற்கு ஒல்புல் "நான் வாசிக்கவில்லை, கேட்டுக் கொண்டிருந்தேன்" என்று பதிலளித்தார்.

## 70

பதினெட்டாம் நூற்றாண்டில் ருஷ்யாவின் மிகக் கீர்த்தி வாய்ந்த சக்கரவர்த்தினியாயிருந்த இரண்டாவது காதரைன் என்பவர் புகழ்மிக்க இத்தாலியப் பாடகியான காப்ரில்லி என்பவரைத் தமது தலைநகருக்கு அழைத்துப் பல சங்கீதக் கச்சேரிகள் நடத்த ஏற்பாடு செய்தார். ஆனால் அவரை அழைக்குமுன் அவருக்கு எவ்வளவு பணம் கொடுக்க வேண்டுமென்று கேட்டுத் தெரிந்து கொள்ளவில்லை.

கச்சேரிகள் நிகழ்ந்தபின் கேட்டபோது காப்ரில்லி ஐயாயிரம் தங்க நாணயங்கள் தரவேண்டும் என்று கேட்டார்.

அதைக் கேட்டதும் அரசியார் ஆச்சரியமடைந்து "ஐயாயிரமா? என்னுடைய தளபதிகளுள் ஒருவர் கூட இவ்வளவு பெறவில்லையே" என்று கூறினர்.

அதற்கு காப்ரில்லி "அப்படியானல் தளபதிகளைச் சங்கீதக் கச்சேரிகள் நடத்துமாறு சொல்லுவது தானே?", என்று பதிலளித்தார்.

## 71

**18-ம்** நூற்றுண்டில் ஜெர்மனியில் பிறந்து ஒன்பது வயது சிறுவனுக யிருக்கும்போதே சாகித்தியங்கள் இயற்றத் தொடங்கி அறுநூறு சாகித்தியங்கள் செய்து புகழ்பெற்ற மோஜார்ட் என்னும் பெரியாரிடம் ஒரு இளைஞர் வந்து சாகித்தியங்கள் செய்வது எப்படி என்று கேட்டார்.

அதற்கு மோஜார்ட் "நீர் இளைஞராயிற்றே, அதற்குள்ளாகவே சாகித்தியங்கள் இயற்ற ஆசைப்படலாமா?' என்ருர்.

"ஆனல் நீங்கள் என்னைவிட இளைஞராக யிருந்த பொழுதே இயற்றத் தொடங்கவில்லையா?"

"ஆம், உண்மைதான், ஆனல் நான் அந்தக் காலத்தில் இந்த மாதிரி யாரிடமும் கேட்கவில்லையே" என்று மோஜார்ட் கூறினர்.

# இலக்கியம்

## 72

ருஷ்யாவில் பிறந்து உலகப் பிரசித்திபெற்ற பேறிஞர்களுள் ஒருவரான மாக்ஸிம் கார்க்கி என்பவருடன் சில நண்பர்கள் ஒருசமயம் இலக்கியத்தைப் பற்றி பேசிக் கொண்டிருந்தபோது நண்பர்களுள் ஒருவர் "இலக்கியத்தின் இலட்சியம் ஆன்மாவுக்கு ஆறுதல் அளிப்பதே" என்று கூறினர்.

அதற்கு கார்க்கி "அதை நான் ஏற்றுக்கொள்ள இயலாது. இலக்கியத்தின் இலட்சியம் அதைவிட உயர்ந்த தாகும். அது ஆறுதலளிப்பதும், கிளர்ந்தெழச் செய்வ துமாகும்" என்று கூறினர்.

## இலட்சியம்

### 73

இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் ரோமாபுரியில் அரசாண்ட மிகக் கீர்த்திபெற்ற ஜூலியஸ் ஸீஸர் என்னும் சக்கரவர்த்தி நல்ல கல்விமான், பெரிய வீரர், மக்களுக்கு நன்மை பல செய்தவர்.

ஒரு நாள் அவர் வீதிவழி செல்லும்போது அன்னிய நாட்டார் சிலர் குரங்குகளேயும் நாய்களேயும் மடியில் வைத்து மகிழ்ந்து கொண்டிருப்பதைக் கண்டார்.

அவர் உடனே தம்முடன் வந்த நண்பர்களிடம் "அவர்களுடைய நாட்டுப் பெண்கள் குழந்தைகள் பெறுவதில்லேயோ?" என்று கேட்டார்.

## ஈகை

### 74

இயேசு கிறிஸ்துவுக்கு விரோதமாயிருந்த பரிசேயர் என்னும் யூத வகுப்பினரின் தலேவரான ஒருவர் ஒருசமயம் இயேசுவிடம் வந்து தம்முடன் உணவு உண்ணுமாறு அழைத்தார்.

இயேசு அவருடைய இல்லம் சென்று உணவு உண்ணப் போகும்போது "விருந்து செய்யும்போது நண்பர்களையும் தனவந்தர்களையும் அழைக்கவேண்டாம். அவர்கள் உம்மை அழைத்து உமக்கு ஈடு செய்வார்கள். விருந்து செய்யும்போது ஏழைகள், கூன் குருடு நொண்டிகள் ஆகியவரை அழைக்கவேண்டும், அவர்கள் ஈடு செய்ய இயலாது. ஆனால் இறுதிநாளில் இறைவன் நியாயத் தீர்ப்பு அளிக்கும்போது நீர் ஈடுபெறவே செய்வீர்" என்று கூறினார்.

## உடை

## 75

உலகப் பிரசித்திபெற்ற அமெரிக்க ஹாஸ்ய ஆசிரியர் மார்க் ட்வைன் அலங்காரத்தைவிட சௌகரியத்தையே பெரிதாக மதிப்பவர். சாதாரணமாக மற்றவர்கள் அணியும் காலர் நெக்ட்டை என்பவற்றை அவர் அணிவதில்லை. ஒருநாள் அவர் அவ்வாறே அவற்றை அணியாமல் ஒரு நண்பரைப் போய்ப் பார்த்து வந்தார். அதைக் கண்டதும் அவருடைய மனைவியார் கடிந்து கொண்டார்.

உடனே ட்வைன் ஒரு காலர், நெக்ட்டைதேடி எடுத்து ஒரு காகிதத்தில் சுற்றிக் கீழ்க் கண்டவாறு ஒரு சீட்டும் எழுதி அந்த நண்பருக்கு அனுப்பினார் :—"சிறிது நேரத்துக்குமுன் தங்களுடன் அரைமணிநேரம் காலர் நெக்ட்டையில்லாமல் பேசிக் கொண்டிருந்தேன். அவற்றை அனுப்பியிருக்கிறேன். தயவுசெய்து அவற்றை அரைமணி நேரம் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு எனக்கு அனுப்புங்கள்."

# உண்மை

## 76

இருநூறு ஆண்டுகளுக்குமுன் இங்கிலாந்தில் பிறந்து இந்தியாவுக்கு வந்து பாப்டிஸ்ட் மிஷன் என்ற கிறிஸ்தவ சங்கத்தை நிறுவி சேவை செய்த வில்லியம் காரி என்னும் புகழ்பெற்ற பாதிரியார் செருப்பு உற்பத்தி செய்பவருக்குப் பிறந்தவர்.

ஒருசமயம் அவர் கல்கத்தாவில் கவர்னர் ஜெனரல் வீட்டில் நடந்த விருந்துக்குச் சென்றிருந்தபோது, பக்கத்திலிருந்த உத்யோகஸ்தர் ஒருவர் மற்றொரு உத்யோகஸ்தரிடம் இவர் முன்னால் செருப்பு உற்பத்தி செய்பவராக இருந்தாரல்லவா என்று கேட்டார்.

அது பிஷப் காரியின் காதில் விழுந்தது. அவர் உடனே "அய்யா! நான் செருப்பு உற்பத்தி செய்பவனல்ல. செருப்புப் பழுது பார்ப்பவனே" என்று கூறினார்

## 77

17-ம் நூற்றாண்டில் ஜெர்மனியிலிருந்த மகாப் பெரிய வான சாஸ்திரி கெப்ளர் என்பவர் இத்தாலியில் பிறந்து பெரிய கணித சாஸ்திரியும் வான சாஸ்திரியுமாக இருந்த கலிலியோ என்பவருக்குத் தாம் எழுதிமுடித்த "பிரபஞ்ச ரகசியம்" என்று பொருள்படும் நூலை அனுப்பி வைத்தார்.



கலிலியோ

கலிலியோ அதைப் பெற்றதும் கெப்ளருக்கு ஒரு வந்தனக் கடிதம் எழுதினார். அதில் அவர் கூறுவதாவது:-

"உண்மையைத் தேடும் விஷயத்தில் உண்மையிடம் பரம பக்தராகவுள்ள தங்களைத் துணையாகப் பெற்ற தற்காக மகிழ்ச்சி அடைகின்றேன்."

## 78

17-ம் நூற்றாண்டில் இத்தாலியிலிருந்த உலகப் பிரசித்தி பெற்ற வான சாஸ்திரி கலிலியோ என்பவரே முதன்முதல் டெலஸ்கோப் என்னும் தொலைநோக்கியைச் செய்தவர். அவர் அதன் மூலம் பார்த்து பூமிக்குஒரு சந்திரன் இருப்பது போல, வியாழனுக்கு ஏழு சந்திரர்கள் இருப்பதைக் கண்டார்.

ஆனால்மற்றவர்கள் அதை நம்பவில்லை. தொலைநோக்கி வழியாகக் கண்டபின்னரும் சிலர் தொலைநோக்கி பூமியிலுள்ள பொருள்களை உண்மையாகக் காட்டுமேயன்றி பூமிக்கு வெளியேயுள்ள பொருள்களை உண்மையாகக் காட்டமுடியாது என்றனர். சிலர்தொலைநோக்கி வழியாகப் பார்க்கக்கூட மறுத்துவிட்டனர். அங்ஙனம் மறுத்தவர்களில் ஒருவர் அப்படி மறுத்த சில தினங்களில் இறந்து போனார்.

அப்போது கலிலியோ "அவர் தேவலோகம் போகும் வழியிலேனும் நான் கூறுவது உண்மை என்று நேரில் பார்த்து உணர்ந்திருப்பார்" என்று விளையாட்டாகக் கூறினார்.

## 79

**17-ம்** நூற்றுண்டில் இங்கிலாந்தில் இருந்த சிறந்த விஞ்ஞானிகளுள் ஒருவரான பாயில் என்பவர் எப்போதும் விஞ்ஞான ஆராய்ச்சியிலே ஆழ்ந்து போயிருப்பார். அவர் கண்டுபிடித்த முக்கியமான உண்மைகள் பல. இங்கிலாந்தில் மிகக் கீர்த்தி பெற்ற ராயல் கழகம் என்னும் பிரதம விஞ்ஞான சங்கத்தை நிறுவியவர்களுள் இவரும் ஒருவர்.

அவரிடம் ஒருநாள் ஒரு நண்பர் "தங்களுக்கு வயதாகிறதே, தங்களுக்கு எப்போதேனும் மரணபயம் உண்டாகிறதோ?" என்று கேட்டார்.

அதற்கு அறிஞர் பாயில் "நான் இறந்து போனல் அங்கே உணமைகளை யெல்லாம் கண்டு விடுவேன். அவற்றைத் தேடிக் கண்டுபிடிக்கும் ஆனந்தம் இல்லாமற் போகும். அதற்காகவே நான் மரணத்தைக் கண்டு அஞ்சுகிறேன்" என்று பதிலளித்தார்.

## 80

**செ**ன்ற நூற்றுண்டில் ஜெர்மனியிலிருந்த உலகப் பிரசித்தி பெற்ற மகாகவி கதே என்பவர் ஒருநாள் தம்முடைய நண்பர் எக்கர்மன் என்பவரிடம் "எதுவும் இல்லாமற் போகாது" என்ற பாடலைப் பாடியிருப்பதாகக் கூறி வாசித்துக் காட்டினர்.



கதே

"சில வருடங்களுக்குமுன் "எல்லாம் இல்லாமற் போகும்" என்று ஒருபாடல் பாடினேன். அது அறிவீன மானது. ஆனால் அதை என்னுடைய பெர்லின் நண்பர்கள் விஞ்ஞானிகள் மண்டபத்தில் பொன் எழுத்தில் பொறித்து வைத்தனர். அதைக்காண எனக்கு வருத்தமாயிருக் கிறது" என்று கூறினர்.

## 81

இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் கிரீஸ் நாட்டி லிருந்த உத்தமரான சாக்கரட்டீஸ் என்பவர் பார்க்க அசங் கியமாக இருப்பார். தடித்த உதடுகளும், தட்டையான மூக்கும், குட்டையான உடலும், வட்டமான கண்களும் உடையவராயிருந்தார்.

அந்த நகரத்தில் சாமுத்திரிகா லட்சணத்தில் வல்ல வர் என்று கூறிக்கொண்ட ஒருவர் சாக்கரட்டீஸ் அங்க அடையாளங்கள் அவர் துன்மார்க்கராக இருக்கவேண்டும் என்று காட்டுவதாகக் கூறினர்.

அதைக் கேட்டதும் ஞானியின் நண்பர்கள் அந்த அறிஞரைக் கொல்லப்போனார்கள். ஆனால் சாக்கரட்டீஸ் அவர்களைத் தடுத்து "அவர் கூறியதில் உண்மைஉண்டு. என்னிடமிருந்த துர்க்குணங்களை நான் என்னுடைய அறிவினல் அவித்தேன்" என்று கூறினர்.

## 82

16-ம் நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் எட்டாம் ஹென்றி என்னும் மன்னன் அரசாண்டான் அவன் தன்னுடைய மனைவியைத் தவறாக விவாகரத்துக் குட்படுத்த விரும்பினன்.

அவனுடைய பிரதம மந்திரியாயிருந்த ஸர் தாமஸ் மோர் என்னும் பெரியார் அரசர் செய்த செயலை ஆட்சேபித்தார்.

அதற்காக அரசன் அவரைச் சிறையிலிட்டான். அப்போது மோர் அதிக நோயாயிருந்தார். ஆயினும் அவர் மனந்தளராமல் மகிழ்ச்சியுடனேயே இருந்தார்.

ஆனால் அவருடைய மனைவி அரசன் சொற்படி நடந்து விடுதலை பெறுமாறு வேண்டினாள்.

அப்போது ஸர் தாமஸ் மோர் "பெண்ணே! இந்தச் சிறைக்கும் தேவலோகத்துக்குமுள்ள தூரம் நம்முடைய வீட்டுக்கும் தேவலோகத்துக்குமுள்ள தூரம் தானே!" என்று பதிலளித்தார்.

## உணவு

### 83

பிலிப் டேவிட்ஸன் என்னும் பேர் பெற்ற ஆங்கில பாதிரியார் சமயசம்பந்தமான மகாநாடு ஒன்று முடிந்ததும் மற்றப் பாதிரியார்களுடன் உணவு உண்ணச் சென்றார். அப்போது அவரைப் பார்த்து ஒரு பாதிரியார் "நம்முடைய ஆசைகளுக்குக் கடிவாளம் இடும் சமயம் இது' என்று கூறினார்.

அதற்கு டேவிட்ஸன் "அப்படியில்லை. இதுதான் நாம் ஏதேனும் கடிக்கக்கூடிய சமயம்" என்று பதிலளித்தார்.

### 84

பெர்னட்ஷா என்னும் ஆங்கில நாடகாசிரியர் அந்நாட்டில் பேர் பெற்ற மரக்கறி உணவினர். ஒருசமயம்



பெர்ஞர்ட்ஷா

விருந்து மண்டபத்தில் அவருக்காக காய்கறிகளை நறுக்கி ஒரு தட்டில் வைத்துக் கொண்டு வைத்தனர். அப்போது அவர் அருகிலிருந்த புகழ் பெற்ற மற்ெருரு ஆங்கில நாடகாசிரியரான ஸர் ஜேம்ஸ் பாரி என்பவர் ஷாவிடம் மெதுவாக "இந்த மாதிரியான உணவு இப்போதுதான் உண்ணப்போகிறீரா அல்லது இதற்கு முன்னும் உண்டதுண்டா?" என்று கேட்டார்

## 85

ஒரு சமயம் ஹாம்லின் கார்வண்டு என்னும் ஆசிரியர் ஒருவீட்டில் விருந்துண்டபொழுது அந்த வீட்டு அம்மையாரிடம் அவர் "அம்மா இந்தக் காளான்கள் விஷ ஜாதியல்லவே" என்று கேட்டார். அவள் இல்லை என்று கூறிய போதிலும் அவருக்கு ஐயமாகவே இருந்தது. அவள் மறுபடியும் உறுதி கூறவே அவர் "அம்மா! தாங்கள் கூறுவது தவருக இருந்தால் அமெரிக்க இலக்கியத்துக்குப் பெரு நஷ்டம் உண்டாகுமே என்றுதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்" என்று கூறினர்.

## உறுதி

## 86

பண்டைக் காலத்தில் கிரீஸ் நாட்டில் பிரான் என்று ஒரு பெரிய தத்துவ சாஸ்திரி இருந்தார். ஒரு காரியத்தைவிட ஒரு காரியம் நல்லது என்று துணிந்து கூறுவதற்கு ஏற்ற அளவு ஞானம் யாரும் அடைந்துவிட முடியாது என்பது அவருடைய கொள்கை. அதனல் அதை ஐயக் கொள்கை என்று கூறுவர்.

இந்தக் கொள்கையைக் கற்றுக்கொடுத்த இவருடைய ஆசிரியர் ஒரு நாள் நடந்து போகும்போது தற்செயலாக ஒரு குழியில் விழுந்து விட்டார். அவரால் ஏறி வெளியே வர முடியவில்லை.

இந்த சந்தர்ப்பத்தில் அவ்வழியாக வந்த பிரான் அவருடைய நிலைமையைப் பார்த்தார். சிறிது நேரம் சிந்தித்தார். "இந்தக் கிழவரை இழுத்து விடுவதால் ஏதேனும் நன்மையுண்டாகும் என்று எண்ணப் போதுமான காரணமில்லை" என்று முடிவு செய்து தூக்கிவிடாமல் போனார்.

அந்தப் பக்கமாகப் போன மற்றவர்கள் அவரைத் தூக்கிவிட்டுவிட்டு, அன்பில்லாமல் நடந்துகொண்டதற்காக பிரானைக் கண்டித்தார்கள்.

ஆனால் குழியில் விழுந்த ஆசிரியரோ தாம் கற்றுக் கொடுத்த கொள்கைப்படி நடந்து கொண்டதற்காகத் தம்முடைய மாணவரைப் பாராட்டினார்.

## 87

பண்டைக் காலத்தில் சைரக்கூஸ் என்னும் நகரத்தில் அரசாண்ட நிக்கோகிரியன் என்னும் கொடுங்கோல் மன்னன் அனக்ஸார்க்கஸ் என்னும் சான்றோரைக் கல் உரலிலிட்டுத் துவைக்குமாறு கட்டளையிட்டான்.

அவனுடைய பணியாட்கள் அவ்வாறு செய்யும் போது அனக்ஸார்க்கஸ் "நன்றாய் அடியுங்கள், மிதியுங்கள், துவையுங்கள். நீங்கள் துன்புறுத்துவது அனக்ஸார்க்கஸை அல்ல, அவருடைய உறையையே" என்று கூறினார்.

## 88

18-ம் நூற்றாண்டில் பிரான்ஸ் நாட்டில் பூபாங் என்று ஒரு பெரிய உயிர் நூற் புலவர் இருந்தார். அவருடைய "உயிர் நூல் வரலாறு" என்னும் 15 தொகுதிகள் கொண்ட நூல் உலகப் பிரசித்தி பெற்ற தாகும்.

அவர் தினந்தோறும் காலையில் நேரம் சென்றே விழிப்பது வழக்கமாயிருந்தது. அந்த வழக்கத்தை நீக்கிக்கொள்ள விரும்பினர். அதனல் தம்முடைய பணியாள் ஜோசப் என்பவனிடம் தம்மை அதிகாலையில் எழுப்பு மாறு கூறினர்.

அவன் அவ்விதம் எழுப்ப வரும்போதெல்லாம் அவர் அவன் மீது சீறி விழுவார். ஆனல் பிறகு விழித்ததும் அவன் விழிப்பிக்கவில்லை என்று கண்டிப்பார்.

அதனல் அவன் ஒரு நாள் காலையில் அவர் எழுந்திருக்கா திருக்கவே பனிக்கட்டி போல் குளிர்ந் திருந்த தண்ணீரைக் கொண்டு வந்து அவர் மீது கொட்டி ஞன். அந்த நாளிலிருந்து அவர் அதிகாலையில் எழுந் திருக்கலானர்.

அவர் தாம் வெளியிட்ட நூலின் தொகுதிகளுள் நாலைந்து எழுதியது இவ்வாறு அதிகாலையில் எழுந் திருந்ததாலேயே என்று கூறினர்.

## ஊக்கமுடைமை

## 89

சென்ற நூற்றாண்டில் மகா பெரிய ஐரோப்பியப் புலவராகக் கருதப்பட்ட ஜெர்மன் ஆசிரியர் கதே என்ப

வருக்கு ஒரு பெரிய உப்புச் சுரங்க வியாபாரி, தமக்குப் பெரு நஷ்டம் உண்டாய் விட்டதென்றும் ஆயினும் அந்த அநுபவத்தைத் தாம் வீணாக்கிவிடப்போவதில்லை என்றும் எழுதியிருந்தார்.

அக்கடிதம் படித்தவுடன் கதே தமது நண்பர் எக்கர்மன் என்பவரிடம் "இத்தகைய மனிதரைத் தான் நான் விரும்புகிறேன். துர் அதிர்ஷ்டம் நேர்ந்தும் சோர்வடையாதிருக்கிறார் அல்லவா? இது தானே நல்லது" என்று சொன்னார்.

அப்போது எக்கர்மன் "ஆமாம், ஆங்கில ஆசிரியர் ஸ்டெர்ன் என்பவர் தாம் அறிவுள்ளவனைப் போல் தம்முடைய துக்கங்களைப் பயன்படுத்தத் தவறி விட்டதற்காக வருந்துகிறார்" என்று கூறினார்.

"அதுமாதிரி விஷயம் தான் இது" என்று கதே சொன்னார்.

## எளிமை

### 90

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் இரட்சண்ய சேனை என்னும் கிறிஸ்தவ இயக்கத்தைத் தோற்றுவித்த வில்லியம் பூத் என்னும் பெரியாருடைய மனைவியார் காதரைன் என்பவருடைய நண்பர் ஒருவர் அவருடைய குழந்தைக்காக கிறிஸ்தமஸ் பண்டிகையின் போது ஒரு சிறு உடுப்புத் தைத்து அனுப்பினார்.

அது வந்ததும் காதரைன் அம்மையார் "தாங்கள் உடுப்பு அனுப்பியதற்காக என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அது எங்கட்குப் பிரியமாகவே இருக்கிறது. ஆனால் அது விஷயத்

தில் ஒரே ஒரு கஷ்டம் யாதெனில் அது அதிக ஆடம்பர மாக இருப்பதே" என்று கடிதம் எழுதினார்.

## 91

பேர் பெற்ற ஆங்கில ஆசிரியர் மாக்ஸ் பீர்போம் என்பவரையும் அவருடைய மனைவியாரையும் ஒரு விருந்துக்கு அழைத்திருந்தார்கள். அங்கே அழகான நடிகைகள் பலர் வந்திருந்தனர். அவர்கள் எல்லோரும் அழகுக்காக பவுடர் பூசாமல் அயலாரைக் கவர்வதற் காகவே பவுடர் தடவி யிருந்ததை ஆசிரியர் கண்டார். அவர் உடல் நடுங்கிற்று. அவர் தம்முடைய மனைவியாரைப் பார்த்து "நீ தான் அழகாய் இருக்கிறாய், அவர்களைத் திரும்பிப் பார்க்கக் கூட அருவருக்கிறது" என்று கூறினார்.

## 92


பிளேட்டோ

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் கிரீஸ் நாட்டின் தலை நகரமா கிய ஆதன்ஸ் என்பதில் டயோ ஜெனீஸ் என்ற பெயருடைய ஒரு பெரிய ஞானியிருந்தார்.

அவர் ஒரு நாள் பட்டப் பகலில் ஒரு விளக்கை ஏற்றிக் கையில் பிடித்துக் கொண்டு ஆதன்ஸ் நக ரத்தின் சந்துகளிலும், வீதிகளி லும் நடந்து கொண்டிருந்தார்.

அப்போது ஒருவர் அவரிடம் சென்று அவர் இவ் வாறு பகல் நேரத்தில் விளக்கு வெளிச்சத்துடன் செல்வ தன் காரணத்தை வினவினார்.

அதற்கு டயோஜெனிஸ் மனிதனைத் தேடி அலைவதாக மறுமொழி கூறினர்.

## 93

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் கிரீஸ் நாட்டிலிருந்த சாக்கரட்டீஸ் என்பவரை ஐரோப்பிய அறிவின் சிகரம் என்று கூறுவார்கள். அவருடைய தலை சிறந்த மாணவரே உலக முழுதும் போற்றும் பிளேட்டோ என்னும் பேரறிஞர்.

சாக்கரட்டீஸ் தம்முடைய ஆதன்ஸ் நகரில் ஏலம்போடுமிடத்துக்குப் போக நேர்ந்தால் அப்போது அவர் தம்முடைய நண்பர்களிடம் "எனக்குத் தேவையில்லாத பொருள்கள் எத்தனை யுள பார்த்தீர்களா?" என்று கேட்பாராம்.

## ஒழுக்கம்

## 94

இரண்டு குற்றவாளிகளைச் சிலுவையில் அறைந்து அவர்களுக்கிடையில் இயேசு கிறிஸ்துவைச் சிலுவையிலறைந்தார்கள்.

அப்போது குற்றவாளிகளில் ஒருவன் இயேசுவைப் பார்த்து "நீர் கிறிஸ்து என்றால் உம்மையும் எங்களையும் காப்பாற்றும்" என்று கேலியாகக் கூறினன்.

ஆனால் மற்றக் குற்றவாளி அவனைக் கண்டித்துச் சொல்வான், "அப்பா! நீ கடவுளுக்கு பயப்படுவதில்லையா? நாமும் அவர் உள்ள நிலைமையில்தானே இருக்கிறோம்? நாம் தீய செயல் செய்து அதற்குத் தக்க தண்டனை பெற்றுளோம், அவரோ எத்தகைய குற்றமும் செய்தவரில்லை."

இவ்வாறு குற்றவாளியிடம் கூறிவிட்டுஅவன் இயேசுவிடம் "குருமூர்த்தியே! தாங்கள் தங்கள் இராச்சியத்தில் பிரவேசிக்கும் போது எங்களையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டுகிறேன்" என்று கூறினன்.

அப்போது இயேசு அவனிடம் "அப்பா! நான் கூறுவது நிச்சயம், இன்று நீயும் என்னோடு தேவலோகத்தில் இருப்பாய்" என்று கூறினர்.

## ஓய்வு

## 95

17-ம் நூற்றுண்டில் பிரான்ஸ் நாட்டில் ஆர்னல்ட் என்று பெயர் பெற்ற மதநூல் ஆசிரியரிருந்தார். அவரை மகா ஆர்னல்ட் என்று பாராட்டுவார்கள்.

அவர் தமது விருத்தாப்பிய காலத்தில் புதிதாக ஒரு சமூகவேலையை ஆரம்பித்து அதற்கு உதவி செய்யுமாறு தமது நண்பரான நிக்கலோ என்பவரைக் கேட்டார்.

அதற்கு நிக்கலோ "என்ன நண்பரே இருவரும் கிழவராகிவிட்டோமே, இப்பொழுதேனும் ஓய்வு கொள்ள வேண்டாமா?" என்று கூறினர்.

அப்போது ஆர்னல்ட் "ஓய்வா? இறந்தபின் நித்திய ஓய்வுதானே?" என்று பதிலளித்தார்.

## ஓவியம்

## 96

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்தில் டர்னர் என்ற பெயருடைய ஒரு பிரசித்தி பெற்ற ஓவியர் இருந்தார். அவரை அறிஞர்கள் உலகத்தில் தோன்றிய இயற்கைக் காட்சிகளை சித்திரிக்கும் தலை சிறந்த ஓவியர்களுள் ஒருவராகக் கொண்டாடுகிறார்கள்.

அவர் வரைந்துள்ள மிகச் சிறந்த ஓவியங்களுள் "அஸ்தமனம்" என்பது ஒன்று. அதைப் பார்த்த சீமாட்டி ஒருத்தி டர்னரைப் பார்த்து "இதை அஸ்தமனம் என்று கூறுகிறீர்கள்? இத்தகைய அஸ்தமனத்தை நான் கண்டதேயில்லை" என்று கூறினாள்.

அதற்கு டர்னர் "இல்லைதான், ஆனால் இத்தகைய அஸ்தமனத்தைப் பார்க்க வேண்டும் என்ற விருப்பம் உண்டாகின்றதல்லவா?" என்று கேட்டார்.

## 97

இங்கிலாந்து நாட்டில் சென்ற நூற்றுண்டி லிருந்த இயற்கைக் காட்சிகளை வரைவதில் உலகப் பிரசித்தி பெற்ற ஓவியர் டர்னர் என்பவர் தம்முடைய கலைக்கூடத் திற்கு வந்து, தாம் கடலில் புயல் வீசுவதைச் சித்திரித்தி ருக்கும் ஓவியத்தைப் பார்ப்பதற்காக பேராசிரியர் சார்லஸ் கிங்ஸ்லி என்பவரை ஒருநாள் அழைத்தார்.

கிங்ஸ்லி அப்படத்தைப் பார்த்ததும் அசையாமல் நின்று விட்டார். அவ்வளவு அழகா யிருந்தது.

"நண்பரே! இதை எப்படித் தீட்டினீர்?" என்று டர்னரிடம் கேட்டார்.

அதற்கு டர்னர் "நான் கடலில் புயல் வீசுவதைச் சித்திரிக்க விரும்பினேன். அதற்காக ஹாலந்து நாடு சென்று புயல் வீசும்போது ஒரு மீன் பிடிப்பவருடன் அவருடைய படகில் சென்றேன். என்னைப் பாய்மரத் தோடு சேர்த்துக் கட்டும்படி சொன்னேன். புயலோடு புயலாக ஆனேன். அதன்பின் வீட்டுக்குத் திரும்பி வந்து இந்தப் படத்தை வரைந்தேன்" என்று பதில் கூறினர்

## 98

புரூலோவ் என்ற சிறந்த ருஷ்ய ஓவியர் தமது மாணவர் ஒருவருடைய ஓவியத்தை எடுத்து அதில் தமது தூரிகையால் ஒன்றிரண்டு கோடுகள் வரைந்தார். அவ்வளவுதான், அதைக் கண்ட மாணவர் "ஆகா, என்னுடைய படம் முழுவதும் மாறிவிட்டது. உயிர் பெற்று விட்டது, ஆனால் தாங்கள் ஒன்றிரண்டு கோடுகள்தானே வரைந்தீர்கள்" என்று கேட்டார்.

"ஆமாம், ஆனால் அதற்குக் காரணம் கலை என்பது அந்தக் கோடுகள் வரைய ஆரம்பித்த போதுதான் ஓவியத்துள் வந்து சேர்ந்ததே யாகும்" என்று புரூலோவ் பதிலளித்தார்.

# கஞ்சத்தனம்

## 99

18-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் பெரிய பிரஞ்சு ஆசிரியராயிருந்த பெனலன் என்பவர் ஒரு நாள் ஒரு தர்ம கைங்கரியத்துக்கு நன்கொடை பெறும் பொருட்டு மந்திரி ரிச்சலோவிடம் சென்றார். ஆனால் பெனலன் எவ்வளவு பேசியும் மந்திரி இம்மியும் தரவில்லை.

பிறகு ஒரு நாள் ஓவியக் காட்சிசாலையில் மந்திரியைச் சந்திக்க நேர்ந்தபோது பெனலன், "அடுத்த அறையில் இப்போதுதான் தங்கள் படத்தைப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்று கூறினார்.

அதற்கு ரிச்சலோ "அதனிடம் நன்கொடை கேட்டீரோ ?" என்று கேட்டார்.

அதற்கு பெனலன் "இல்லை, அதைக்கேட்டுப் பயனில்லை என்று அறிவேன். அது தங்களைப் போலவே இருக்கிறதல்லவா ?" என்று மறுமொழி கூறினார்.

## கடமை

### 100

இருநூறு வருஷங்களுக்கு முன் இங்கிலாந்து சரித்திரத்திலேயே மிகப் புகழ்வாய்ந்த கடற்போர் மத்திய தரைக் கடலில் டிரவால்கர் எனும் இடத்தில் நடந்தது.

அப்போது ஆங்கிலப் படையின் தளபதி நெல்ஸன் என்பவர் எங்கும் புகழ்பெற்ற வீரர். அவர், "ஒவ்வொருவனும் தனது கடமையைச் செய்யவேண்டும் என்று இங்கிலாந்து எதிர்பார்க்கிறது" என்று கூறும் கொடியை உயர்த்திப் பறக்க விட்டார்.

போர்வீரர்கள் குதூகலம் அடைந்தனர், வெற்றியும் பெற்றனர். ஆனல், நெல்ஸன் மரணம் தரக்கூடிய காயமடைந்தார். அப்போது அவர், "இப்போது திருப்தியுற்றேன். என் கடமையை நிறைவேற்றி விட்டதற்காக இறைவனைத் தொழுகின்றேன்" என்று முனகினர்.

"கடவுள்—என் நாடு" என்ற சொற்களுடன் உயிர் துறந்தார்.

### 101

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்து நாட்டின் பேரரசியா யிருந்த விக்டோரியா மகாராணியிடம் ஒரு நாள் அவருடைய மந்திரிகளுள் ஒருவரான மாண்டிகிள் பிரபு என்பவர் அவரிடம் சென்று, "ஒரு காரியமாக வந்தேன், தங்கட்குச் சிரமம் தரவேண்டியிருக்கிறது" என்று வினயமாகக் கூறினர்.

அப்போது அரசியார் "சிரமம் என்னும் சொல்லை ஒரு போதும் என்னிடம் சொல்லாதீர். காரியத்தை எப்படிச் செய்யவேண்டும், எப்படிச் செய்தால் சரியா யிருக்கும் என்பதை மட்டுமே சொல்லும். என்னல் முடியுமானல் அதைச் செய்வேன்" என்று பதிலளித்தார்

## கடவுள்

## 102

சென்ற நூற்றுண்டின் தொடக்கத்தில் ஐரோப்பாவில் மகாவீரன் என்று புகழ்பெற்றவரும், பிரஞ்சுச் சக்கரவர்த்தியாக இருந்தவருமான நெப்போலியன் என்பவர் எகிப்து நாட்டின் மீது படையெடுத்துச் சென்ற போது அவருடன் சென்ற அறிஞர்கள் ஒரு நாள் கடவுள் என்று ஒருவர் உளரா என்னும் பொருள்பற்றி விவாதித்தனர்.

ஒவ்வொருவரும் ஒரு காரணம் கூறிக் கடைசியில் கடவுள் என்று ஒருவர் இல்லை என்ற முடிவுக்கு வந்தனர்.

இதை அறிந்த நெப்போலியன் வானத்தை நோக்கி "ஐயன்மீர்! அதோ அந்த நட்சத்திரங்களை யெல்லாம் படைத்தவர் யார்?" என்று கேட்டார்.

## கடவுள் அருள்

## 103


லூதர்

ஐரோப்பாக் கண்டத்தில் கிறிஸ்தவ மதச் சீர்திருத்தம் என்னும் மகத்தான இயக்கத்தை நிறுவிய ஜெர்மன் பெரியாரான மார்டின் லூதர் வறிஞராகவே யிருந்தார்.

அவருக்குப் பல குழந்தைகள் இருந்தபடியால் அவர் தம்முடைய வருமானத்தைப்பெருக்க வழிதேட வேண்டும் என்று அவருடைய நண்பர்கள் யோசனை கூறினார்கள்.

அப்போது லூதர், "என்னுடைய குழந்தைகளுக்குப் பொருள் வைத்துப்போவது என்னுடைய கடமையாகக் கருதவில்லை. கடவுள் அருளே செல்வத்திலும் உயர்ந்ததாகும்" என்று கூறினர்.

## கபடம்

### 104

ஹெறிபோர்டு நகரப் பாதிரியாரிடம் ஒரு நாள் அவ்வூர் ஜமீன்தாரரான பிரபு, "பாதிரியாரே! நான் கோயிலுக்குப் போவதேயில்லை. அதை நீங்கள் கவனிக்கவில்லையோ?" என்று கேட்டார்.

அதற்குப் பாதிரியார், "ஆமாம், அதை நான் அறிவேன்" என்று கூறினர்.

"அதற்குக் காரணம் அங்கே வேடதாரிகள் அதிகம் என்பதுதான்"

அதைக் கேட்டதும் பாதிரியார் புன்னகை புரிந்துகொண்டு—"ஆனல், அதற்காக நீங்கள் வராமலிருக்க வேண்டாம். அத்தகையோர் இன்னுமொருவர்க்கு அங்கே இடமுண்டு" என்று கூறினர்.

## கணவர்

### 105

எழுபத்தைந்து வருஷங்களுக்கு முன் இங்கிலாந்திலிருந்த மிகச் சிறந்த எழுத்தாளரும் தீர்க்கதரிசி என்று போற்றப்பட்டவருமான கார்லைல் என்பவர் ஜேன் வெல்ஷ் என்னும் அம்மையாரை மணந்திருந்தார்.



கார்லைல்

அவர்கள் மணம் நடைபெறுவதற்குச் சில நாட்களுக்கு முன் அந்த அம்மையார் தமது நண்பர் ஒருவர்க்குக் கீழ்க்கண்டவாறு கார்லைலைப்பற்றி எழுதினர் :—

"கணவரிடம் காணவேண்டிய பண்புகள் அனைத்தும் அவரிடம் உள்ளன. என்னை நேசிப்பதற்கு அன்பு நிரம்பிய நெஞ்சு, என்னைப் பணிப்பதற்கு இணையற்ற அறிவுத் திறமை, என்னுடைய வாழ்வுக்கு ஒளிகாட்டும் விண்மீன் போன்ற ஆன்ம உறுதி."

## 106

**பி**ரான்ஸ் நாட்டில் பதினேழாம் நூற்றுண்டில் வாழ்ந்த ராஸீன் என்பவர் மிகுந்த புகழ் பெற்ற பிரஞ்சு மகா கவி ஆவர். அவர் ஒருநாள் அயலூர் போய்விட்டுத் தம்முடைய இல்லம் வந்து சேர்ந்த சமயத்தில் இளவரசருடைய நண்பர் ஒருவர் வந்து இளவரசர் விருந்துண்ண அழைத்து வருமாறு கூறியதாகச் சொன்னுர்.

அதற்குக் கவிஞர் "இளவரசருடைய அழைப்புக்கு வந்தனம். ஆனல் என்னுடைய மனைவியும் மக்களும் எனக்காகச் சமைத்து வைத்துக் காத்துக்கொண்டிருக்கிருர்கள் அவர்களை விட்டுவிட்டு எப்படி வருவேன்" என்று கூறினர்.

அப்போது வந்தவர் "ஆனல் இளவரசரும் பிரபுக்களும் தங்களை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிருர்களே' என்று சொன்னுர்.

"உண்மைதான், ஆயினும் என்னை மன்னிக்குமாறு வேண்டிக்கொள்வதாகக் கூறுங்கள்" என்று அவர் கூறினர்.

நண்பர் விஷயத்தைக் கூறியபோது இளவரசரும் அவருடைய நண்பர்களும் கவிஞருடைய பேச்சைக் கேட்டு

மகிழ்வதிலும் அவருடைய இல்லற தர்மத்தைக் கேட்டு பெரு மகிழ்ச்சி அடைந்தனர்.

## கருணை

### 107

**நூ**று வருஷங்களுக்கு முன் இங்கிலாந்தில் ரக்பி பாடசாலையின் தலைமையாசிரியராயிருந்த தாமஸ் ஆர்னல்டு என்பவர் சிறந்த கல்வி நிபுணர்களுள் ஒருவர். ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் ஆசிரியராக இருந்தார். இவருடைய மூத்த குமாரரான மாத்தியூ ஆர்னல்டு என்பவர் ஆங்கில மகா கவிகளுள் ஒருவர்.

தாமஸ் ஆர்னல்டு ஒருநாள் புத்தி தீட்சண்யமில்லாத ஒரு பையனுக்குக் கற்பிக்கும்போது அவன் நன்றாய்ப் படிக்கவில்லை என்று கடிந்தார்.

அப்போது அச்சிறுவன் "ஆசிரியர் அவர்களே! ஏன் கோபிக்கின்றீர்கள்? உண்மையாகவே கூறுகின்றேன். நான் முயன்றே படிக்கின்றேன். என்னுடைய முயற்சியில் எள்ளளவும் குறைவு வைக்கவில்லை" என்று கூறினான்.

இந்த நிகழ்ச்சியை ஆர்னல்டு பிற்காலத்தில் தம் முடைய மக்களிடம் சொல்வது வழக்கம். "என் வாழ் நாளில் இத்தகைய உணர்ச்சி மிகுந்த சம்பவம் நடந்ததே யில்லை. அந்தச் சிறுவன் அன்று பார்த்த பார்வையும் உரைத்த சொல்லும் இன்னும் என் இதயம் விட்டு அகல வில்லை" என்று கூறுவார்.

### 108

**ப**தினலாம் நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டை ஆண்ட மூன்றாம் எட்வார்டு மன்னர் பிரஞ்சு நாட்டுடன் நடத்திய போரில் அந்த நாட்டுக் காலே என்னும் நகரை மூன்று வருஷ காலம் முற்றுகையிட்டுக் கடைசியில் கைப்

பற்றியபோது அந்நகர மக்களுள் ஆறுபேர் உயிர் துறக்கச் சித்தமானால் மற்றவர்களைத் தாம் விட்டுவிடுவதாகக் கூறினார்.

அவருடைய நிபந்தனையை ஏற்று ஆறு பேர் தங்கள் கழுத்தில் கயிற்றைச் சுற்றிக் கொண்டு அரசனிடம் வந்து உயிர்ப் பிச்சை இரந்தனர். ஆனால் அரசர் அதற்கு இசையவில்லை.

அப்போது அவருடைய ராணி பிலிப்பா என்பவர் அரசர் முன்னிலையில் முழந்தாளிட்டுப் பணிந்து கண்ணீர் வழிய நின்று "அரசே! நான் இதுவரை தங்களிடம் எதுவும் வேண்டியதில்லை. இப்போது இயேசு கிறிஸ்துவின் பொருட்டு இவர்களிடம் கருணை காட்டும்படி பிரார்த்திக்கின்றேன்" என்று சொன்னார்.

அரசர் சிறிது நேரம் பேசாதிருந்தார். அவருடைய மனம் இளகிற்று. ஆறுபேரையும் விடுதலை செய்தார்.

அரசி அவர்களுக்கு உணவும் உடையும் கொடுத்து அவர்களுடைய நகரத்துக்கு அனுப்பி வைத்தார்.

## 109

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்திலிருந்த புகழ்பெற்ற நாவலாசிரியர்களில் ஒருவரான ஆர்னல்ட் பென்னெட் என்பவரைச் சந்தித்துப் பேச வேண்டுமென்ற ஆசை ஒரு இளைஞருக்கு.



ஆர்னல்ட் பென்னெட்

அந்த இளைஞர் ஒரு நண்பரோடு வீதிவழியே நடந்து போகும்போது ஆர்னல்ட் பென் னெட் வரவே அந்த நண்பர் இளைஞரைப் பரிச்சயம் செய்து வைத்தார்.

ஆனால் அந்த நிமிஷத்தில் ஒரு பாரவண்டிக்காரர் ஒரு வீட்டின் முன் வண்டியை நிறுத்தி அதிலிருந்து ஒரு கனத்த பெட்டியை வீட்டிற்குத் தூக்கிச் செல்வதைக் கண்டார்கள்.

ஆர்னல்ட் பென்னெட் இது சம்பந்தமாக ஏதேனும் ஹாஸ்யமாகவோ அல்லது ஆழ்ந்த கருத்தாகவோ கூறு வார் என்று இளைஞர் எதிர் பார்த்தார்.

ஆனால் ஆர்னல்ட் பென்னெட்டோ வண்டிக்காரர் பாரம் தூக்க முடியாமல் தூக்குவதைக் கண்டு வருந்திக் கொண்டிருந்தார்.

## 110

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் கிரீஸ் நாட்டில் பிறந்தவரும் ஐரோப்பிய நாகரிகத்துக்கு அடிகோலியவர் என்று புகழப் படுபவருமான அரிஸ்டாட்டில் என்னும் பேரறிஞர் தமக்குத் தீமை செய்த ஒருவரிடம் கோபம் கொள்ளாமல் கருணை காட்டினர்.

அதைக் கண்ட அவருடைய நண்பர்களில் ஒருவர் "இவ்வாறு துன்மார்க்கருக்கு இரக்கம் காட்டுவது தவறல்லவா?" என்று கேட்டார்.

அதற்கு அரிஸ்டாட்டில் "அப்படிச் சொல்லாதீர். நான் கருணை காட்டுவது தீமை செய்தவர்க்கேயன்றித் தீய செயலுக்கன்று" என்று பதிலளித்தார்.

## 111

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் வாழ்ந்த சார்லஸ் டார்வின் என்பவரே விஞ்ஞானப் பேருண்மை களுள் ஒன்றாகிய பரிணாமவாதம் என்பதை நிலை நாட்டியவ ராவர்.

அவருடைய மகன் ஒரு நாள் ஏதோ தவருகச் சொன்ஞர். தந்தையார்க்கு மிகுந்த சினமுண்டாயிற்று. கடுமையாகக் கடிந்தார்



டார்வின்

ஆனல் மறுநாள் அதிகாலையில் எழுந்து அவர் மகனுடைய அறைக்குச் சென்று அவருடைய படுக்கை ஓரத்தில் உட்கார்ந்து கொண்டு "அப்பா! நேற்று இரவு உன்னைக் கோபித்து விட்டேன்; இரவு முழுவதும் உறக்கம் வரவில்லை" என்று பல அன்பு மொழிகள் கூறிஞர்.

## 112

18-ம் நூற்றுண்டில் பிரான்ஸ் நாட்டிலிருந்த பேரறிஞர் வால்டேர் என்பவர் ஒருநாள் சரித்திர நூல் ஒன்று படித்துக் கொண்டிருந்தார்.

அப்போது அவருடைய கன்னங்களில் கண்ணீர் வழிந்துகொண்டிருந்தது. அச்சமயம் அங்கு வந்த ஒருவர் கண்ணீருக்குக் காரணம் யாது என்று வினவிஞர்..

"ஐயோ! மக்கள் எத்துணைத் துன்பங்களுக்கு ஆளாகி யிருந்திருக்கின்றனர்! ஆனல் அதற்குக் காரணம்


வால்டேர்

எல்லாம் அவர்கள் கோழைகளாயும் முட்டாள்களாயும் இருந்தமையே" என்று வால்டேர் கூறினார்.

## 113

நானூறு ஆண்டுகளுக்கு முன் இங்கிலாந்து நாட்டில் கத்தோலிக்க மதத்தினர் சீர்திருத்தக் கொள்கையினரைப் பலவிதத்திலும் துன்புறுத்தி வந்தனர். சீர்திருத்தக் கொள்கையினருள் சிறந்தவராயிருந்த ஜாண் பிராட்போர்டு என்பவரைக் கத்தோலிக்கர் தீயிலிட்டுக் கொன்றனர்.

இப்பெரியார் ஒருநாள் சில கைதிகளைத் தூக்கு மேடைக்கு அழைத்துச் செல்வதைப் பார்த்தபோது, "அதோ போகிறான் ஜாண் பிராட்போர்ட், ஆண்டவன் அருளே அவனைக் காப்பாற்றிக்கொண்டிருக்கிறது" என்று கூறினார்.

## 114

## கல்வி

சார்லிமேன் என்பவர் 8-ம் நூற்றாண்டில் பிரான்ஸ் நாட்டை ஆண்ட புகழ்பெற்ற சக்கரவர்த்தி. இவர் பெரிய வீரர். சிறந்த ராஜ தந்திரி. இவர் நல்ல சட்டங்கள் செய்தார். நீதி பரிபாலனத்தைத் திருத்தி அமைத்தார். பாடசாலைகள் நிறுவினார். புலவர்களை ஆதரித்தார்.

ஒரு சமயம் இவரை ஒரு சரித்திராசிரியர் கொலை செய்யச் சதியாலோசனை செய்தார். அமைச்சர்கள் அந்த ஆசிரியரைத் தண்டிக்கும்படி கூறியபோது அரசர் "இவ்வளவு

அழகாய் எழுதும் ஒருவருடைய தலையை எவ்வாறு கொய்வேன் '' என்று கூறினர்.

## 115

பண்டைக் காலத்தில் சைரக்கூஸ் நகரத்தில் டயோனிஸியஸ் என்ற அறிஞர் ஒருவர் இருந்தார்.

அவர் இடைவிடாது பிளேட்டோ என்னும் பேரறிஞருடைய நூல்களைப் படித்துக் கொண்டிருப்பதைக் கண்ட அவருடைய நண்பர் ஒருவர் அவரிடம் ஒருநாள் " தாங்கள் இவ்வாறு படிக்கிறீர்களே, பிளேட்டோவிடமிருந்து பெற்ற நன்மை யர்து?" என்று கேட்டார்.

அதற்கு அறிஞர் "பிளேட்டோவிடமிருந்து எவ்வித நன்மையும் பெறவில்லை என்று கருதுகிறீரா? எத்தகைய இன்னல் வந்தாலும் தளராமல் இருக்கிறேனே, அது போதாதோ?" என்று பதிலளித்தார்.

## 116

சென்ற நூற்றுண்டில் ஸ்விட்ஜர்லாந்து தேசத்தில் பெரும்புகழ் பெற்ற உயிரியற் புலவரான லூயி அகாஸிஸ் என்பவர் ஒருநாள், தம்முடைய மாணவரில் ஒருவரைக் கூப்பிட்டு, அவர் கையில் ஒரு மீனைக் கொடுத்து " அப்பா! இதைக் கொண்டுபோய் நன்ருய்க் கவனி. நான் பிறகு உன்னிடம் என்ன கண்டாய் என்று கேட்பேன் '' என்று கூறினர்.

அந்த மாணவர் மீனைப் பத்து நிமிஷநேரம் உற்றுப் பார்த்தார். காண வேண்டியதெல்லாம் கண்டுவிட்டதாக எண்ணிக்கொண்டு, அது போல் படம் வரையத் தொடங்கினர். அப்போது அவர் முதலில் காணுத சில விஷயங்களைக் கண்டார்.

மாலையில் அகாஸிஸ் வந்தபோது மாணவர் தாம் கண்டவற்றைக் கூறினார். அதற்கு அறிஞர் "அப்பா! அது சரிதான். ஆனால் கண் முன்னாலே தெரிகின்ற ஒரு முக்கியமான விஷயத்தை நீ காணவில்லையே. இன்னும் நன்றாகக் கவனித்துப் பார்" என்று கூறிவிட்டுப் போனார்.

மாணவர் மூன்றுநாள் கவனித்துப் பார்த்த பின்னர் தான் அகாஸிஸ் கேட்ட கேள்விகளுக்குத் தக்க விடை அளிக்கக் கூடியவராயிருந்தார்.

## 117

இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகட்குமுன் சீன நாட்டிலிருந்த உலகப் பிரசித்திபெற்ற கன்பூஷியஸ் என்ற பெரியார் தம்மிடம் அறிவில் ஆசை குறைந்தவரோ அல்லது அறிவு போதுமான அளவு இல்லாதவரோ வந்தால் அவர்க்குக் கற்றுக்கொடுக்க இசைவதில்லை.

"நான் மாணவருக்கு விஷயத்தின் ஒரு மூலையைத் தான் காட்டுவேன். அவன்தான் மற்ற மூன்று மூலைகளையும் கண்டுபிடித்துக் கொள்ளவேண்டும். நான் காட்டமாட்டேன்" என்று கூறுவார்.

## 118

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் கிரீஸ் நாட்டிலுள்ள ஸ்பார்ட்டா என்னும் பகுதியில் ஏஜிசிலாஸ் என்ற பெயருடைய ஒரு புகழ்பெற்ற அரசர் இருந்தார். ஆசியாவிலிருந்து பாரசீக அரசன் கிரீஸ் மீது படையெடுத்து வந்தபோது அவனை அவர் தோல்வியுறச் செய்தார்.

அத்தகைய பெரியாரிடம் ஒருநாள் ஒரு நண்பர் சிறுவர்கள் எத்தகைய கல்வி பெறவேண்டும் என்று

கேட்டபோது ஏஜிசிலாஸ் அரசர் "எந்தக் கல்வியைச் சிறுவர்கள் பெரியவர்களான பிறகு பயன்படுத்த வேண்டுமோ அந்தக் கல்வியை" என்று பதிலளித்தார்.

## 119


அரிஸ்டாட்டில்

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் கிரீஸ் நாட்டில் வாழ்ந்த அரிஸ்டாட்டில் என்பவரே ஐரோப்பிய அறிவியல் துறைகளுக்கு அடிகோலியவர் என்று கூறுவார்கள். விஞ்ஞான உணர்ச்சியின் அவதாரம் என்றும் சொல்லுவார்கள்.

அவரிடம் ஒரு சமயம் அவருடைய மாணவர்களில் ஒருவர் கற்றவர்க்கும் கல்லாதவர்க்குமுள்ள வேறுபாடு எவ்வளவு என்று கேட்டார்.

அதற்கு அரிஸ்டாட்டில் "உயிரோடுள்ளவர்க்கும் உயிரற்ற பிணத்துக்கு முள்ள வேறுபாடே" என்று கூறினர்.

## 120

சென்ற நூற்றுண்டில் அமெரிக்க ஜனதிபதி கார்பீல்டு என்பவர் ஹிராம் கல்லூரியின் தலைவராக இருந்த போது, ஒருவர் தம்முடைய மகனைச் சேர்ப்பதற்காக வந்தார். அவர் தலைவரிடம் "என் மகன் எல்லா மாணவர்களும் படிக்கும் அளவு படிக்க விரும்பவில்லை. சீக்கிரமாக முடிக்கக் கூடியபடி ஏதேனும் செய்ய முடியுமா?" என்று கேட்டார்.

அதற்குத் தலைவர் கார்பீல்டு "ஆம், முடியும். ஆனல் நீர் அவனை என்ன ஆகவேண்டும் என்று விரும்பு

கிறீரோ அதைப் பொறுத்ததாகும். ஒக் மரத்தை உண்டாக்க நூறு வருஷமும் கள்ளிச் செடியை உண்டாக்க இரண்டு மாதமும் ஆகிறது கடவுளுக்கு" என்று பதிலளித்தார்.

## 121

அமெரிக்காவில் பேர்பெற்ற கல்வி நிபுணராயிருந்த பிரான்ஸிஸ் வேலண்ட் பார்க்கர் என்பவர் ஒரு பிரசங்கம் செய்து முடிந்ததும் ஒரு பெண்மணி எழுந்து "என்னுடைய குழந்தைக்கு எந்த வயதிலிருந்து நான் கற்பிக்க ஆரம்பிக்க வேண்டும்?" என்று கேட்டார்.

அதற்கு பார்க்கர் "தங்கட்குக் குழந்தை எப்போது பிறக்கப் போகிறது" என்று கேட்டார்.

"பிறக்கப் போகிறதா, பிறந்து ஐந்து வயதாயிற்றே"

"ஐயோ! அம்மா! இங்கே என்னுடன் பேசிக் கொண்டு நிற்கவேண்டாம். வீட்டுக்கு விரைந்து செல்லுங்கள். இப்போதே ஐந்து ஆண்டுகளை இழந்து விட்டீர்களே" என்று பார்க்கர் கூறினர்.

## 122

இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் எகிப்து நாட்டிலிருந்த அலக்ஸாண்டிரியா நகரத்தில் பிறந்து, ஜியோமிதி என்னும் கணித சாஸ்திரத்தின் தந்தை என்று புகழ் பெற்றுள்ள யூக்கிளிட் என்பவரிடம் ஒருநாள் அந்த நாட்டு அரசர் முதலாம் டாலிமி என்பவர் "ஜியோமிதியைக் கற்றுக் கொள்வதற்குத் தங்கள் நூல் தவிர வேறு சுருக்க வழி இருக்கிறதோ?" என்று கேட்டார்.

அந்தக் கணித சாஸ்திரி "அரசே! ஜியோமிதிக்கு ராஜபாட்டை எதுவும் கிடையாது" என்று பதில் கூறினர்.

## 123

16-ம் நூற்றுண்டில் இங்கிலாந்து நாட்டில் எண்பது நாள் மட்டுமே அரசாண்ட ஜேன் கிரே சீமாட்டி. ஏழாம் ஹென்ரி மன்னருடைய கொள்ளுப் பேத்தி. பதினேழாம் வயதில் ராஜத் துரோகிகளால் தூக்கிலிடப் பட்டார்.

இவர் கிரீக், லத்தீன், மற்ற ஐரோப்பிய மொழிகள் இவற்றில் மிகுந்த பாண்டித்திய முடையவர். ஒருநாள் இவருடைய சிறுவயதில் இவருடைய தாய் தந்தையர் வேட்டையாடி விநோதமாகக் காலங் கழித்துக் கொண்டிருந்தபோது இவர் ஒரு சன்னல் அருகே உட்கார்ந்து, உலகப் பிரசித்திபெற்ற கிரேக்க அறிஞர் பிளேட்டோ என்பவர் தமது குருவாகிய சாக்கரட்டீஸ் மரணத்தைப் பற்றி எழுதியுள்ள நூலைப் படித்துக் கொண்டிருந்தார்.


பிளேட்டோ

அப்போது அங்கு வந்த இவருடைய ஆசிரியர் ரோஜர் ஆஷாம் என்பவர் "என்ன, உன்னுடைய தாய் தந்தையர் சந்தோஷக் குரல் கேட்கிறதே, நீ அங்கு செல்லாமல் இங்கு உட்கார்ந்திருக்கிறுயே" என்று கூறினர்.

அதற்கு அந்த அம்மையார் "நான் பிளேட்டோ வின் நூலில் காணும் இன்பத்தோடு ஒப்பிட்டால் அவர்கள் அங்கே காணும் இன்பம் வெறும் நிழலே" என்று பதிலளித்தார்.

## 124

சென்ற நூற்றுண்டின் தொடக்கத்தில் பிரான்ஸ் தேசத்தில் கீர்த்திபெற்ற சக்கரவர்த்தியாயிருந்த நெப்போலியன் என்பவர் ஒருநாள் காம்பன் அம்மையார் என்பவருடன் பேசிக் கொண்டிருந்தபோது "இதுவரை நடந்துவரும் கல்வி முறை பிரயோசனமில்லை. இளைஞர் தக்கவாறு கல்வி பெற வேண்டுமானுல் தேவையாயுள்ளது எது?" என்று கேட்டார்.

அதற்கு காம்பன் அம்மையார் "தாய்மார்" என்று கூறினர்.

அதைக் கேட்டதும் நெப்போலியன் "கல்வி முறை முழுவதையும் ஒரே மொழியில் கூறிவிட்டீர். அதனுல் குழந்தைகளை எவ்விதம் பயிற்றவேண்டும் என்பதை அறிந்த தாய்மாரைத் தயார் செய்வதே உங்கள் கடன். ஒரு குழந்தையின் வாழ்வை உருவாக்குபவர் அதன் தாயே" என்று கூறினர்.

## 125

இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் கிரீஸ் நாட்டிலிருந்த லாஸிடஸ் என்னும் பெரியார் விருத்தாப்பியம் அடைந்த பிறகு க்ஷேத்திர கணிதம் கற்கத் தொடங்கினர்.

அதைக் கண்ட அவருடைய நண்பர்களில் ஒருவர் "இப்போது கற்கிறீர்களே, கற்பதற்கு இதுவா காலம்?" என்று கேட்டார்.

அதற்கு அந்த அறிஞர் "இப்போதில்லையெனில் எப்போது?" என்று பதிலுரைத்தார்.

## 126

பண்டைக் காலத்தில் கிரீஸ் நாட்டில் ஆண்டிப்பஸ் என்ற பெரிய போதனாசிரியரிருந்தார்.

அவரிடம் ஒருவர் வந்து தம்முடைய மகனுக்குக் கல்வி கற்பிக்க எவ்வளவு பணம் தர வேண்டும் என்று கேட்டார்.

"ஆயிரம்" என்று ஆசிரியர் கூறினார். "ஆயிரமா? அத்தனை பணமா? ஆயிரத்தைக் கொண்டு அடிமை ஒருவனை வாங்கலாமே" என்று தனிகர் கூறினர்.

அதற்கு ஆசிரியர் "அப்படியானால் உம்முடைய மகன், நீர் வாங்கும் அடிமை, ஆக இரண்டு அடிமைகள் பெறுவீர்" என்று பதிலளித்தார்.

## 127

இரண்டாயிரத்து ஐநூறு வருஷங்களுக்கு முன் கிரீஸ் தேசத்திலிருந்த உலகப் பிரசித்தி பெற்ற சாக்கிரட்டீஸ் என்னும் பேரறிஞரை ஒரு நாள் அவருடைய நண்பர் பீட்ரஸ் என்பவர் ஆற்றங்கரையிலிருந்த பெரிய மரத்தடிக்கு அழைத்துக் கொண்டு போய் உட்கார்ந்து கொண்டு லிஸியஸ் என்னும் பெரு நாவலருடைய சொற்பொழிவை வாசித்தார்.


சாக்கரட்டீஸ்

அப்போது சாக்ரட்டீஸ் அவரிடம் "நான் அறிவை விரும்புகிறவன். பட்டினியாயுள்ள மாட்டிடம் புல்லைக் காட்டினால் அது பின்னாலேயே போவதுபோல, யாரேனும் என்னிடம் இதோ ஒரு நல்ல நூல் என்று காட்டினால்

நானும் அவர் பின்னலேயே பேர்வேன்" என்று கூறினர்.

## கலை

### 128

15-ம் நூற்ருண்டில் இத்தாலி நாட்டிலிருந்த உலகப் பிரசித்தி பெற்ற கலைஞர் லியோனர்டோ டா வின்ஸி என்பவர் மிலான் நகரத்திலுள்ள செயிண்ட் தெரீஸா மாதா கோவில் சுவரில் இயேசுகிறிஸ்து சிலுவையில் அறையப்படுவதற்கு முந்தின நாள் தம்முடைய சீடர் களுடன் உணவு உண்ட காட்சி என்னும் "இறுதி இராப் போசனம்" என்ற சித்திரத்தைத் தீட்ட ஏற்றுக்கொண் டிருந்தார்.

அவர் இந்த ஓவியத்தை காலை முதல் மாலை வரை உணவு உண்ணுமல் வரைந்துகொண்டிருப்பார். பிறகு திடீரென்று அந்தப் படத்தைப் பார்த்த வண்ணம் ஒரு மணி நேரமோ இரண்டு மணி நேரமோ அசையாமல் நின்றுவிடுவார். அதன்பின் பல நாட்கள் அதனிடம் செல்லாமலே இருந்துவிடுவார்.

இதைக் கவனித்த மாதா கோவில் குருவானவர் அவரிடம் ஏன் இவ்வாறு காலத்தை வீணுக்குகிறீர் என்று கேட்டார்.

அதற்கு வின்ஸி அறிஞர் "அப்படி எண்ணுதீர்கள். நான் அதிகச் சோம்பலாகவுள்ள பொழுதே அதிகமாக வேலை செய்பவன் என்று அறிந்துகொள்ளுங்கள்" என்று பதிலளித்தார்.

### 129

பதினரும் நூற்ருண்டில் இத்தாலி நாட்டில் வாழ்ந்த மைக்கேல் ஆஞ்சலோ என்பவர் உலகில் தோன்றிய தலை சிறந்த கலைஞர்களுள் ஒருவர்.

அவருக்குப் பதினேழு வயது உள்ளபோதே அவருடைய கலைத் திறமையை வியந்து லொரன்ஸோ டி மெடிஸி என்னும் பிரபு அவரைப் பெரிதும் ஆதரித்து வந்தார்.

மைக்கேல் ஆஞ்சலோ பிற்காலத்தில் மெடிஸியின் சிலை ஒன்று செய்தார். அதைச் செய்யும்போது அதை வந்து பார்த்தவர் ஒருவர் அவர் செய்யும் சிலை மெடிஸி போல் இல்லை என்றும் யாரும் மெடிஸி என்று கூற மாட்டார் என்றும் கூறினர்.

அதற்கு மைக்கேல் ஆஞ்சலோ அவரைப் பார்த்துக் கோபமாக "ஆயிரம் ஆண்டுகள் ஆனபின் அவரைப் போல் இருக்கிறதா இல்லையா என்று யார் கவனிக்கப் போகிறார்கள்?" என்று கூறினர்.

கலைஞனுடைய கடமை கலைப் பொருள் உண்டாக்குவது ஒன்றே. மைக்கேல் ஆஞ்சலோ செய்த மெடிஸி சிலை மெடிஸியினும் உயர்ந்ததாக இருந்து வருகிறது.

## 130

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் பெருங் கீர்த்தி பெற்ற ஓவியராக இருந்த விஸ்லர் என்பவர் மீது நீதி மன்றத்தில் ஒரு வழக்கு நடந்தது.

அப்போது எதிர்க் கட்சி நியாயவாதி விஸ்லரிடம் "தாங்கள் சில நாட்களில் வரைந்து முடித்த படத்துக்கு இவ்வளவு அதிகமான பணம் கேட்பது நியாயமா?" என்று கேட்டார்.

அதற்கு விஸ்லர் "ஆனல் அது வாழ்நாள் முழுவதும் கற்றதின் பயனாக வரைந்ததாகும்" என்று பதிலளித்தார்.

## 131

நானூறு ஆண்டுகட்கு முன் இத்தாலி நாட்டில் வாழ்ந்த உலகப் பிரசித்தி பெற்ற கலைஞரான மைக்கேல் ஆஞ்சலோ என்பவரிடம் ஒரு நாள் அவருடைய நண்பர்களில் ஒருவர் ஆஞ்சலோ கல்யாணம் செய்து தம் பெயரைச் சொல்லக் குழந்தைகள் பெறுதிருப்பது வருத்தமாயிருப்பதாகக் கூறினார்.

அதற்கு ஆஞ்சலோ கூறிய மறுமொழி :—

“ இந்த என்னுடைய கலையே எனக்கு மனைவிக்கு மேலாக இருந்து வருகிறது. இந்த மனைவி எனக்கு எப்போதும் உற்சாகம் ஊட்டி வருகின்றாள். நான் இயற்றிய கலைப் பொருள்கள் எல்லாம் என்னுடைய குழந்தைகள். அவை சிறந்தனவாக யில்லாவிடினும் சிறிது காலத்துக்கேனும் என் பெயரைச் சொல்லவே செய்யும் .”

ஆம், அந்தக் கலைச் செல்வங்கள் அவரை அமரர் ஆக்கியேவிட்டன.

### கலைஞர்

## 132


கதே

சென்ற நூற்றாண்டில் பேர் பெற்ற ஐரோப்பியக் கவிஞராயிருந்த இத்தாலிநாட்டு மான்ஜோனி என்பவரைப்பற்றி ஒரு நாள் கதே என்னும் உலகப் புகழ் வாய்ந்த ஜெர்மன் மகாகவியும் அவருடைய நண்பர் எக்கர்மன் என்பவரும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

மான்ஜோனி எப்போதும் நோயாயிருப்பது குறித்துத் தாம் வருந்துவதாக கதே கூறினார்.

அப்போது எக்கர்மன் "பெரிய மேதைகள், சிறப்பாகப் பெரிய கவிஞர்கள் அநேகமாக பலவீனமாகவே இருக்கிறார்கள்" என்று கூறினார்.

அதற்கு கதே "ஆமாம், அவர்கள் எளிதில் உணர்ச்சி வயப்படுபவர், அதனாலேயே அவர்கள் பெரிய சிருஷ்டிகர்த்தர்களாக விளங்குகிறார்கள். உணர்ச்சி வயப்படும் உடல் எளிதில் ஊனமடைந்துவிடும். இந்தக் காரணத்தால் தான் நம்முடைய ஷில்லரும் எப்போதும் நோயாயிருக்கிறார்" என்று கூறினார்.

## கவலை

## 133

ஆப்பிரகாம் லிங்கன் அமரிக்க ஜனாதிபதியாயிருந்த போது ஒரு நாள் அவரிடம் அவருடைய அரசாங்கக் காரியதரிசி சேயஸ் என்பவர் "ஐயோ! நேற்று ஒரு கடிதம் எழுதவேண்டுமென்றிருந்தேன், மறந்துவிட்டேனே" என்று கூறி வருந்தினார்.



லிங்கன்

அப்போது லிங்கன் "சேயஸ்! எழுதாததற்காக ஒரு பொழுதும் வருந்தற்க. நமக்குக் கவலை தரக்கூடியது எழுதுவதுதான்" என்று கூறினார்.

## கவலையின்மை

## 134

ஒரு சமயம் டாக்டர் ஜான்ஸனிடம் அவருடைய நண்பர் எட்வார்ட்ஸ் "என்ன டாக்டர் ஜான்ஸன்! நீர்

ஒரு தத்துவ சாஸ்திரி. நானும் தத்துவ சாஸ்திரியாக இருக்க முயன்று பார்த்தேன். ஆனல் என்ன காரணம் என்று தெரியவில்லை. எப்போதும் சந்தோஷம் தடுத்துக் கொண்டிருக்கிறது'' என்று கூறினர்.


ஜான்ஸன்

ஒரு சமயம் தாமஸ் ஹார்ட் பென்னுடன் என்னும் அமெரிக்க அறிஞர் சட்ட சபையில் இருந்த பொழுது, அவருடைய வீடு தீப் பற்றி எரிந்துபோயிற்று. அதை அறிந்ததும் அவர் தம் வீட்டுக்கு வந்தபோது அதைப் பார்த்ததும் '' ஆகா! இனிமேல் எளிதாக இறக்கலாம், இதை எல்லாம் விட்டுப்போகிருேமோ என்று ஏங்க வேண்டியதில்லை'' என்று கூறினர்.

## 135

ஆல்பர்ட் எட்வார்ட் விகாம் என்னும் அமெரிக்க ஆசிரியர்க்குத் தெரிந்த ஒரு நீக்ரோக் கிழவர் இருந்தார். அவர் தமது வாழ்க்கையில் பல துன்பங்கள் துய்க்க நேர்ந்திருந்தும் எப்போதும் முகமலர்ந்தவராக இருப்பார். அதனல் ஒரு நாள் ஆசிரியர் விகாம் அவரைப் பார்த்து ''நீர் இவ்வாறு சந்தோஷமாயும் சமாதானமாயும் இருப்பதன் காரணம் யாது?'' என்று கேட்டார்.

அதற்கு நீக்ரோக் கிழவர் ''அதுவா, சொல்லுகிறேன், கேளுங்கள். நடந்தே தீரும் என்பதுடன் நான் ஒத்துழைக்கக் கற்றுக்கொண்டிருக்கிறேன். அதுதான்'' என்று கூறினர்.

## கவனம்

## 136

மிகப் பெரிய விஞ்ஞானிகளில் ஒருவராகிய ஸர் ஐஸக் நியூட்டன் என்பவர் ஒரு நாள் குளிர் மிகுதியாயிருந்தபடியால் தம்முடைய நாற்காலியை குளிர் காயும் அடுப்பருகே இழுத்துப்போட்டு உட்கார்ந்தார்.



நியூட்டன்

அதிக சமீபத்தில் போட்டுவிட்டதால் அவருக்குத் தாங்கமுடியாத சூடு உண்டாயிற்று. அவர் உடனே தம்முடைய பணியாளைக் கூப்பிடுவதற்காக மணியை அடித்தார். அவன் உடனே வராததால் மணியை மறுபடியும் பலமாக அடித்தார்.

பணியாள் ஓடி வந்தான். இதற்குள் சூடு முன்னிலும் அதிகமாக ஆய்விட்டது. அவர் அவனைப் பார்த்து "அடா முட்டாள்! அடுப்பை நகர்த்துடா! நான் எரிந்து போகுமுன் நகர்த்துடா!" என்று கத்தினர்.

அப்போது பணியாள் "எஜமான்! நாற்காலியைத் தள்ளிப் போட்டுக் கொள்ளலாமே" என்று மெதுவாகக் கூறினன்.

"ஆமாம், அதை மறந்துதான் போனேன்" என்று அறிஞர் கூறினர்.

## கவிஞர்

### 137

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் கிரீஸ் நாட்டில் பிரதான நகரமான ஆதன்ஸ் நகரத்தில் வாழ்ந்த ஒரு செல்வந்தர், அறிவு தேடுவதில் ஆசையுள்ளவர், ஞானி சாக்கரட்டீஸின் தோழர்களில் ஒருவர்.

இவர் இளமையில் தமது படிப்பை முடித்த பின்னர் ஒரு நாள் ஒரு பாடசாலை ஆசிரியரிடம் சென்று ஹோமர்என்ற கிரேக்க மகா கவி இயற்றிய நூல் ஒன்று தருமாறு கேட்டார். அவர் தாம் திருத்திவைத்துள்ள ஹோமர் காவியம் தம்மிடமிருப்பதாகச் சொன்னார்.



ஹோமர்

அதைக் கேட்டதும் "நீர் திருத்துவீரா? உமக்கு ஹோமர் நூலைத் திருத்தக்கூடிய திறமை வந்துவிட்டதா? நீர் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கலாமா? பெரியவர்களுக்கல்லவா கற்பிக்கவேண்டும்!" என்று கேலி செய்தார்.

### 138

18-ம் நூற்றுண்டில் ஜெர்மனி தேசத்தில் பெரிய நாடகாசிரியர் என்று புகழ் பெற்ற ஷில்லர் என்பவர் இறந்த தினத்தன்று, அவர் நோயாய்ப் படுத்திருந்த போது அவரைப் பார்ப்பதற்காக வந்த நண்பர்களில் ஒருவர் அவரிடம் "தங்களுக்கு எப்படி இருக்கிறது?" என்று கேட்டார்.

ஷில்லர் அதற்கு "சாந்தமாக, சாந்தமாக" என்று கூறினர்.


ஷில்லர்

அன்று மாலே அவர் தாம் சூரியனை இன்னுமொருமுறை பார்க்க விரும்புவதாகக் கூறினர். சன்னலைத் திறந்தார்கள். அவர் மிகுந்த சந்தோஷத்தோடு அஸ்தமன சூரியனைக் கண்டு ஆனந்தமடைந்தார்.

## கவிதை

## 139

இருநூற்றைம்பது வருடங்களுக்கு முன் இங்கிலாந்து நாட்டில் ஆஸ்தான கவிஞராயிருந்த ஜான் டிரைடன் என்பவர் பல சிறந்த நாடகங்கள், கவிதைகள், கட்டுரைகள் முதலியன எழுதியுள்ளார். உலகப் பிரசித்தி பெற்ற லத்தீன் கவிஞரான வெர்ஜில் என்பவருடைய ஈனியட் என்னும் காவியத்தை ஆங்கிலத்தில் செய்யுளாக மொழி பெயர்த்தார்.

அவர் இயற்றியுள்ள செயின்ட் செஸிலியா என்னும் சான்ருேர் மீது பாடியுள்ள கவிதையைப் படித்த நண்பர் ஒருவர் கவிஞரிடம் "இதுவரை இயற்றப்பட்டுள்ள இத்தகைய கவிதைகளில் இதுவே சிறந்தது" என்று கூறினர்.

அதற்குக் கவிஞர் "இனிமேல் இயற்றப் படப் போகும் கவிதைகளுள்ளும்" என்று கூறினர்.

## 140

இரண்டாயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன் கிரீஸ் தேசத்தில் கீர்த்தியுடன் வாழ்ந்த மினண்டர் என்னும் நகைச்சுவைக் கவிஞர் இயற்றிய பல நூல்களில் இப்பொழுது கிடைப்பவை வெகு சிலவே. இவருடைய நூல்களைப் பயன்படுத்தியே பிற்காலத்தில் ரோமாபுரியிலிருந்த டெரன்ஸ் என்னும் புகழ்பெற்ற லத்தீன் கவிஞர் தம்முடைய நாடகங்களை இயற்றினர் என்று கூறுவர்.

இந்த கிரேக்க கவிஞர் ஒரு சமயம் ஒருவரிடம் தாம் ஓர் இன்ப நாடகம் இயற்றித் தருவதாக ஏற்றுக் கொண்டிருந்தார்.

ஆனல் குறித்த காலம் நெருங்கியும் அவர் இயற்றத் தொடங்கவில்லை என்பதை அறிந்து ஏன் என்று கேட்ட போது அவர் "எல்லாம் இயற்றியாய் விட்டது. தயாராக இருக்கிறது. செய்யுட்களைத் தவிர ஏனைய எல்லாம்" என்று பதிலளித்தார்.

## 141

பண்டைக் காலத்தில் பாஸிடன் என்னும் கிரேக்க வருண பகவானுக்கு ஆண்டுதோறும் நடைபெறும் விழாச் சமயத்தில் கோரிந்த் பூசந்தியில் போட்டிப் பந்தய விளையாட்டுக்கள் நிகழ்வதுண்டு.

ஒரு வருஷத்தில், அந்த விளையாட்டுக்களில் வெற்றி பெற்ற பித்தியஸ் என்பவர் பிண்டார் என்னும் கவிஞரிடம் சென்று தம்முடைய வெற்றியைப் புகழ்ந்து ஒரு பாடல் பாடித் தருமாறு கேட்டார்.

அதற்குக் கவிஞர் இருநூறு பவுன் பெறுமான தங்க நாணயம் தரவேண்டும் என்று கேட்டார்.

"அவ்வளவு பணமா? அப்படியானல் அதைக் கொண்டு நான் கோவிலில் என்னுடைய வெண்கலச் சிலை ஒன்று

வைத்து விடலாமே?'' என்று பித்தியஸ் கூறினர். ஆமாம், அப்படியே செய்யும் என்று கவிஞர் கூறினர்.

ஆனால் பித்தியஸ் சிறிது நேரம் சிந்தித்தபின் கவிஞர் கேட்ட பணத்தைத் தருவதாக ஒப்புக்கொண்டார்.

கவிஞர் பாடல் இன்றுவரை அழியாமல் இருந்து கொண்டிருக்கிறது.

## 142

ஆயிரம் ஆண்டுகட்கு முன் ஸ்காட்லாந்து நாட்டில் இராணியாயிருந்த மார்கரட் அம்மையார் சிறந்த பண்பும் மிகுந்த பக்தியும் உடையவர். அவற்றின் மூலம் தம்முடைய நாட்டு மக்களை நன்னெறி ஒழுகும்படி செய்தவர்.

ஒரு நாள் அலெய்ன் என்னும் கவிஞர் அரசியைப் பார்ப்பதற்காக வந்தவர் பார்ப்பதற்கு முன் அரண்மனை யில் ஒரு பக்கத்தில் படுத்துத் தூங்கிவிட்டார்.

அரசி அந்தப் பக்கம் வர நேர்ந்தது. அவர் கவி ஞரைக் கண்டதும் அருகில் சென்று முத்தமிட்டார்.

''நான் முத்தமிட்டது மனிதனையன்று, அழகான கவி கள் சொன்ன வாயையே'' என்று தம்முடன் வந்த தோழி களிடம் கூறினர்.

## 143

இரண்டாயிரத்து நூறு வருடங்கட்கு முன் கிரீஸ் தேசத்தில் யுரிப்பிடீஸ் என்ற பெயருடைய மிகக் கீர்த்திபெற்ற நாடகாசிரியர் இருந்தார். அவர் எழுதிய 80 நாடகங்களுள் இப்போது கிடைப்பவை பதினெட்டு. சிறந்த நாடகங்கள் இயற்றியவர் என்பதற்காக நிறையப் பரிசுபெற்றவர்.



யுரிப்பிடீஸ்

அவருடைய நாடகங்களைப் படித்த பாதிரியார் பிலமன் என்னும் பெரியார் "இறந்த பின்பும் உணர்வு இருக்குமானால், யுரிப்பிடீஸ் கவிஞரைக் காண்பதற்காகத் தற்கொலை செய்துகொள்ளத் தயாராயிருக்கிறேன்" என்று சொன்னார்.

## 144

15-ம் நூற்றாண்டில் பிரான்ஸ் தேசத்தில் பிராங்காய் வில்லன் என்ற பெயருடைய ஒரு சிறந்த கவிஞர் இருந்தார். அவர் தவறான நடத்தையுடையவர். அதனால் அவர் பல முறை பாரிஸ் நகரத்தை விட்டு ஓட வேண்டிய தாயிருந்தது. ஆயினும் கடைசியில் அகப்பட்டுக் கொண்டு மரண தண்டனை விதிக்கப்பெற்றார்.

ஆனால் பதினெட்டாம் லூயி அரசர் "இந்தக் கவிஞரை நான் தூக்கிலிட முடியுமா? இவரைப் போன்ற பெரிய போக்கிரிகள் நூறுயிரம் பேர் உள்ளனர். ஆனால் இவரைப் போன்ற சிறந்த கவிஞரோ ஒருவர் கூட இல்லை" என்று கூறி விடுதலை செய்தார்.

இந்த விதமாக விடுதலை பெற்ற குற்றவாளியே இப்போது பிரான்ஸில் பிறந்த மகா கவிஞர்களுள் ஒருவர் எனப் போற்றப்படுகிறார்.

## 145

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் மிகக் கீர்த்தி பெற்ற பேரறிஞராயிருந்த காரலைல் என்பவர் சிறந்த இலக்கிய நூல்கள் பல இயற்றியுள்ளார்.

அவர் ஒரு சமயம் இலக்கியச் செல்வத்தின் சிறப்பைப் பற்றிக் கூற நேர்ந்தபோது கீழ்க்கண்டவாறு றினர் —

"என்னிடம் யாராவது வந்து நீ எதை இழக்க இசைகிறாய்? இந்திய சாம்ராச்சியத்தையா, அல்லது ஷேக்ஸ்பியரையா என்று கேட்டால், இந்திய சாம்ராச்சியம் இருந்தாலும் இருக்காவிட்டாலும் நாம் ஷேக்ஸ்பியர் இல்லாமல் இருக்க முடியாது. இந்திய சாம்ராச்சியம் என்றேனும் ஒரு நாள் போய்விடவே செய்யும். ஆனால் ஷேக்ஸ்பியரோ ஒருநாளும் போகார். எப்போதும் நம்மோடு இருப்பார். நம்முடைய ஷேக்ஸ்பியரை நாம் ஒரு நாளும் இழந்துவிடச் சம்மதியோம்."


ஷேக்ஸ்பியர்

## 146

சென்ற நூற்றுண்டில் ஜெர்மனியிலிருந்த மகாப் பெரிய கவிஞரான கதே இயற்றிய 'மன்மதன்' என்னும் பாடலைப்பற்றி அவருடைய நண்பர் எக்கர்மன் கதேயிடம் "அந்தப் பாடலை யார் பாடினாலும் உடனே கனவு காணும் மனோநிலை உண்டாகிறது" என்று கூறினர்.

அதற்கு கதே "அத்தகைய மனோநிலையிலிருந்துதான் அது பிறந்தது. அதனால் அது அந்த மனோநிலையை உண்டாக்குவது சரிதான்" என்று கூறினர்.

## கவிதை

## 147

முன்னூறு வருஷங்கட்கு முன் பிரான்ஸ் தேசத்தில் வாழ்ந்த மோலியர் என்பவரே தலை சிறந்த பிரஞ்சு இன்பியல் நாடகாசிரியர். அவருடைய நாடகங்களை ஆண்டு தோறும் படித்துப் பயனடைந்ததாக உலகப் பிரசித்தி பெற்ற ஜெர்மன் மகாகவி கதே கூறுவதுண்டு.

மோலியர் இறந்த சமயத்தில் ஒரு கவிஞர் காண்டி இளவரசரிடம் வந்து மோலியர் மீது சரமகவி பாடிக் கொண்டு வந்திருப்பதாகக் கூறினர்.

அதைக் கேட்டதும் இளவரசர் "உம்மீது சரமகவி மோலியர் பாடிவரும்படி கடவுள் அருள் செய்யலாகாதா?" என்று கூறிக் கண்ணீர் சொரிந்தார்.

## 148

மூன்றுறு ஆண்டுகட்கு முன் பிரான்ஸ் தேசத்தில் பாய்லோ என்ற கவிஞர் இருந்தார். அவரே பிரஞ்சுக் கவிதை முறையைச் சீர்திருத்தம் செய்து அமைத்தவர். தலை சிறந்த இலக்கியச் சுவை அறிஞர் என்று போற்றப் பட்டவர்.

அவரிடம் ஒரு பிரபு வந்து சார்லிவால் என்பவர் இயற்றிய பாடல் ஒன்றைக் காட்டினர். பாய்லோ படித்துப் பார்த்து விட்டு நன்றாயில்லை என்று கூறினர்

அந்தப் பிரபு பாடலை அரசரிடமும், அரசியிடமும் காட்டியதாகவும் அவர்கள் மெச்சியதாகவும் கூறினர்.

அதற்கு பாய்லோ "அரசர் போர் செய்வதில் திறமையுடையவர். அரசி இசை முதலிய கலைகளில் வல்லவர். ஆனல் கவிதையைப்பற்றி நானே அவர்களை விட நன்கு அறிந்தவன்" என்றார்.

பிரபு இதை அரசரிடம் கூறி "ஐயையோ! இந்த ஆணவத்தைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்?" என்று சொன்னர்.

அதற்கு அரசர் "அப்பா! பாய்லோ கூறியது தான் சரி என்று நினைக்கிறேன்" என்று பதிலளித்தார்.

## 149

பண்டைக் காலத்தில் கிரீஸ் தேசத்திலிருந்த மகா அலக்ஸாண்டர் என்னும் சக்ரவர்த்தி பாரசீக மன்னன் மூன்றாம் டரயஸ் என்பவரைத் தோல்வியுறச் செய்த போது, அலக்ஸாண்டருடைய தளபதிகள் டரயஸிடமிருந்து கைப்பற்றிய விலையுயர்ந்த பொருள்களைக் கொண்டு வந்து அலக்ஸாண்டர் முன் வைத்தனர்.

அவற்றில் ஒன்று விலை மதிக்க முடியாத அழகிய அலங்காரமான கைப் பெட்டியாகும். அதைக் கண்டதும் அலக்ஸாண்டர், "இதில் ஹோமர் காவியங்களை வைத்துக் கொள்வேன், ஹோமரே எனக்கு யுத்த விஷயங்களில் சிறந்த யோசனைகள் கூறும் மந்திரி யாவர்" என்று கூறினார்.

ஹோமரே கிரேக்க மகா கவிகளில் தலை சிறந்தவர்.

## 150

இரண்டாயிரத்து ஐநூறு வருஷங்களுக்கு முன் சைரக்கூஸில் அரசனாயிருந்த டையோனிஸியஸ் என்பவர் தம்முடைய கவிதையை பிலோசேனஸ் என்னும் அறிஞர் மெச்சவில்லை என்பதற்காக அவரைச் சிறையிலிட்டார்.

ஆயினும் அரசர் மீண்டும் கவிதை இயற்றிய பொழுது அதை அந்த அறிஞரிடம் காட்டி அவருடைய பாராட்டைப் பெற விரும்பினார்.

அரசர் தம்முடைய கவிதையைப் படித்து முடித்ததும் அறிஞர் முகத்தைப் பார்த்தார், இந்தப் பாட்டை நிச்சயமாகப் பாராட்டுவார் என்று எண்ணினார்.

ஆனால் அறிஞர் அருகில் நின்ற காவலாளிகளைப்

பார்த்து, "என்னை மீண்டும் சிறைக் கூடத்திற்குக் கொண்டுபோங்கள்" என்று கூறினர்.

இந்த முறை அரசர் அறிஞரிடம் கோபம் கொள்ளாமல் சிரித்துக்கொண்டு உண்மையை ஒளியாது உரைக்கும் அவருடைய பண்பை மெச்சி அவரைப் பாராட்டினர்.

## காதல்

### 151

ஆங்கிலப் பேரறிஞர் டாக்டர் ஜான்ஸன் போர்ட்டர் அம்மையாரைக் காதலித்த பொழுது அவரிடம் தம்முடைய சிறிய தந்தையொருவர் தூக்கிலிடப்பட்டதால் தம்முடைய குடும்பம் மாசுடையதே என்று கூறினர்.


ஜான்ஸன்

அப்போது போர்ட்டர் அம்மையார் ஜான்ஸனுக்கு ஆறுதல் அளிக்க எண்ணித் தம்முடைய குடும்பத்தில் யாரும் தூக்கிலிடப்படாவிட்டாலும் தூக்கிலிடப்படத் தக்கவர் ஐம்பது பேருக்குக் குறையார் என்றுகூறினர்.

### 152

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்தில் நடைபெற்ற ஒரு விருந்துக் கூட்டத்தில், "இந்த உலகத்தில் எல்லாவற்றிலும் எழில் உள்ள பொருள் ஒன்று அறிவேன்" என்று திடீரென்று ஒருகுரல் எழுந்தது.

கூட்டத்தினர் அனைவரும் அதைக் கேட்டதும் திடுக்கிட்டுப் போயினர், மௌனம் நிலவியது. சொல்பவர் யார், எதைப்பற்றிச் சொல்லுகிருர் என்று அறிய ஆவல் கொண்டனர்.

"என்னுடைய மனைவியின் கண்கள்" என்று அதே குரல் கூறிற்று. எல்லோரும் அந்த அம்மையாரை நோக்கினர். அவருடைய உள்ளத்தில் நாணமும் இன்பமும் ஒருங்கே நிகழ்ந்தன.

அவ்வாறு கூறியவர் சார்ல்ஸ் கிங்ஸ்லி என்னும் ஆசிரியர். அவர் பல நாவல்கள் எழுதியவர். பாதிரியார் வேலை பார்த்தவர். பல பாடல்கள் பாடியவர்.

## காலந்தவறுமை

## 153

**18-ம்** நூற்றுண்டில் அமெரிக்கக் குடியரசை நிறுவியவர்களுள் ஒருவரும் முதல் ஜனதிபதியாக இருந்தவருமான ஜார்ஜ் வாஷிங்டன் என்னும் பெரியார் ஒரு நாள் தம்முடைய காரியதரிசி நேரம் கழித்து வந்தபொழுது அதன் காரணம் யாதென்று வினவினர்.



வாஷிங்டன்

காரியதரிசி தமது கைக்கடிகாரமே காரணமென்று கூறி மன்னிக்குமாறு வேண்டிக்கொண்டார். அப்பொழுது வாஷிங்டன், "அப்படியானல் நீர் வேறு கடிகாரம் வாங்கிக்கொள்ள வேண்டும், அல்லது நான் வேறு காரியதரிசி அமர்த்திக் கொள்ளவேண்டும்" என்று சாந்தமாகக் கூறினர்.

## காலம்

## 154

இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் சைரக்கூஸ் நகரத்தின் தலைவராயிருந்த டயோனிசியஸ் என்பவர் கவிஞராகவும் தத்துவ சாஸ்திரியாகவுமிருந்தார்.

ஒரு நாள் அவரைப் பார்ப்பதற்காக ஒரு நண்பர் வந்தார். "தாங்கள் சாவகாசமாகத்தானே இருக்கிறீர்கள்?" என்று வந்தவர் கேட்டார்.

"அந்த துர்அதிர்ஷ்டம் நேராதபடி ஆண்டவன் காப்பாராக!" என்று டயோனிசியஸ் பதிலளித்தார்.

## குடும்பம்

### 155



லிங்கன்

ஒரு சமயம் அமெரிக்க ஜனாதிபதி ஆப்பிரகாம்லிங்கன் தம்முடையகுடும்பப் பரம்பரையைப் பற்றிய பேச்சு எழுந்தபோது "என்னுடைய பாட்டனார் யார் என்பதை நான் அறியேன். ஆனால் நான் கவலைப்படுவதெல்லாம் அவருடைய பேரன் எத்தகையவனாக இருக்கவேண்டும் என்பது பற்றியே" என்று கூறினார்.

## குழந்தைகள்

### 156

இரண்டாயிரத்து இருநூறு ஆண்டுகட்கு முன மகா அலெக்ஸாண்டர் என்னும் மாஸிடோனிய அரசர் இந்தியா மீது படையெடுத்துச் சென்றிருந்தபோது ஆன்டிபேட்டர் என்னும் அவருடைய தளபதி நாட்டை அரசாண்டார்.

அவர் ஆதன்ஸ் நகரத்தின் மீது படையெடுத்துக் கைப்பற்றியபோது ஆதன்ஸ் மக்கள் ஐம்பது குழந்தைகளை அடைக்கலமாகத் தந்தால் அந்த நகரை நாசம் செய்வதில்லை என்று கூறினர்.

அப்போது ஆதன்ஸ் மக்கள் ஐம்பது குழந்தைகளுக்குப் பதிலாக நூறு மனிதர்களைத் தருவதாகக் கூறினர்கள். குழந்தைகளே நாட்டின் உண்மையான செல்வம் என்பது அவர்கள் கருத்து.

## 157

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்து தேசத்தில் ஒரு நாள் ஒரு வயதான கிழவர் தம்முடைய படிப்பறையில் உட்கார்ந்து மிகுந்த கவனத்தோடு ஆராய்ந்து கொண்டிருந்தார்.


டார்வின்

அவர் அந்த அறையிலிருக்கும்போது யாரும் அங்குவந்து இடையூறு செய்யக்கூடாதென்பது அந்த வீட்டார் அனுஷ்டிக்கும் விதி.

ஆனால் அன்று நாலு வயதுச் சிறுவன் ஒருவன் அவ்வறைக்கதவைத் திறந்து கொண்டு "அப்பா! வெளியேவந்து விளையாடினால் இந்தக் காசைத் தருவேன்" என்று கூறினான்.

அந்த அறிஞர் உடனே எழுந்து சப்தம் செய்யாமல் மெதுவாக வெளியே போய் அச்சிறுவனுடன் விளையாடினார்.

அவர் உலகத்தில் இதுவரை தோன்றிய மிகச் சிறந்த சிந்தனையாளரில் ஒருவரான சார்லஸ் டார்வின் என்பவர்.

# குறளை

## 158

சென்ற நூற்றாண்டில் ஒரு நாள் பிரான்ஸ் தேசத்தின் கலைக்கழகம் என்பதன் காரியதரிசி வில்லிமென் என்பவர் நூல் நிலைய மண்டபத்தில் மூன்றும் நெப்போலிய அரசரைப் பற்றி இழிவாகப் பேசினார்.

அங்கிருந்த லெவாரியர் என்பவர் அரசர் சார்பிலுள்ளவர். அவர் உடனே எழுந்து "இவ்விதமாக அரசரைப் பற்றிப் பேச எவ்வாறு துணிந்தீர்?" என்று கோபமாகக் கேட்டார்.

வில்லிமென் முகமலர்ச்சியுடன் நிமிர்ந்து பார்த்துக் கொண்டு "அப்பா! நீவிர் யார்?" என்று கேட்டார்.

"என்னை நீங்கள் அறிவீர்கள்"

"உம்முடைய முகம் பார்த்தமாதிரி இருக்கிறது, ஆனால் உம்முடைய பெயர் ஞாபகமில்லை"

"என்னுடைய பெயர் லெவாரியர்"

"ஓகோ, லெவாரியரா? வானசாஸ்திரி லெவாரியரா? சரி, லாப்லேஸ் என்பவர் என் நண்பர். அவரும் வான சாஸ்திரிதான். அவர் ஒரு கனவான்"

அதற்கு லெவாரியர் "அய்யா! விளையாட்டு பேசினது போதும். இந்த விதமாகப் பேசிக்கொண்டுபோனால் உம்முடைய சொற்களை எங்கு சொல்லவேண்டுமோ அங்கு சொல்லிவிடுவேன்" என்று கூறினார்.

அதைக் கேட்டதும் வில்லிமன் புன்னகை புரிந்து கொண்டு "அது சரிதான். பிழைக்கும் வழி ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதம்" என்று கூறினார்.


வால்டேர்

## கோவில்

### 159

பதினெட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்த மிகச் சிறந்தபிரெஞ்சு ஆசிரியரான வால்டேர் என்பவர் மூடப் பழக்க வழக்கங்களை ஒழிக்க அரும்பாடு பட்டவர். சிறந்த நாடகங்களும் கட்டுரைகளும் எழுதியுள்ளார்.

அவரை நிரீஸ்வரவாதி என்றுகூறுவர். ஆனல் அவரோ ஒருகோவில் கட்டி அதில் "கடவுளுக்கு வால்டேர் அர்ப்பணம்" என்று எழுதி வைத்தார்.

"மற்றக் கோவில்கள் எல்லாம் கடவுளுக்கு அர்ப்பணம் செய்யப்பெருமல் பக்தர்கட்கே அர்ப்பணம் செய்யப்படுகின்றன. ஆனல் நான் சேவகர்க்குப் பணி செய்ய விரும்பவில்லை. தலைவர்க்கே வேலை செய்ய விரும்புகிறேன்' என்று கூறினர்.

## கோழைத்தனம்

### 160

முதல் உலக யுத்த சமயத்தில் பிரான்ஸ் நாட்டில் ஒரு போர் வீரன் அவன் முதன்முதல் சென்ற போர்க்களத்தில் அச்சம் காட்டினன் என்று கூறி அவனை அவனுடைய பட்டாளத்தின் தலைவன் தண்டித்தான்.

அதை அறிந்ததும் சேனதிபதி போர்ஷ் என்பவர் பட்டாளத் தலைவனைக் கூப்பிட்டனுப்பி அவனிடம்"அப்பா! ஒருநாளும் அச்சத்தை அறியேன் என்று கோழையைத் தவிர வேறு யாரும் பெருமை பேசமாட்டான்" என்று கூறினர்.

## 161

பண்டைக்காலத்தில் ரோமானியச் சக்கரவர்த்தியா யிருந்த ஸீஸர் என்பவரிடம் அவருடைய நண்பர்கள் வந்து இனிமேல் ஆயுதம் தரியாமலும் பாதுகாவலாளரில்லா மலும் வெளியே போகலாகாது என்று வேண்டிக்கொண் டனர்.

அப்போது ஸீஸர் "மரணத்துக்கு அஞ்சுகிறவன் ஒவ் வொரு விநாடியும் அதன் சித்திரவதைக்கு உள்ளாவான் நான் ஒரு முறை மட்டுமே இறக்க விரும்புகிறேன்" என்று பதிலளித்தார்.

அனுமதி பெறாமல் வேலைக்கு வாராமலிருக்கும் போர் வீரர்களிடம் அமெரிக்க ஜனாதிபதி ஆப்பிரகாம் லிங்கன் தாட்சண்யம் காட்டுவது தளபதிகளுக்கு வருத்தமா யிருந்தது.

அதை அறிந்தபோது லிங்கன் அவர்களிடம் "நம் பெருமான் கோழைகளுக்கு ஓடத்தக்க கால்களை அருளி யிருந்தால் நாம் அந்தக் கால்களை ஓடாதபடி தடுக்க முடியாது" என்று கூறுவார்.

# பெருந்தகைமை

## 162

சென்ற நூற்றாண்டில் அமெரிக்க ஜனாதிபதி ஆப்பிர காம் லிங்கன் அடிமை முறையை ஒழிக்க முயன்றுகொண் டிருந்தபோது அதற்கு விரோதமாயிருந்தவர்களைப் பற்றி, ஒரு நாள் அவர் சில நல்ல வார்த்தைகள் சொல்ல நேர்ந்தது.

அப்போது அதைக் கேட்டுக் கொண்டிருந்தவர் ஒருவர் "அவர்களை இவ்வாறு கூறலாமா? அழிக்க வல்லவோ செய்யவேண்டும்?" என்று கேட்டார்

அதற்கு லிங்கன்—"ஆமாம், ஆனால் நான் அவர்களை நண்பர்களாக ஆக்கும்போது அவர்களுடைய பகைமையை அழித்து விடுகின்றேன் அல்லவா?" என்று சொன்னார்.

## 163

இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் ரோமாபுரியிலிருந்த மிகச் சிறந்த போர் வீரர்களில் எமிலியஸ் என்பவர் ஒருவர். அவர் பல போர்களில் வெற்றி பெற்றுத் தந்த போதிலும் மிகவும் தரித்திரராகவே இறந்தார். பணம் தேடுவதில் சிறிதும் ஆசையில்லாதவர்.

அவர் மாஸிடான் மன்னன் பெர்ஸியஸ் என்பவரைத் தோற்கடித்தபோது அவரிடம் பெர்ஸியஸைக் கூட்டிக் கொண்டு வந்தார்கள். தோல்வியுற்றாலும் அரசனல்லவா என்று எண்ணி எமிலியஸ் மிகுந்த இரக்கத்துடன் அவரை வரவேற்பதற்காக எழுந்து சென்றார்.

ஆனால் பெர்ஸியஸோ எமிலியஸின் காலில் விழுந்து அழுது உயிர்ப்பிச்சை தருமாறு இரந்தார். அது எமிலியஸுக்கு மிகுந்த வேதனையாக இருந்தது.

"கதி கெட்ட மனிதா! இந்தத் துக்க நிலைமைக்குத் தக்கவனாக ஆக்கிக்கொள்கிறாயே ஏன்? ரோமானியருக்கு ஏற்ற பகைவனில்லை என்று காட்டி என்னுடைய வெற்றியை இழிந்ததாக ஆக்கிவிட்டாயே. தோற்றாலும் தைரியவான் பகைவர்களின் மதிப்பைப் பெறுவான். ஆனால் குபேரசம்பத்துடையதாயினும் கோழைத்தனத்தை ரோமானியர் இகழவே செய்வர்" என்று கூறினார்.

## கௌரவம்

## 164

கி. பி. முதல் நூற்றாண்டில் ரோமாபுரியில் அரசாண்ட ஜூலியஸ் சீஸரே ரோமானியச் சக்கரவர்த்திகளில் தலை

சிறந்தவர். மக்கள் எல்லோரும் அவரைத் தெய்வம்போல் கொண்டாடி வந்தார்கள்.

ஒருசமயம் ஆண்டனி என்னும் ரோமானியப் பிரபு சீஸரிடம் பகைமை கொண்டு அவரை துவந்த யுத்தம் செய்ய வருமாறு அழைப்பதாகச் சொல்லி அனுப்பினர்.

அப்போது சீஸர் வந்தவரிடம் "ஆண்டனிக்கு வாழ்வில்வெறுப்பு உண்டாகியிருக்குமானல் எமலோகம் செல்ல என்னுடைய வாளின் மூனேதான் வேண்டுமென்பதில்லே, வேறு வழிகளுமுண்டு என்று சொல்லும்" எனக் கூறி அனுப்பினர்.

## 165

பதினெட்டாம் நூற்ருண்டின் இறுதியில் ஆஸ்திரியாவிலிருந்த இரண்டாம் ஜோசப் சக்கரவர்த்தி தம்மைப் பிறர் அளவுக்கு அதிகமாக கௌரவிப்பதை விரும்பாதவராக இருந்தார்.

"உண்மையை உரையுங்கள், அதுவே நான் தேடுவது; தைரியமாகப் பேசுங்கள். அதுவே நான் விரும்புவது" என்று கூறுவார்.

அவர் ஒழுங்காகக் கோவிலுக்குச் செல்லுவார். அங்கே தேவபோசனம் என்னும் மதச்சடங்கு நடக்கும் போது அவருக்கு மதுவை வெள்ளிக் கோப்பையில்கொண்டு வந்தால், "அது வேண்டாம். எல்லோரும் குடிக்கும் பீங்கான் கோப்பையிலேயே குடிப்பேன்" என்று கூறுவார்.

"கடவுள் சந்நிதானத்தில் எல்லோரும் சமமல்லவா? அவருடைய முன்னிலேயில் கௌரவிக்க விரும்பினல் அந்தஸ்தை கௌரவிக்காமல் அறத்தையல்லவோ கௌரவிக்க வேண்டும்? அரசர்கள் எப்போதும் அவ்வாறு கௌரவிப்பதற்கேற்ற அறம் உடையவர்கள்தானே?" என்று கூறுவார்.

## 166

பிரான்ஸ் நாட்டில் புதிய அரசர் அரியாசனம் ஏறியதும் ஆர்லியன்ஸ் நகரசபையின் பிரதிநிதிகள் இருவர் வந்து அரசரை வாழ்த்துவது தொன்றுதொட்டு நடந்துவரும் வழக்கமாயிருந்தது. அவ்வாறு அவர்கள் பாராட்டும் போது நாற்காலியில் உட்கார்ந்துகொண்டே பாராட்டுவது வழக்கம்.

ஆனால் அரசன் முன்னிலையில் பிரஜைகள் உட்காருவது அரசருடைய கௌரவத்துக்கு இழுக்காகும் என்று நாலாம் ஹென்றி மன்னர் நினைத்தார்.

ஆதலால் அவர் சிம்மாசனம் ஏறியபோது ஆர்லியன்ஸ் நகரத்திலிருந்து வரும் பிரதிநிதிகள் உட்காருவதற்கு நாற்காலிகள் இடவேண்டாம் என்று கட்டளையிட்டார்.

ஆனால் ஆர்லியன்ஸ் நகரப் பிரதிநிதிகள் நாற்காலிகள் இடவில்லை என்பதைக் கண்டார்கள். வழக்கத்துக்கு விரோதமாக நடக்கலாகாது என்று எண்ணி அவர்கள் இருவரும் தரையில் உட்கார்ந்துகொண்டு அரசரை வாழ்த்தினார்கள்.

அரசர் இதைக் கண்டதும் ஆச்சரியமடைந்தார். ஆயினும் அவர் "ஆகா! இவர்கள் கடவுள் தரும் இருக்கையில் உட்கார்ந்துகொண்டார்கள். அதை நான் நீக்க முடியாது" என்று கூறினார்.

## 167

பதினேழாம் நூற்றுண்டில் பிரான்ஸ் நாட்டிலிருந்த பெனலன் என்னும் தலைமைப் பாதிரியார் மிகச் சிறந்த எழுத்தாளர்களில் ஒருவர். மக்களால் பெரிதும் போற்றப் பட்டவர். மக்களுக்குச் சேவை செய்வதில் மகிழ்ச்சி கொள்பவர்.

ஒருநாள் அவர் இரண்டு ஜெர்மன் பிரபுக்களைத் தம்முடன் உண்ண வருமாறு அழைத்திருந்தார். அவர்கள் வந்தபின் பாதிரியார்க்கு மரியாதை செய்வதற்காக அந்த இரண்டு ஜெர்மானியரும் தங்கள் நாட்டு வழக்கத்தை அனுசரித்து எழுந்து நின்று மதுவை அருந்தினார்கள்.

அப்போது பாதிரியாருடன் உண்ண வந்திருந்த பிரஞ்சு உத்தியோகஸ்தர்கள் ஜெர்மானியர் எழுந்து நின்று அருந்துவதைக் கண்டு நகைத்தனர்.

ஆனால் பாதிரியாரோ தாமும் எழுந்து நின்றே மதுவை அருந்தினர். அதைக் கண்டு பிரஞ்சு உத்தியோகஸ்தாகள் நாணம் அடைந்தனர். பாதிரியார் மரியாதை செய்யும் பாண்மையைப் போற்றினர்.

## கௌரவம்

## 168

இருநூறு ஆண்டுகட்குமுன் பிரான்ஸ் நாட்டிலிருந்த வால்டேர் என்னும் ஆசிரியர் உலகப் பிரசித்தி பெற்றவர். அவர் இளைஞராயிருந்தபோதே பேரறிஞர் என்று அவருடைய நண்பர்களால் கருதப் பெற்றவர்.


வாலடேர்

அவர் ஒருநாள் ஸல்லி என்னும் பிரபு வீட்டில் விருந்துண்டபோது அங்கு வந்திருந்த ரோஷன் என்னும் பிரபுவுக்கு வால்டேர் பேசும் தோரணை பிடிக்கவில்லை.

"என்னிடத்தில் பேசும்போது இரைந்து பேசும் இந்த இளைஞர் யார்?" என்று கேட்டார்.

அதற்கு வால்டேர் "அய்யா! இந்த இளைஞன் பெரிய குடும்பத்தின் பெயரைப் பாழாக்காமல் தன்னுடைய குடும்பத்தின் பெயரை மேன்மையுறச் செய்பவன்" என்று பதிலளித்தார்.

இதைக் கேட்டதும் ரோஷன் எழுந்து போய்விட்டார், அப்போது ஸல்லிப் பிரபு வால்டேரிடம் "அவனை ஒழித்தது குறித்து நாங்கள் சந்தோஷமடைகின்றோம்" என்று கூறினர்.

## சட்டசபை

### 169

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்து நாட்டில் பெருநாவலராயிருந்த எட்மண்ட் பர்க் என்பவர் ஒருநாள் பார்லிமெண்டு சபையில் அரசாங்கத்தின் செயல்கள் சிலவற்றை கண்டித்துப் பேசினர்.



பர்க்

அப்போது ஜார்ஜ் ஆண்ஸ்லோ என்னும் மந்திரி எழுந்து "அரசரை இகழ்ந்து பேசுவதை அனுமதிக்க முடியாது' என்று கூறினர்.

அதற்கு பர்க் "சபாநாயகரே! மந்திரி அறிவைவிட ஆத்திரத்தையே அதிகமாகக் காட்டுகிறுர். நான் அரசரைப் போற்ற வேண்டும் என்பதை அறிவேன். ஆனல் அதற்காக நான் அரசருடைய வேலைக்காரன், வேலைக்காரி எருது, கழுதை எல்லாவற்றையும் போற்ற வேண்டுமென்பதில்லையே" என்று மந்திரிகள் உட்கார்ந்திருந்த இடத்தைப் பார்த்துக் கூறினர்.

## 170

இங்கிலாந்து நாட்டில் 18-ம் நூற்றாண்டில் மிகப் புகழ் வாய்ந்த நடிகராயிருந்த டேவிட் காரிக் என்பவரிடம் ஒரு நண்பர் அவரைப் பார்லிமெண்டு சபை உறுப்பினராக ஆகுமாறு யோசனை சொன்னார்.


காரிக்

அதற்கு காரிக் "பார்லிமெண்டு சபையில் கோமாளியாக நடிப்பதை விட நான் நாடகமேடையில் கொற்றவனாக நடிப்பதையே விரும்புகின்றேன்" என்று பதிலளித்தார்.

## 171

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் பிரதம மந்திரியாயிருந்த டிஸ்ரேலி என்பவரிடம் ஒரு வாலிபரான பிரபு வந்து பிரபுக்கள் சபையில் அங்குள்ள பிரபுக்கள் செவி சாய்த்துக் கேட்குமாறு பிரசங்கம் செய்யக் கற்றுக் கொள்வது எப்படி என்று வினவினார்.

அதற்கு டிஸ்ரேலி "உம்முடைய வீட்டினருகே கல்லறை ஏதாவது உளதோ?" என்று கேட்டார்.

"ஆம்" என்று பிரபு கூறினார்.

"அப்படியானால் நீர் அதிகாலையில் அங்கே சென்று கல்லறைக் கல்களின் மீது உட்கார்ந்துகொண்டு பிரசங்கம் செய்து பழகும்" என்று கூறினார்.

## சட்டம்

## 172

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்தில் பிரதம மந்திரியாயிருந்தவர்களுள் ஒருவரான ஜான் ரஸ்ஸல் பிரபு ஒரு

சமயம் புகழ்பெற்ற தத்துவ சாஸ்திரியான டேவிட் ஹ்யூம் என்பவருடன் பேசிக்கொண்டிருந்த பொழுது "நண்பரே! சட்டங்கள் இயற்றுகிறோமே, அவற்றின் நோக்கம் யாது?" என்று கேட்டார்.


ஹ்யூம

"அதிக எண்ணிக்கையினர்க்கு அதிக நன்மை செய்வதுதான்"

"எதை நீங்கள் அதிக எண்ணிக்கை என்று கருதுகிறீர்கள்?"

அதற்கு டேவிட் ஹ்யூம் "ஒன்று என்னும் எண்ணிக்கைதான்" என்று பதிலளித்தார்.

## 173

இரண்டாயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன் கிரீஸ் நாட்டில் ஆதன்ஸ் நகரத்தில் பிறந்த ஸோலன் என்பவர் கிரீஸ் நாட்டு உத்தமர்கள் என்று புகழ்பெற்ற எழுவரில் ஒருவர். அவரே மக்களுக்குச் சிறந்த சட்டங்கள் வகுத்துத் தந்தவர்.

அவரிடம் ஒருநாள் நண்பர் ஒருவர் "தாங்கள் எவ்வளவு சிறந்த சட்டங்களை செய்து தர முடியுமோ அவ்வளவும் ஆதன்ஸ் மக்களுக்கு செய்து தந்துவிட்டீர்கள் என்று நம்புகிறேன்" என்று கூறினார்.

அதற்கு ஸோலன் "ஆம், எவ்வளவு சிறந்த சட்டங்களை அவர்கள் ஏற்றுக்கொள்ள விரும்பினார்களோ அவ்வளவும் செய்து தந்துவிட்டேன்" என்று கூறினார்.

## 174

இங்கிலாந்து நாட்டில் 18-ம் நூற்றாண்டில் பிரதம நீதிபதியாக இருந்த மான்ஸ்பீல்டு பிரபு ஒரு சமயம்

டன்னிங் என்னும் புகழ்பெற்ற நியாயவாதி நீதிமன்றத்தில் ஜூரிகளிடம் தமது வழக்கு சம்பந்தமான சட்டத்தை விளக்கிச் சொன்னபோது அவரைப்பார்த்து "அதுவே சட்டமாயின், நான் வீட்டுக்குப் போனதும் என் சட்ட புத்தகங்களை எரித்து விடுகிறேன்" என்று கோபமாகக் கூறினார்.

அதற்கு டன்னிங் "பிரபுவே! அவற்றை எரிக்க வேண்டாம், படியுங்கள்" என்று அமைதியாகப் பதிலளித்தார்.

## 175

அமெரிக்காவில் புகழ் வாய்ந்த ஜனாதிபதியாயிருந்த ஆப்பிரகாம் லிங்கன் வக்கீல் தொழில் பார்த்துக்கொண்டிருந்த போது ஒருநாள் ஒரு கட்சிக்காரர் வந்து தம்முடைய வழக்கை நடத்தித் தரும்படி வேண்டிக்கொண்டார்.


லிங்கன்

அந்த வழக்கு செயித்தால் கட்சிக்காரருக்கு பல நூறு டாலர் பணம் கிடைக்கும்.

லிங்கன் அந்த வழக்கை மேற்கொள்ளுமுன் அதைவிசாரிக்க விரும்பினார். விசாரித்தபோது கட்சிக்காரர் செயித்தால் ஒரு விதவையும் அவளுடைய ஆறு குழந்தைகளும் தெருவில் நிற்க வேண்டி வரும் என்று அறிந்தார்.

அதன்மேல் லிங்கன் வழக்கை நடத்த முடியாது என்று கட்சிக்காரருக்குக் கீழ்க்கண்டவாறு கடிதம் எழுதி அனுப்பினார்:—

"தங்கள் வழக்கை செயித்துத் தர முடியுமாயினும் நடத்த விருப்பமில்லை. சில விஷயங்கள் சட்ட சம்மத

மாயினும் சன்மார்க்க சம்மதமாயிரா. இப்போது உம்மிடம் பணம் வாங்கிக்கொள்ளாமலேயே உமக்கு ஒரு யோசனை கூற விரும்புகிறேன். அந்த யோசனை யாதெனில் நீர் இளைஞராக யிருப்பதால் ஏதேனும் தொழில் செய்து சம்பாதிக்கலாம் என்பதே.''

## 176

அமெரிக்காவில் ஜனாதிபதியாயிருந்த ஆப்பிரகாம் லிங்கன் வக்கீலாக இருந்த காலத்தில் கட்சிக்காரர்களிடம் குறைந்த சன்மானமே வாங்குவார். அது மற்ற வக்கீல் களுக்குப் பிடிக்கவில்லை யாயினும், அதைமட்டுமே அவர் கள் லிங்கனிடம் காணும் குறையாக எண்ணினார்கள்.

ஒரு சமயம் லிங்கன் மற்றொரு வக்கீலுடன் சேர்ந்து ஒரு வழக்கை நடத்த நேர்ந்தது. அந்த வக்கீல் வசூலித்த சன்மானம் நியாய வரம்பு கடந்தது என்று லிங்கன் எண்ணினார். அதிகமாக வாங்கியதைக் கட்சிக்காரரிடம் திரும்பக் கொடுத்துவிடுமாறு கூறினார்.

இந்த விஷயத்தை நீதிபதி அறிந்ததும், அவர் "லிங் கன்! இந்தமாதிரி வாங்கினால் வக்கீல்கள் எல்லோரும் வறிஞராக ஆய்விட வேண்டியதுதான்'' என்று கோப மாகக் கூறினார்.

## சம்பாஷணை

## 177

ஆங்கிலப் பேரறிஞர் டாக்டர் ஜாண்ஸன் ஒரு சம யம் ஒரு விருந்துக்குச் சென்றிருந்தபொழுது அங்குள்ள பெண் ஒருத்தி அவரிடம் வந்து சளசள என்று பேச ஆரம்பித்தாள். அது அவருக்குப் பிடிக்கவில்லை. அவர் அவளுக்கு எதுவும் கூறாமல் மற்ற நண்பர்களுடன்

பேசிக்கொண்டிருந்தார். அதைக் கண்டு அந்தப் பெண் அவரிடம் "என்ன, டாக்டர்! தாங்கள் பெண்களின் தோழமையை விரும்புவதைவிட, ஆண்களின் தோழமையையே விரும்புகிறீர்களோ?" என்று கேட்டாள்.


ஜான்ஸன்

அதற்கு டாக்டர் ஜான்ஸன் "அம்மா நான் பெண்களையும் விரும்பவே செய்கிறேன். அவர்களுடைய அழகை அறிவை அன்பை மெச்சுகிறேன். அதுபோலவே அவர்களுடைய மௌனத்தையும் மெச்சுகிறேன்" என்று பதிலளித்தார்.

## 178

அமரிக்க ஜனாதிபதி கூலிஜ் என்பவர் ஒரு விருந்துக்குச் சென்றிருந்தபொழுது அவர் பக்கத்திலிருந்த சீமாட்டி யொருத்தி அவரைப் பார்த்து "என்ன, ஜனாதிபதி அவர்களே! தங்களிடமிருந்து இன்று நான் இரண்டு சொற்களுக்கு அதிகமாய் பெற்றுவிடுவேன் என்று பந்தயம் போட்டிருக்கிறேன்" என்று மிகுந்த நளினமான குரலில் கூறினாள்.

அதற்கு ஜனாதிபதி "நீர் இழப்பீர்" என்று பதிலளித்தார். ஆகவே அந்தச் சீமாட்டி இரண்டு சொற்களே பெற்றார்.

## 179

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்திலிருந்த தாமஸ் கார்லைல் என்பவர் மிகச் சிறந்த எழுத்தாளர்களில் ஒருவர். தீர்க்க தரிசியாகப் பாராட்டப் பெற்றவர். செல்ஸி ஞானி என்று கூறுவார்கள்.

அக்காலத்திலிருந்த டெனிஸன் என்பவர் மிக்க புகழ் வாய்ந்த பெருங் கவிஞர். ஆஸ்தான கவியாக இருந்தவர்.



டெனிஸன்

ஒருநாள் டெனிஸன் கார்லைல் வீட்டுக்கு வந்திருந்தார். இருவரும் கணயடுப்பருகே நாற்காலி போட்டு உட்கார்ந்து புகைக் குழாய் வைத்துப் பிடித்துக்கொண்டிருந்தார்கள்.

இவ்வாறு, இரண்டுமணி நேரம் உட்கார்ந்திருந்தும் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

இறுதியாக டெனிஸன் எழுந்து விடைபெற்ற பொழுது, கார்லைல் "என்ன, நண்பரே! இருவரும் நல்ல விதமாகக் காலங் கழித்தோம்" என்று கூறினார்.

## 180

18-ம் நூற்றாண்டில் பிரான்ஸ் நாட்டில் இருந்த தத்துவ சாஸ்திரி டைடரோட் என்பவர் முதன் முதல் பிரஞ்சு மொழியில் கலைக்களஞ்சியம் இயற்றியவர். அக்காலத்தில் பிரான்ஸிலிருந்த பேரறிஞர்களில் ஒருவர்.

அக்காலத்திலிருந்த வால்டேர் என்பவரும் மிகச் சிறந்த எழுத்தாளர், பேரறிஞர். ஒரு நாள் டைடரோட் வால்டேரிடம் வந்து நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டுச் சென்றார். வால்டேர் ஒரு சொல்கூடக் கூற முடியவில்லை, அவ்வளவு நேரமும் டைடரோட்டே பேசினார்.

அவர் சென்றபின் வால்டேர் தம்முடைய நண்பர் ஒருவரிடம் "அவர் மிகுந்த அறிவுடையவர்தான். அவருக்கு இயற்கை அன்னை அவசியமான நிலைமைகளில் ஒன்று மட்டுமே அளிக்கவில்லை. அதுதான் சம்பாஷணை என்பது" என்று கூறினார்.

சம்பாஷணை என்பது இருவர் பேசுவதாகும்.

# சமத்துவம்

## 181

18-ம் நூற்றுண்டில் இங்கிலாந்தில் பேரறிஞராக விளங்கிய டாக்டர் சாமுவேல் ஜான்ஸன் என்பவருடன் காதரைன் மக்காலே என்னும் அம்மையார் சமத்துவம் பற்றி விவாதம் செய்வதுண்டு.

ஒரு சமயம் டாக்டர் ஜான்ஸன் அந்த அம்மையார் வீட்டில் விருந்துண்ணச் சென்றபோது அவரிடம் "தாங்கள் கூறுவதே சரி என்று தோன்றுகிறது. மக்கள் அனைவரும் சமத்துவமாக இருக்க வேண்டுமென்றே எண்ணுகிறேன். நான் உண்மையாகவே இவ்வாறு கருதுகிறேன் என்பதற்கு அறிகுறியாக இதோ நிற்கும் பணியாளை நம்மோடு உட்கார வைத்து உண்ண விரும்புகிறேன்" என்று கூறினர்.

ஆனல் அம்மையார் அதற்குச் சம்மதிக்கவில்லை. அதைக் கண்டதும் டாக்டர் ஜான்ஸன் "அப்படியானல் இதுதானே சமத்துவக் கொள்கை என்பது? சமத்துவவாதிகள் உயர்ந்தவர்களைத் தாழ்த்த விரும்புகிருர்களேயன்றி தாழ்ந்தவர்களை உயர்த்த விரும்புவதில்லை" என்று கூறினர்.

## 182


பெய்ன்

இருநூறு ஆண்டுகளுக்கு முன் அமெரிக்க ஜனதிபதியாயிருந்த ஜார்ஜ் வாஷிங்டன் என்பவரின் மந்திரியாகவும் நண்பராகவும் இருந்த தாமஸ் பெயின் என்பவர் அரசியல் விஷயங்களில் ஆழ்ந்த சிந்தனையாளர். ஒழுக்கம் நிறைந்தவர். சிறந்த எழுத்தாளர்.

ஒருநாள் ஒரு பாதிரியார் செல்வரையும் வறிஞரையும் படைத்த கடவுளின் கருணையைப் புகழ்ந்து பிரசங்கம் செய்தார்.

பிரசங்கம் முடிந்த பின்னர் பெயின் எழுந்து "செல்வரையும் வறிஞரையும் கடவுள் உண்டாக்க வில்லை. கடவுள் ஆணையும் பெண்ணையுமே உண்டாக்கி அவர்கள் இருவர்க்குமாக பூமியை அளித்தார்" என்று கூறினர்.

## சாட்சி

## 183

இங்கிலாந்து நாட்டின் தலை நகரமாகிய லண்டனில் புகழ் வாய்ந்த மத போதகராயிருந்த மாதியூ வில்க்ஸ் என்னும் பாதிரியார் ஒரு சமயம் மழையில் அகப்பட்டுக்கொள்ள நேர்ந்தபோது அருகிலிருந்த பில்லிங்ஸ்கேட் என்னும் மீன் சந்தைக் கட்டிடத்தில் போய் ஒதுங்கினர். அங்கே மீன் விற்கும் பெண்கள் ஆபாசமான வார்த்தைகள் பேசினர்கள்.

அதைக் கண்டதும் மனம் பொருதவராய் அந்தப் பாதிரியார் அவர்களைப் பார்த்து "ஆண்டவன் சன்னதியில் தீர்ப்புக்கூறும் சமயத்தில் நான் உங்கட்கு விரோதமாகச் சாட்சி கூறுவேன்" என்று கூறினர்.

அதற்கு அந்தப் பெண்களில் ஒருத்தி "ஆமாம், அப்படித்தான் சொல்லுவீர், அதில் சந்தேகமில்லை. பெரிய போக்கிரிகள் எப்போதும் அரசாங்கத்தின் சார்பாகத்தான் சாட்சி கூறுவது வழக்கம்" என்று கூறினள்.

## சாதுர்யம்

## 184

18-ம் நூற்றுண்டில் இங்கிலாந்து நாட்டிலிருந்த செஸ்டர்பீல்டு பிரபு என்பவருடைய "மகனுக்கு எழுதிய கடிதங்கள்" என்னும் நூல் சிறப்புற்றதாகும்.

அந்தப் பிரபு ஓர் ஊருக்குப் போயிருந்தபோது அங்குள்ள ஹோட்டலில் தங்கியிருந்தார். சாப்பிடப் போய் உட்கார்ந்தபோது அங்குள்ள தட்டுக்களும் கிண்ணங்களும் அசுத்தமாயிருந்ததைக் கண்டு அவர் பரிமாறுகிறவனிடம் கேட்டார்.

அவன் "எவராயினும் இறப்பதற்குள் ஒரு நாழி அழுக்கை உண்ண வேண்டியதுதான்" என்றி கூறினன்.

"ஆனல் அதற்காக அவ்வளவையும் ஒரே தடவையில் உண்ண வேண்டும் என்பதில்லையே" என்று அவர் கூறினர்.

## 185

சென்ற நூற்றுண்டில் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாயிருந்த லாயிட் ஜர்ர்ஜ் என்பவர் ஒரு சமயம் தம்முடைய வேல்ஸ் நாட்டுக்குச் சென்றிருந்தபோது அங்குள்ள விவசாயிகள் கூட்டமொன்றில் பேசினர்.

அப்போது அவர் "நாம் அயர்லாந்திலும், இங்கிலாந்திலும், ஸ்காட்லாந்திலும் வேல்ஸிலும் சுயராச்சியம் அமைக்க வேண்டும்" என்று கூறினர்.

"நரகத்திலும்" என்று ஒரு குரல் எழுந்தது.

அதற்கு லாயிட் ஜார்ஜ் "ஆமாம் அது சரிதான், தம்முடைய நாட்டை மறவாமல் ஒருவர் கூறுவதைக் கேட்க மிக்க சந்தோஷம்" என்று கூறினர்.

## 186

ஜெர்மன் பேரறிஞர் கதேயின் சுய சரிதத்தை அவருடைய நண்பர் எக்கர்மன் என்பவர் வாசித்தபோது அதில் கதேயின் நண்பர் பெஹ்ரிச் என்பவர் அனுபவம் என்பதற்குக் கூறிய இலக்கணத்தைக் கண்டார்.

"அநுபவம் என்பது தானாக அனுபவிக்க விரும்பா ததை அனுபவத்தின் வாயிலாக அனுபவிப்பதைத் தவிர வேறொன்றுமன்று"

இதை எக்கர்மன் கதேயிடம் கூறியபோது கதே "ஆமாம், இந்த மாதிரி சாதுர்யமான இலக்கணங்களைக் கூறியே நாங்கள் அந்தக் காலத்தில் எங்கள் காலத்தைப் பாழாக்கினோம்" என்று கூறினார்.

## 187

ஸ்காட்லாந்து நாட்டு மகா கவியாகிய ராபர்ட் பர்ன்ஸ் என்பவர் இளைஞராக இருந்தபோது பாடசாலைக்குச் செல்லும்போது எதையோ சிந்தித்துக் கொண்டு தரையையே பார்த்துக்கொண்டு நடந்துகொண்டிருந்தார்.

அப்போது பாதிரியாருடைய குமாரிகள் இருவரும் பாடசாலைக்குச் சென்றார்கள். அவர்கள் அவருடைய பெயரைச் சொல்லிக் கூப்பிட்டு "பார்க்கப் பெண்கள் உள்ளபோது தரையைப் பார்த்து நடப்பானேன்?" என்று கூறினார்கள்.

அதற்கு பர்ன்ஸ் "அம்மா! ஆணைப் பூமியிலிருந்தே படைத்திருப்பதால் ஆண் பூமியைப் பார்ப்பதும், பெண்ணை ஆணிடமிருந்தே படைத்திருப்பதால் பெண் ஆணைப் பார்ப்பதுமே இயற்கையானதும் நியாயமானதுமாகும்" என்று கூறினர்.

## சாந்தி

## 188

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் கிரீஸ் தேசத்திலிருந்த மகா அலக்ஸாண்டர் என்னும் சக்கரவர்த்தி பெரிய வீரர். பக்கத்து நாடுகளை எல்லாம் வென்ற பின்னர்

பாரசீக தேசத்தையும் வென்று அடிமையாக்க விரும்பினர்.

அதற்காகத் தாம் தயாரித்துள்ள திட்டங்களை பார்மினேடீஸ் என்னும் அறிஞரிடம் சொன்னபோது அந்த அறிஞர் "பாரசீகத்தை வென்ற பின் என்ன செய்வீர்?" என்று கேட்டார்.

"அதன் பின் இந்தியாவை வெல்வேன்"

"அதன் பின்?"

"ஸிரியா"

"அதன் பின்?

"பேசாமல் உட்கார்ந்து ஓய்வு கொள்வேன்"

"அப்படியானல் இப்போதே உட்கார்ந்து ஓய்வு கொண்டாலென்ன?' என்று பார்மினேடீஸ் கேட்டார்.

## சாமர்த்தியம்

## 189

வால்டேர் என்னும் உலகப் பிரசித்தி பெற்ற பிரஞ்சுப் பேரறிஞர் ஒரு சமயம் இங்கிலாந்துக்குச் சென்றிருந்த காலத்தில் அந்த நாட்டில் பிரஞ்சுக்காரருக்கு விரோதமான உணர்ச்சி அதிகமாயிருந்தது.

வால்டேர் ஒருநாள் தெருவில் போய்க் கொண்டிருந்த போது அங்கிருந்த மக்கள் கோபமாகத் திரண்டுவந்து "கொல்லுங்கள், இந்த பிரஞ்சுக்காரனை" என்று கூப்பாடு போட்டார்கள்.

வால்டேர் சற்றும் அஞ்சாமல் அவர்களைப் பார்த்து "ஆங்கிலேய மக்களே! நான் பிரஞ்சுக்காரன் என்பதற்காக என்னைக் கொல்ல விரும்புகிறீர்கள். ஆனல் நான் ஆங்கிலேயனாக இல்லை என்பதொன்றே எனக்குப் போதுமான தண்டனையாகுமல்லவா?" என்று கூறினர்.

அதைக் கேட்டதும் கோபமாக இருந்த மக்கள் கோபத்தை விட்டுச் சந்தோஷமாக ஆரவாரித்து அவரை அவருடைய ஜாகைக்கு அழைத்துச் சென்றார்கள்.

## 190

பிரஞ்சு அரசராயிருந்த பதினொன்றும் லூயி மன்னனுடைய இராணி ஒரு ஜோஸியர் கூறிய தினத்தன்றே இறந்தாள். ஜோஸியர் கூறியதுதான் இராணியின் மரணத்துக்குக் காரணம் என்று எண்ணி அவரைக்கொன்று விடக் கருதி கூப்பிட்டு அனுப்பினார் அரசர்.

ஜோஸியர் வந்தவுடன் அரசர் அவரிடம் "நீர் நிரம்ப சாமர்த்தியசாலி என்று கூறுகிறீரே, நீர் எப்பொழுது இறப்பீர் சொல்லும் பார்ப்போம்" என்று கேட்டார்.

ஜோசியர் அரசருடைய கருத்தை அறிந்துகொண்டு "அரசே! தாங்கள் இறப்பதற்கு மூன்று நாட்களுக்கு முன் நான் இறப்பேன் என்று தோன்றுகிறது" எனறு கூறினார்.

அரசர் அதை நம்பிக்கொண்டு அது முதல் ஜோஸியருடைய உயிரைப் பாதுகாப்பதில் அதிக கவனமாக நடந்து வந்தார்.

## 191

இங்கிலாந்து நாட்டில் இரண்டாம் சார்ல்ஸ் அரசருடைய விதூஷகராயிருந்த கிலிகுரு என்பவர் பிரஞ்சு அரசர் பதினலாம் லூயியைப் பார்க்கப் போயிருந்தபோது அந்த மன்னர் பல அழகான படங்களைக் காட்டினார்.

இறுதியில் காட்டிய படத்தில் இரண்டு மனிதர்களுடைய உருவங்கட்கு இடையில் சிலுவையில் இயேசு கிறிஸ்துவை அறைந்த விதமாகத் தீட்டியிருந்தது.

பிரஞ்சு மன்னர் அந்தப் படத்தைக் காட்டி "இதில் வலது பக்கம் நிற்பவர் போப்பாண்டவர், இடது பக்கத்தில் நிற்பவர் நான்'' என்று கூறினர்.

அதைக் கேட்டதும் ஆங்கில விதூஷகர் "அரசே! இந்த விஷயத்தை அறிவித்ததற்காக மிக்க நன்றி. எம் பெருமான் இரண்டு திருடர்களுக்கிடையில் சிலுவையில் அறையப்பட்டதாகப் படித்திருக்கிறேன். ஆனல் அந்த இருவர் யார் என்பதை இன்றே அறிந்தேன்'' என்று கூறினர்.

## 192

இங்கிலாந்து நாட்டில் பிரபல நாடகாசிரியராயிருந்த ஷெரிடன் என்பவர் ஒரு விருந்துக்குச் சென்றிருந்த போது அங்கே ஒரு பெண் அவரிடம் சளசளவென்று பேசிக்கொண்டிருந்தாள். அது அவருக்குப் பெருத்த வேதனையாக இருந்தது.


ஷெரிடன

அதனல் அவர் வெளியே உலாவி வரப் புறப்பட்டார். அந்தப் பெண் அவருடன் புறப்பட்டாள். அவர் மழை வரும்போல் இருக்கிறது என்று கூறிப் போகாமல் வந்து உட்கார்ந்து கொண்டார்.

பிறகு சிறிது நேரம் சென்ற பின் அவர் மெதுவாக எழுந்து வேறு ஒரு வாசல் வழியே வெளியே வந்தார். ஆனல்: அங்கும் அப்பெண் வந்துவிட்டாள்.

வானம் தெளிந்துவிட்டது அல்லவா என்று கேட்டாள்.

அதற்கு ஷெரிடன் "ஆமாம் சிறிது தெளிந்துதான் இருக்கிறது. ஒருவர்க்குப் போதுமான அளவே, இருவர்க்குப் போதுமான அளவன்று" என்று கூறினர்.

## 193

அமரிக்கச் சட்டசபை அங்கத்தினர் இருவர் ஒரு சமயம் மிகுந்த கோபாவேசத்துடன் வாக்குவாதம் செய்தார்கள். அப்பொழுது ஒருவர் மற்றவரைப் பார்த்து "நீர் நரகத்துக்கே செல்வீர்" என்று கூறினர்.

அதன்மேல் இரண்டாவது மனிதர் கவர்னராயிருந்த கூலிட்ஜ் என்பவரிடம் வந்து "அவருக்கு ஏதேனும் தண்டனை கொடுக்க வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

அதற்கு கூலிட்ஜ் "தம்பி! நான் சட்டப் புத்தகங்களைப் புரட்டிப் பார்த்தேன். நீர் அங்கே போகவேண்டியதில்லை" என்று நிதானமாகக் கூறினர்.

## 194

அமரிக்க ஜனதிபதியாயிருந்த ஆப்பிரகாம் லிங்கன் அந்தப் பதவிக்கு வருமுன் ஒரு சமயம் சட்டசபைத் தேர்தலில் அபேட்சகராயிருந்தபோது டக்ளஸ் என்பவர் அவரை எதிர்க்கும் அபேட்சகராயிருந்தார்.



லிங்கன்

டக்ளஸ் ஓர் இடத்தில் பிரசங்கம் செய்தபோது லிங்கனும் அதைக்கேட்டுக் கொண்டிருந்தார். லிங்கன் மதுக்கடையில் மது விற்பனை செய்தவர் தான் என்று டக்ளஸ் இழிவாகப் பேசினர். மக்கள் நகைத்தார்கள்.

அப்போது லிங்கன் எழுந்திருந்து மேடை மீது ஏறி நின்றுகொண்டு "டக்ளஸ் கூறியது உண்மையே. நான் மது விற்கவே செய்தேன். அந்த நாள் மது விற்பேன், டக்ளஸ் என்னிடம் வந்து வாங்குவார். இப்போது நான் அந்தத் தொழிலை விட்டுவிட்டேன். டக்ளஸோ அதை இன்னும் விடவில்லை" என்று கூறினர்.

## 195

சென்ற நூற்றுண்டில் பிரான்ஸ் நாட்டில் பிரபல நாவலாசிரியராயிருந்த டுமாஸ் என்பவருக்கு ஒரு இளைஞர் தாம் எழுதிய நாவல் பகுதியை அனுப்பி தம்மோடு சேர்ந்து நாவல் எழுதி வெளியிடுமாறு அழைத்தார்.

இதைக்கண்டதும் டுமாசுக்கு கோபம் பொங்கிற்று. "என்ன அப்பா! குதிரையும் கழுதையும் ஒன்ருகச் சேருமா?" என்று கேட்டு ஒரு பதில் கடிதம் எழுதினர்.

அதற்கு அந்த இளைஞர், "அய்யா! நீர் என்னைக் குதிரை என்று கூற எவ்வாறு துணிந்தீர்?" என்று கேட்டு எழுதினர்.

அதைக் கண்டதும் டுமாஸின் கோபம் மறைந்து விட்டது. "உம்முடைய நூலை அனுப்பும், நீர் கூறுகிற படி செய்வோம்" என்று எழுதினர்.

## 196

அமரிக்க ஜனாதிபதியாயிருந்த ஆப்பிரகாம் லிங்கன் அடிமை முறையை ஒழிக்கத் தீர்மானித்திருந்தார். ஆனல் அதற்குத் தக்க சமயம் வரட்டும் என்று எண்ணினர். அப்பொழுது சில பெரிய மனிதர்கள் ஒரு குழுவாகச் சேர்ந்து ஆப்பிரகாம் லிங்கனைப் பேட்டிகண்டு உடனேயே அடிமை முறையை ஒழித்து விட்டதாக பிரகடனம் செய்யு மாறு வேண்டிக்கொண்டார்கள்.

அப்போது லிங்கன் தாம் பிரகடனம் செய்தாலும் அமல் நடத்தமுடியாதுள்ள நிலைமையை விளக்கிச் சொன்னார். இறுதியில் அவர்களைப் பார்த்து, "ஆட்டின் வாலையும் கால் என்று கூறினால், ஆட்டுக்கு எத்தனை கால்?" என்று கேட்டார்.

அவர்கள் உடனே, "ஐந்து" என்று கூறினார்கள்.

அப்போது லிங்கன், "அது தவறு, வாலைக் கால் என்று கூறி விட்டதால் கால் ஆகிவிடுமா?" என்று கூறினார்.

## 197

ஒரு சமயம் ஆங்கில அறிஞர் எட்மண்ட் காஸ் என்பவரும் ராஸட்டி என்னும் கவிஞரும் லண்டன் நகர பஸ் ஒன்றில் பிரயாணம் செய்தபோது இருவருக்கும் சௌகர்யமாய் உட்கார இடமில்லாமல் இருந்தது.

எட்மண்ட் காஸ் ராஸட்டியைப் பார்த்து, "என்ன, நீர் அரசாங்கம் வேண்டாக் கொள்கையினர் தானே?" என்று கேட்டார்.

அதற்கு ராஸட்டி, "இல்லை. நான் நிரீஸ்வரவாதி மட்டுமே, என் மகள் தான் அரசாங்கம் வேண்டாக் கொள்கையினள்" என்று உரத்த குரலில் கூறினார்.

அவ்வளவு தான் பஸ்ஸில் இருந்தவர்களுள் அநேகர் கோபமாகக் கீழே இறங்கிப் போய்விட்டார்கள். நண்பர்கள் இருவரும் சௌகர்யமாகப் பிரயாணம் செய்தார்கள்.

## சால்பு

## 198

16-ம் நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் அரசாண்ட எட்டாம் ஹென்றி என்னும் மன்னன் தவறாக விவாகரத்து செய்து கொள்வதற்கு அவருடைய பிரதம

மந்திரியாயிருந்த ஸர். தாமஸ் மோர் என்பவர் சம்மதிக்க வில்லை.

அதற்காக அரசன் அவரைச் சிறையிலிட்டு ராஜத் துரோகம் செய்ததாகக் கூறித் தலையை வெட்டி விடும் தண்டனை பெறச் செய்தான்.

ஸர் தாமஸ் மோர் வெட்டும் மேடையிடம் சென்றதும் அங்கிருந்த காவலாளியிடம், "அப்பா! என்னைப் பத்திர மாக மேலே ஏற்றிவிடு. இறங்கும் விஷயத்தை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று வேடிக்கையாகக் கூறினார்.

மேடைமீது ஏறியபின் தலை வெட்டுபவரைப் பார்த்து வெட்டுவதற்கு அஞ்சவேண்டாம் என்று தைரியம் கூறினார்.

அதன் பின், "இந்தத் தாடி சிறையில் வைத்து வளர்ந்த தாகையால் இராசத் துரோகம் செய்த தில்லை' என்று கூறி அதில் வெட்டுப் படாதிருக்குமாறு ஒதுக்கி னார்.

இறுதியாக வெட்டப்போகும்போது அவர், "ஆண்ட வனே! அரசர்க்கு நல்ல யோசனை கூறுபவர் கிடைப் பாராக!" என்று பிரார்த்தித்தார்.

## 199

சென்ற நூற்றாண்டில் பிரான்ஸ் நாட்டில் வாழ்ந்த லூயி பாஸ்ட்டியர் என்பவரே கிருமிகளின் உண்மையைக் கண்டு பிடித்தவர். அதனால் உலகத்துக்கு உண்டான நன்மைகள் அளவிறந்தன. இன்னும் பல உண்மைகளைக் கண்டு பிடித்துளர்.

அவர் பணச் செழிப்பில்லாமல் இருப்பதைக் கண்ட பிரெஞ்சு அரசர் மூன்றாம் நெப்போலியன் பாஸ்டியருடன்

பேசிக்கொண்டிருந்த பொழுது, "தாங்கள் கண்டுபிடித்த உண்மைகளை உபயோகித்துப் பொருள் தேடலாமே" என்று கூறினர்.


பாஸ்டியர்

அதற்கு பாஸ்டியர் "விஞ்ஞானிகள் அவ்விதம் செய்வதை இழிவாகவே கருதுவார்கள்" என்று பதிலளித்தார்.

"பணத்திற்காக வென்றால் என் மூளை வேலை செய்யாது, விஞ்ஞானத்திற்காக என்றால் மட்டுமே வேலைசெய்யும்" என்று அவர் வேறொரு சமயம் பிரீஸ்ட்லிஎன்னும் உலகப் பிரசித்தி பெற்ற விஞ்ஞானியின் மனைவியாரிடம் கூறினர்.

## 200

**செ**ன்ற நூற்றாண்டில் ஜெர்மனியிலிருந்த உலகப் புகழ் வாய்ந்த உத்தமக் கவிஞரான கதே என்பவர் ஒரு நாள் தமது நண்பர் எக்கர்மன் என்பவருடன் பேசிக் கொண்டிருந்தபோது பேர் பெற்ற பிரஞ்சுக் கணித சாஸ் திரி லாகிரேஞ்ச் என்பவரைப் பற்றிய பேச்சு எழுந்தது.

அப்போது கதே "லாகிரேஞ்ச் மிகவும் நல்ல மனிதர், அந்தக் காரணத்தால் பெரிய மனிதர். ஏனெனில் ஒரு மனிதன் நல்லவனுயிருப்பதோடு மேதை யுடையவனுகவு மிருந்துவிட்டால் அவன் கவிஞன், தத்துவ சாஸ்திரி, கலைஞன் எதுவாயிருந்தாலும் எப்பொழுதும் உலக நன்மைக் கான காரியங்களையே செய்வான்" என்று கூறினர்.

## 201

**இ**ரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகட்கு முன் கிரீஸ் தேசத்திலிருந்த மகாத்மாவாகிய சாக்கரட்டீஸ் என்

பவர் அந்த நகரத்து இளைஞரைக் கெடுப்பதாகச் சொல்லி அவரை விசாரணை செய்து மரண தண்டனை விதித்தனர்.


சாக்கரட்டீஸ்

தண்டனை விதித்தவுடன் சாக்கரட்டீஸ் தண்டனை விதித்தவர்களைப் பார்த்து "சரி, போகவேண்டிய நேரம் வந்துவிட்டது, நான் இறப்பதற்கு, நீங்கள் வாழ்வதற்கு. ஆனால் நம்மில் யார் உயர்ந்த நிலைக்குச் செல்கின்றனர் என்பது கடவுளுக்குத் தவிர வேறு யாருக்கும் தெரியாது" என்று கூறினர்.

## 202

பண்டைக் காலத்தில் கிரீஸ் தேசத்தில் டெமட்டிரியஸ் என்னும் அரசன் மெகாரா என்னும் நகரத்தை அழித்து நகர மாந்தரை அடிமைகளாக்கினன்.

அந்த நகரத்தில் ஸ்டில்போ என்ற பெயருடைய ஒரு புகழ் பெற்ற தத்துவ சாஸ்திரி இருந்தார். அவரிடம் பேச நேர்ந்தபோது டெமட்டிரியஸ் அவர் ஏதேனும் இழக்க நேரிட்டதோ என்று வினவினன்.

அதற்கு அறிஞர் பெருமான் "இல்லை, போரெனினும் அது அறத்தைக் கொள்ளையடிக்க முடியாது" என்று பதிலளித்தார்.

## 203

இருநூறு வருஷங்கட்குமுன் அயர்லாந்து நாட்டினரான எட்வார்டு பிட்ஜரால்டு பிரபு சிறந்த வீரர். அமரிக்க யுத்தத்தில் புகழ் பெற்றவர். அயர்லாந்தின் சுதந்திரத்திற்காகப் பாடுபட்டவர்.

அவர் கானடா நாட்டில் ஒரு சமயம் செவ்விந்தியருடன் பிரயாணம் செய்தபோது செவ்விந்தியத் தலைவன்

தன்னுடைய மூட்டை முடிச்சுகளைத் தன் மனைவி தலையில் ஏற்றிவிட்டு தான் கைவீசி நடப்பதைக் கண்டார்.

உடனே பிரபு அந்தப் பெண்ணிடம் சென்று அவளிடமிருந்த மூட்டைகளில் பெரும் பகுதியை வாங்கித் தம் தோளின்மீது வைத்துக் கொண்டு நடந்தார்.

## 204

முதல் நூற்றாண்டில் ரோமாபுரியிலிருந்த சக்கரவர்த்தி நீரோ என்பவன் மிகவும் குரூரமானவன். கொடுங்கோன்மையில் சிறந்தவன். தாயைக் கொன்றவன். நகரத்துக்கு தீயிட்டுவிட்டு வீணை வாசித்துக் கொண்டிருந்தவன்.

அவனுடைய காலத்தில் அக்ரிப்பினஸ் என்ற சான்றோர் ஒருவர் இருந்தார். யாரேனும் தம்மைப் புகழ்ந்தால் நாணும் குணமுடையவர்.

அவர் ஒருநாள் உணவு உண்பதற்காக உட்காரும் சமயத்தில் ஒருவன் வந்து அரசர் தங்களை ஆரிஸியா என்ற பகுதியில் போய் வசிக்குமாறு கட்டளையிட்டார் என்று கூறினன்.

உடனே அக்கிரிப்பினஸ் ''அப்படியானல் அங்கே போய் உணவு உண்போம்'' என்று கூறி எழுந்தார்.

# சான்றோர்

## 205

**கி. மு.** ஏழாம் நூற்றாண்டில் கிரீஸ் நாட்டில் வாழ்ந்த தேல்ஸ் என்பவர் உலகப் பிரசித்தி பெற்ற அறிஞராவர். அவரை அக்காலத்தவர் ஏழு முனிவர்களில் ஒருவராகப் போற்றினர்கள். அவரே தத்துவ சாஸ்திரத்துக்கு அடிகோலியவராகக் கருதப்படுகிருர்.

அத்தகைய சான்ருேரிடம் ஒருவர் கடினமானது எது, எளிதானது எது என்று ஒரு சமயம் கேட்டார்.

அதற்கு தேல்ஸ் "தன்னை அறிவதே கடினமானது, பிறர்க்குப் புத்தி கூறுவதே எளிதானது" என்று பதில் உரைத்தார்.

## 206

இரண்டாயிரத்து ஐநூறு வருஷங்களுக்கு முன் சைன நாட்டிலிருந்த உலகம் புகழும் பெரியார் கன்பூஷியஸ் என்பவர் ஒரு சமயம் உணவின்றி வருந்துவதைக் கண்ட அவருடைய சீடர்களில் ஒருவர் "ஐயனே! சான்ருேர் வறுமையால் வாடலாமோ?" என்று கேட்டார்.

அதற்கு கன்பூஷியஸ் "அப்பா! சான்ருேர் சாப்பாடில்லாமல் சங்கடப்படலாம். ஆனாலும் சான்ருேர் சான்ருேரே. சிறியோர்தான் வறுமை வந்ததும் வருந்துபவர்" என்று பதில் கூறினர்.

## சிந்தனை

## 207



நியூட்டன்

17-ம் நூற்றுண்டில் இங்கிலாந்தில் பிறந்து பௌதிக விஞ்ஞானத்துக்கு அஸ்திவாரமிட்ட பேரறிஞரான நியூட்டன் பலவிதமான உண்மைகளைக் கண்டுபிடித்துள்ளார்.

அவருடைய நண்பர் ஒருவர் அவரிடம் அவர் எவ்வாறு அந்த உண்மைகளைக் கண்டு பிடித்தார் என்பது

பற்றி வினவியபொழுது நியூட்டன் கீழ்க்கண்டவாறு பதிலளித்தார்:—

"எந்த விஷயங்களைக் கண்டுபிடிக்க விரும்புகின்றேனோ அந்த விஷயங்களைப் பற்றி இடைவிடாமல் சிந்திப்பேன். சிந்திக்கச் சிந்திக்க சிறிது சிறிதாக வெளிச்சம் விரிந்து கொண்டே வரும். உலகத்துக்கு நான் ஏதேனும் சேவை செய்திருந்தால் அதற்கு என்னுடைய உழைப்பும் சிந்தனையுமே காரணம்."

## 208

ஐம்பது ஆண்டுகட்கு முன் அமரிக்காவில் மிகச் சிறந்த நகைச் சுவை ஆசிரியராகக் கொண்டாடப் பெற்ற மார்க் ட்வைன் என்பவருக்கு ஆயிரம் மைல் தூரத்திலிருந்த ஒரு நகரத்தில் ஒரு பகைவன் இருந்தான். மார்க் ட்வைன் அவனைக் கொன்றுவிட வேண்டும் என்று எண்ணி ஒரு கைத் துப்பாக்கி வாங்கிக்கொண்டு அந்த ஊருக்குச் சென்றார்.



மார்க் ட்வைன்

அந்தப் பகைவன் அயலூர் சென்றிருந்ததால் மார்க் ட்வைன் அங்கு தங்கியிருந்தார். அதைப் பற்றி அவர் கூறுகிறார்—

"எனக்கு அவன் வருமளவும் வேறு வேலையில்லாததால் சிந்திக்க வேண்டியதாக ஏற்பட்டது. அப்படியே சிந்தித்தேன். அரைமணி நேரம் சிந்தித்த வுடனேயே நான் செய்ய நினைத்த காரியத்தைக் குறித்து நாணமடைந்தேன். உடனே ஊருக்குத் திரும்பிவிட்டேன்."

# சிரத்தை

## 209

நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் இங்கிலாந்து நாட்டிலிருந்த சார்ல்ஸ் ஜேம்ஸ் பாக்ஸ் என்ற அறிஞர் பத்தொன்பதாவது வயதிலேயே பார்லிமெண்டு அங்கத்தினரானார். அவர் சில வருஷங்கள் சென்ற பின் மந்திரிப் பதவி பெற்றபோது சிலர் அவர் எழுதுவது அழகாயில்லை என்று கூறக் கேட்டதும் பள்ளிக்கூடச் சிறுவன்போல் ஆசிரியரை நியமித்து அழகாக எழுதுமாறு பயின்றார்.

அவர் உடல் பருத்தவர், ஆயினும் டென்னிஸ் விளையாடும்போது மற்றவர்களைப் போலவே சுறுசுறுப்பாக ஓடி விளையாடுவார். இதைப்பற்றி ஒரு நண்பர் கேட்டபோது "இதற்குக் காரணம் நான் சிரத்தை மேற்கொள்வதுதான்" என்று கூறினார்.

## 210

முன்னூறு வருஷங்கட்கு முன் பிரான்ஸ் நாட்டிலிருந்த மிகச் சிறந்த ஓவியரான நிக்கோலஸ் போஸின் என்பவருடைய ஓவியங்களுள் பல பாரிஸ் நகரத்திலுள்ள ஓவியக் கண்காட்சி சாலையில் வைக்கப்பட்டுள்ளன. அத்துடன் அவர் இத்தாலி நாட்டில் வசித்து வந்தபோது ஓவியக்கலையில் சிறந்த அந்த நாட்டுக் கலைஞர்களிடையே பெரு மதிப்புப் பெற்றிருந்தார்.

அதற்குக் காரணம் யாது என்று அவருடைய நண்பர் மார்வில் என்பவர் ஒரு சமயம் கேட்டபோது அதற்குப் போஸின் "காரணமா? நான் எதையும் அலட்சியம் செய்யாததுதான்" என்று பதிலளித்தார்.

## சிற்பம்

### 211

இத்தாலி நாட்டில் 15-ம் நூற்றுண்டிலிருந்த உலகப் பிரசித்தி பெற்ற சிற்பியான டானடெல்லோ என்பவரை ஒரு சிலை செய்யுமாறு ஒரு தனிகர் கேட்டுக்கொண்டார்.

சிலை செய்து முடிந்த பின் அந்த தனிகர் "இந்தச் சிலையைச் செய்ய உமக்கு ஒரு மாத காலந் தானே ஆயிற்று அப்படியிருக்க நீர் ஏராளமான விலை கூறுகிறீரே" என்று கேட்டார்.

அதைக் கேட்டதும் டானடெல்லோ "ஆமாம், ஒரு வருஷ வேலையை ஒரு நொடிப் பொழுதில் அழித்துவிடலாம்" என்று கூறி அந்தச் சிலையை கீழே தள்ளினர். அது சுக்குநூருக உடைந்துபோயிற்று.

டானடெல்லோ தனிகரைப் பார்த்து "நீர் காய்கறிகள் வாங்க வேண்டியவரேயன்றிக் கலைப் பொருள்கள் அருகே வரக்கூட அருகரல்லீர்" என்று கூறினர்.

## சிறியது

### 212

நானூறு ஆண்டுகளுக்கு முன் இத்தாலியிலிருந்த உலகம் புகழும் ஓவிய சிரோன்மணியான மைக்கேல் ஆஞ்சலோ என்பவர் ஒரு நாள் தம்முடைய கலைக்கூடத்தில் வேலை செய்துகொண்டிருந்தபோது நண்பர்களில் ஒருவர் வந்தார். அவர் கலைஞரிடம் "ஏதேனும் புதிய சிலை உண்டாக்க ஆரம்பித்திருக்கிறீர்களோ?" என்று கேட்டார்.

அதற்கு ஆஞ்சலோ "நான் புதிய சிலை செய்ய ஆரம்பிக்கவில்லை, நேற்று செய்துமுடித்த சிலையைத்தான் இந்த

இடத்தில் சிறிது செதுக்கினேன், அந்தத் தசையை நன்கு தெரியும்படி செய்தேன்'' என்று தாம் செய்துகொண்டிருந்தவற்றை அடுக்கினர்.

அப்போது நண்பர் "என்ன, இவை எல்லாம் வெறும் அற்பமானவையல்லவா ?'' என்று கேட்டார்.

அதற்கு ஆஞ்சலோ "அவை அற்பமாயிருக்கலாம். ஆனல் அற்பங்கள் சேர்ந்துதான் பூரணமாகின்றது, பூரணமோ அற்பமானதன்று'' என்று பதிலளித்தார்.

## சிறை

## 213

பதினேழாம் நூற்றுண்டில் இங்கிலாந்து தேசத்தில் கீர்த்தி பெற்ற ஆசிரியர்களுள் ஒருவரான ஜான் பனியன் என்பவர் ஒரு மதப்பிரசங்கம் செய்ததற்காக பெட்போர்டு என்னுமிடத்திலுள்ள சிறையிலிடப்பட்டார்.

ஒருநாள் ஒரு பாதிரியார் அவருக்கு மத போதனை செய்து அவருடைய மனத்தைத் திருத்த எண்ணி அவரிடம் வந்து—"நண்பரே! நான் கடவுளிடமிருந்து ஒரு செய்திகொண்டு வந்துள்ளேன். உம்மை இங்கிலாந்திலுள்ள சிறைகள் எல்லாவற்றிலும் தேடி அலைந்துவிட்டு இறுதியில் இங்கு கண்டது குறித்து சந்தோஷம் அடைகின்றேன்'' என்று கூறினர்.

அதற்கு பனியன் அவரைப் பார்த்து "தங்களைக் கடவுள் அனுப்பியிருந்தால் தாங்கள் என்னைக் காண இவ்வளவு சிரமப்பட்டிருக்கத் தேவையில்லையே. நான் பன்னிரண்டு ஆண்டுகளாக இங்கே இருப்பது அவருக்குத் தெரியுமே'' என்று பதிலளித்தார்.

## 214

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் ரோமாபுரியில் முதல் முதல் அரசாண்ட சக்கரவர்த்தி அகஸ்டஸ் ஸீஸர் அறிவும் வன்மையும் படைத்தவராயிருந்தார். இலக்கியத்தையும் கலைகளையும் வளர்த்தார். குடிகளுக்கு வேண்டிய நன்மையான காரியங்களைச் செய்தார்.

அவருடன் ஒருநாள் ஆதன்டோரஸ் என்னும் பெரியார் பேசிக் கொண்டிருந்துவிட்டு விடை பெற்றுக்கொள்ளும் போது "அரசே ஒரு விஷயம் கூறுகிறேன் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளும். கோபம் எழும் போதெல்லாம் நீர் நம்முடைய நெடுங்கணக்கிலுள்ள இருபத்து நான்கு எழுத்துக்களையும் பலமுறை வரிசையாகக் கூறியபின்னரே, எதையேனும் பேசவோ செய்யவோ வேண்டும். இதை மறந்து விடாதீர்" என்று கூறினர்.

## சுதந்திரம்

## 215

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்து நாட்டில் ஜான் ரஸ்கின் என்ற மிகப் புகழ்பெற்ற ஆசிரியரும் ஞானியுமான ஒருவர் இருந்தார். அவருடைய நூல் ஒன்றைப் படித்ததும் தாம துறவியானதாக காந்தியடிகள் கூறுகின்றார்.

இத்தகைய பெரியார் ரஸ்கின் கைக்குழந்தையாக செவிலி இடுப்பில் இருந்தபொழுது ஒருநாள் அடுப்பின் மீது கொதித்துக் கொண்டிருந்த கெட்டிலைத் தொடவிரும்பி கையை நீட்டினர்.


ரஸ்கின்

"அப்பா, அதுசுடும், நீட்டாதே" என்று அன்னையார் கூறினர். ஆனல் குழந்தை நீட்டவே விரும்பியது. செவிலி குழந்தையை வேறு இடம் கொண்டுபோகப்போனுள்.

அப்போது தாயார் "அவன் தொடட்டும், விட்டுவிடு" என்று கூறினர். குழந்தை தொட்டது.

"அதுவே நான் சுதந்திரம் என்னும் சொல்லின் பொருளை அறிந்து கொண்ட முதல் பாடம்" என்று ரஸ்கின் எழுதுகிறர்.

## 216

**16**-ம் நூற்றுண்டில் இங்கிலாந்து நாட்டில் ஸர் தாமஸ் மோர் என்ற பெரியார் பிரதம மந்திரியாயிருந்தபோது, எரார்ஸ்மஸ் என்ற பேரறிஞர் அவருடைய ஆப்த நண்பராக இருந்தார்.

அரசன் எராஸ்மஸுக்கு பெரிய ஊதியமுள்ள பாதிரியார் பதவி தருவதாகக் கூறிய போது அவர் கூறினர்:—

"நான் யாரிடமும் சேவகம் செய்ய விரும்பவில்லை, ஒவ்வொருவர்க்கும் சேவை செய்யவே விரும்புகிறேன்."

## 217

**நூ**று வருஷங்களுக்கு முன் இங்கிலாந்தில் தங்கியிருந்த மாஜினி என்பவர் உலகப் பிரசித்திபெற்ற இத்தாலிய தேசபக்த சிரோமணி யாவார்.

அவர் இளைஞராயிருந்தபோது தம்முடைய நாட்டுக்கு சுதந்திரம் தேடும் பொருட்டு "யுவ இத்தாலி" என்ற ரகசிய சங்கத்தை நிறுவியதால் அரசாங்கத்தார் அவரைச் சிறையிலிட்டனர்.

அவருடைய தந்தை அவரைச் சிறையில் பார்க்கப் போன போது சிறையதிகாரி தந்தையாரிடம் அவருடைய மகன் அறிவுள்ளவன் என்பதாயும் இரவு நேரங்களில் சிந்

தணியில் ஆழ்ந்தவண்ணம் தனியாக உலவுவதாகவும் கூறினர்.

"இந்த வயதில் அவனுக்குச் சிந்திப்பதற்கு என்ன தான் இருக்குமோ? எதைப்பற்றிச் சிந்திக்கிறார்கள் என்று தெரிந்தாலொழிய இளைஞர்கள் சிந்திக்கும் வேலையில் இறங்குவதை நாங்கள் விரும்பவில்லை" என்று கூறினர்.

## 218

17-ம் நூற்றாண்டில் இருந்த ஜெர்மன் மகாகவி கதே என்பவர் பிரஞ்சுப் புரட்சியை வெறுத்தபடியால் அரசாங்கத்தார் அவரை ஸ்தாபிக்கப்பெற்ற ஆட்சி முறையின் நண்பர் என்று அழைத்தனர்.


கதே

அதைப்பற்றி அவர் ஒருநாள் தம்முடைய நண்பர்களுடன் பேச நேர்ந்த போது "அதன் பொருள் விளங்க வில்லை. அது எனக்குப் பிடிக்கவில்லை. ஸ்தாபிக்கப்பெற்ற ஆட்சிமுறையில் நல்ல அம்சங்களுடன் கெட்ட அம்சங்களும் உளவாதலால் அதன் நண்பன் என்றால் அழிய வேண்டிய அக்கிரமங்களின் நண்பன் என்றே பொருள் படும்" என்று கூறினர்.

## 219

18-ம் நூற்றாண்டின் இறுதியில் பிரான்சு தேசத்தில் மகத்தான புரட்சி ஏற்பட்ட பின்னர் எழுந்த குடியரசின் தளபதியாக இருந்தார் நெப்போலியன். அந்தப் பதவியிலிருந்தபோது அவர் செய்த பெரிய காரியங்கள் பல உள.

அதனால் ஐரோப்பிய இசை வல்லார்களுள் தலை சிறந்தவர் என்று கருதப் பெறுவோரில் ஒருவரான பீட் ஹோவன் என்பவர் தாம் இயற்றிய "ஈரோயிக்கா" என்னும் இசைவினோதத்தை நெப்போலியனுக்குச் சமர்ப் பணம் செய்தார்.

ஆனால் நெப்போலியன் தம்மைச் சக்கரவர்த்தியாக முடிசூட்டிக் கொண்டபோது, பீட்ஹோவன் அந்த இசைத் தாளை கோபத்துடன் தரையில் போட்டுக் காலால் மிதித்தார்.

## 220

இரண்டாயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன் கிரீஸ் தேசத்தில் ஆதன்ஸ் நகரத்தில் ஐஸோகிரேட்டிஸ் என்னும் நாவலர் இருந்தார். நாவன்மை தரும் கல்வி போதித்து வந்தார்.

அவருக்கு 98 வயதாயிருக்கும் போது மாஸிடோன் அரசரான பிலிப் என்பவர் ஆதன்ஸ் மக்களை காரோணியா என்னுமிடத்தில் தோற்கடித்து ஆதன்ஸை அடிமைப் படுத்தினர்.

இவ்வாறு தம்முடைய நாடு சுதந்திரம் இழக்க நேர்ந்தது குறித்து வருந்தி ஐஸோகிரேட்டிஸ் அடிமையா யிருக்க விரும்பாமல் உண்ணுவிரதமிருந்து உயிர் துறந்தார்.

## 221

**18-ம்** நூற்றாண்டில் ஜான் ஆடம்ஸ் என்ற பெரி யார் அமரிக்காவின் இரண்டாவது ஜனாதிபதியாக இருந் தார். அமரிக்க சுதந்திரப் பிரகடனம் தயார் செய்தவர் களுள் அவரும் ஒருவர்.

அவர் இறக்கும் தறுவாயிலிருந்தபோது கோவிலில் மணி அடிப்பதும் பீரங்கிக் குண்டுகள் சுடுவதும் அவர் காதில் விழுந்தன. என்ன காரணம் என்று வினவினுர்.

இன்று "சுதந்திர தினம்" என்று கூறினர். "என்றைக்கும் சுதந்திரம் இருப்பதாக!" என்று ஆடம்ஸ் கூறினுர்.

## 222

18-ம் நூற்றுண்டில் பிரான்ஸில் இருந்த பேர் பெற்ற ஆசிரியரான ரூஸோ என்பவர் எழுதிய "சமூக ஒப்பந்தம்" என்னும் நூலே பிரஞ்சுப் புரட்சிக்கு விதை தூவியதாகும்.


ரூஸோ

"அந்நூல் அக்காலத்து மக்கள் இதயத்தைத் தட்டிஎழுப்பியதாகும்" என்று ஆங்கில ஆசிரியர் மார்லி கூறுகிருர்.

அந்த நூலின் முதல் வாக்கியம் இது:—

"மனிதன் சுதந்திரமாகப் பிறக்கிருன், ஆனல் எங்கும் விலங்கு பூட்டப் பெற்றே காணப்படுகிருன்."

## 223

18-ம் நூற்றுண்டின் இறுதியில் பிரான்ஸ் தேசத்தில் சுதந்திரப் புரட்சி ஏற்பட்ட காலத்தில் ரோலண்டு அம்மையார் என்ற சால்பு நிரம்பிய பெண்மணி ஒருவர் இருந்தார். புரட்சி என்று சொல்லி அனுவசியமாகக் கொல்லுவதை அவரும் அவர் சேர்ந்த குடியரசுக் கட்சியாரும் விரும்பவில்லை.

அதனல் ஜாக்கோபின் என்ற எதிர்க் கட்சியார் அவருக்கு மரண தண்டனை விதித்தனர். அந்த அம்மை யார் அத்தண்டனையைப் பெறும் சமயத்தில் "சுதந்திரமே! உன் பெயரைச் சொல்லி எத்தனை குற்றங்கள் செய்யப் படுகின்றன!" என்று கூறினர்.

## 224

பிரான்ஸ் தேசத்தில் சாப்பல் என்ற பெயருடைய ஒரு பெரிய கவிஞர் இருந்தார். அவரைத் தம்முடன் வந்து வாழும்படியாக பிரிஸ்ஸாக் பிரபு என்ற சிற்றரசர் கடிதம் அனுப்பினர்.

சாப்பல் சரி என்று சொல்லி பிரிஸ்ஸாக் பிரபுவின் ஊருக்குப் புறப்பட்டுச் சென்றர். ஆனல் போகும் வழி யில் உலகப் பிரசித்தி பெற்ற புளூட்டார்க் என்னும் கிரேக்க ஆசிரியர் எழுதிய நூலைப் படிக்க நேர்ந்தது.

அதில் புளூட்டார்க் "பிரபுக்களுடன் வாழ்பவன் அடிமை ஆய்விடுவான்" என்று கூறியிருந்தார். அதைச் சாப்பல் படித்ததும் பிரபுவின் ஊருக்குப் போகாமல் தம் முடைய ஊருக்கே திரும்பி வந்து சுதந்திரமாக வாழ்ந்து வந்தார்.

## சுவை

## 225

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் சைரக்கூஸி லிருந்த டயோனிஸியஸ் என்னும் மன்னருக்கு லாஸிடிமோ னிய நாட்டினர் ஒரு சமயம் ஒரு விருந்தளித்தனர்.

அப்போது அந்த மன்னர் அவர்கள் கொண்டு வந்து வைத்த கூழைக் கண்டதும் அருவருத்தார்.

அப்போது விருந்தளித்தவர்களில் ஒருவர் "தாங்கள் அருவருப்பதில் ஆச்சரியமில்லை. அதற்கு மசாலை தேவை" என்று கூறினர்.

என்ன மசாலை என்று மன்னர் கேட்டதற்கு அவர் "பசி, தாகம், உழைப்பு என்னும் மசாலை" என்று பதில் உரைத்தார்.

## சுறுசுறுப்பு

## 226

ஒரு நாள் அமரிக்கத் தளபதி தாமஸ் ஹார்ட் பென்டன் என்பவரிடம் ஒரு குடியானவர் வந்து பேசிக்கொண்டிருந்தார். குடியானவர் தளபதியிடம் "தங்கள் வயது யாது?" என்று கேட்டார்.

அதற்குத் தளபதி பென்டன் "என்னுடைய வயதா? பஞ்சாங்கத்துப்படி பார்த்தால் எழுபத்து நாலு. ஆனல் ஏதேனும் செய்யவேண்டி ஏற்பட்டால் அப்போது என் வயது முப்பத்தைந்து" என்று பதில் கூறினர்.

## செருக்கு

## 227

பண்டைக் காலத்தில் கிரீஸ் நாட்டிலிருந்த தயோஜெனீஸ் என்னும் தத்துவ சாஸ்திரி ஒரு நாள் பிளேட்டோ என்னும் உலகப் பிரசித்தியான பேரறிஞருடைய வீட்டுக்குப் போனபோது, அங்கே தளத்தில் அழகான கம்பளங்கள் விரித்திருப்பதைக் கண்டார்.


பிளேட்டோ

அவற்றைக் காலால் மிதித்துக்கொண்டு "இப்படித்தான் பிளேட்டோவின் செருக்கின் மீது மிதிக்கின்றேன்" என்று கூறினர்.

அப்போது பிளேட்டோ "ஆமாம் அதிகமான செருக்கோடு" என்று மெதுவாகக் கூறினர்.

## செல்வம்

### 228

18-ம் நூற்றுண்டில் இங்கிலாந்து தேசத்தில் வாழ்ந்த பேரறிஞர் டாக்டர் ஜான்ஸனுடைய தோழராகவும் அவருடைய வாழ்க்கை வரலாற்றை உலகம் புகழும்படி எழுதிய புலவராகவும் இருந்த பாஸ்வெல் என்பவர் ஒரு நாள் டாக்டர் ஜான்ஸனுடன் டெர்பி நகரம் செல்லும் வழியில் ஸ்கார்ஸ்டேல் பிரபுவின் மாளிகையைக் கண்டதும் "இத்தகைய மாளிகையின் சொந்தக்காரர் இன்பமான வாழ்க்கையுடையவர் என்பதில் சந்தேகமில்லை" என்று கூறினர்.



ஜான்ஸன்

அப்போது டாக்டர் ஜான்ஸன் "அப்படியில்லை, தம்பி! இந்தச் செல்வத்தால் அகலும் தீமை வறுமை என்ற ஒன்றுமே" என்று கூறினர்.

## சேவை

### 229

இருநூறு ஆண்டுகளுக்கு முன் இங்கிலாந்திலிருந்து பல முக்கியமான விஞ்ஞான உண்மைகளைக் கண்டுபிடித்த பேரறிஞர் ஸர் ஹம்பிரி டேவி என்பவர் நிலக்கரிச் சுரங்கத்

தில் தீப்பற்ருதபடி கொண்டுபோகக் கூடிய பாதுகாப்பு விளக்கு ஒன்றைக் கண்டு பிடித்ததும் அவருடைய நண்பர் ஜான் பவுல் என்பவர் அதை அரசாங்கத்தில் பதிவு செய்து ஐயாயிரமோ பதினுயிரமோ ஆண்டுதோறும் சம்பாதிக்குமாறு யோசனை கூறினர்.

அதற்கு ஸர் ஹம்பிரி டேவி "நண்பரே அது வேண்டாம். அவ்விதம் நான் ஒரு நாளும் சிந்தித்ததில்லை. மனித குலத்துக்குச் சேவை செய்வதே என்னுடைய வாழ்வின் லட்சியம். சேவை செய்யக் கிடைத்தால் போதும், அதுவே நான் விரும்பும் பரிசு" என்று கூறினர்.

## 230

ரோமாபுரியில் கி. பி. முதல் நூற்றண்டில் சக்கரவர்த்தியாயிருந்த டைட்டஸ் என்பவர் மிகுந்த புகழ் பெற்றவர். குடிகளுக்காகப் பல நன்மைகள் செய்தவர். மக்கள் அனைவரும் அவரைப் பெரிதும் போற்றினர்கள்.

அவர் ஒரு நாள் விருந்துண்ணும்போது தம்முடைய நண்பர்களிடம் "நண்பர்களே! நான் ஒரு நாளை இழந்து விட்டேன்" என்று கூறினர்.

நண்பர்கள் திகைத்தார்கள். இன்று யாருக்கும் நன்மை செய்யவில்லை, அவ்வாறு நன்மை செய்யாத நாளெல்லாம் இழந்த நாளே என்பது அவருடைய கருத்து.

## 231

சென்ற நூற்றண்டில் இங்கிலாந்தில் இரட்சண்ய சேனை என்னும் கிறிஸ்தவ மதப் பிரிவை ஏற்படுத்திய வில்லியம் பூத் என்னும் பெரியார் யார் வந்து மதவிஷயமாகப் பேசினலும் அவர்களைச் சோதிக்க ஒரு கட்டளைக்கல் வைத்திருந்தார்.

"அப்பா! நீ செய்யும் சேவை யாது? எதைத் துறந்துவிடத் தயாராக இருக்கிருய்?" என்று கேட்பார்.

மத விஷயமான நுணுக்கங்களைப்பற்றி விவாதிப்போரிடம் "அப்பா! நீ பேசியது போதும், போய் ஏதாவது செய்" என்று கூறுவார்.

## 232

இயேசு கிறிஸ்து சிலுவையில் அறையப் படுவதற்கு முதல் நாள் இரவு தம்முடைய சீடர்களுடன் உணவு உண்டபின் ஒரு குண்டானில் நீரை வார்த்து வைத்துக் கொண்டு சீடர்களின் பாதங்களை விளக்கித் துவர்த்தால் துடைக்கத் தொடங்கினர்.

அதன்பின் அவர் சீடர்களைப் பார்த்து "நான் இப்போது செய்ததன் பொருளை அறிவீர்களா? நீங்கள் என்னை குரு மூர்த்தி என்று அழைக்கிறீர்கள். அது சரிதான். நான் குரு மூர்த்திதான். உங்கள் குரு மூர்த்திதான். உங்கள் குருமூர்த்தியாகிய நான் உங்கள் பாதங்களை விளக்கினல் நீங்களும் ஒருவர் பாதங்களை ஒருவராக விளக்க வேண்டுமல்லவா?" என்று கூறினர்.

# சோம்பலின்மை

## 233

நூறு வருஷங்கட்கு முன் இங்கிலாந்து தேசத்திலிருந்த உலகப் பிரசித்தி பெற்ற நாவலாசிரியரான ஸர் வால்டர் ஸ்காட் என்பவரிடம் ஓர் இளைஞர் தமக்கு ஒரு வேலை கிடைத்த பொழுது தாம் எவ்விதம் நடந்து கொள்ளவேண்டுமென்று புத்திமதி கூறும்படி வேண்டிக் கொண்டார்.


ஸ்காட்

அவருக்கு ஸர் வால்டர் ஸ்காட் கீழ்க்கண்டவாறு பதில் எழுதினர் :—

"உன்னுடைய காலத்தை எப்பொழுதும் உபயோகமாகவே செலவு செய். சோம்பலுக்கு இடந்தராதே. செய்ய வேண்டியதை உடனேயே செய்துவிடு. விநோதார்த்தமாகப் பொழுது போக்குவது வேலை முடிந்த பிறகே யன்றி வேலை முடியுமுன் அன்று."

## சோர்வு

### 234

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்திலிருந்த சிறந்த உயிரியற் புலவரான ஜோசப் லீடி என்பவர் ஒரு நாள் டாக்டர் வீயர் மிச்சல் என்ற அறிஞர் வீட்டில் விருந்து உண்டபோது அங்கு வந்திருந்த நண்பர்களில் ஒருவர் லீடியிடம் "தங்களுக்கு வயதாகின்றதே, தங்கட்கு எப்போதேனும் வாழ்க்கையில் அலுப்புத்தோன்றியதுண்டா?" என்று கேட்டார்.

அதற்கு லீடி "அலுப்பா! இதுவரை காணுத புழு அல்லது இதுவரை விளங்காத பாஸில் எறும்பு ஏதேனும் உள்ளவரை அலுப்பு என்பது ஏது?" என்று பதிலளித்தார்.

## ஜனாதிபதி

### 235

ஆப்பிரகாம் லிங்கன் அமரிக்க ஜனாதிபதியாக இருந்தபோது ஒரு சமயம் அவருடைய மாளிகையில் ஒரு பெரிய விருந்து நடந்தது. விருந்தாளிகள் ஜனாதிபதி முன்பாக வரிசையாக அழைத்துச் செல்லப் பட்டார்கள்.

அவர்களுள் ஒரு கிழவர் ஆப்பிரகாம் லிங்கனுடைய


லிங்கன்

கையைப் பிடித்துக் குலுக்க ஆசைபட்டார். அது முடியவில்லை.

அதனால் அவர் தம்முடைய தொப்பியைக் கையில் எடுத்துக்கொண்டு "ஜனாதிபதி அவர்களே! நான் யார்க் இராச்சியத்திலுள்ளவன், அங்கே நாங்கள் ஆண்டவனும் ஆப்பிரகாம லிங்கனும் இந்தக் நாட்டைக் காக்கப் போவதாக நம்புகின்றோம்'' என்று கூறினர்.

அப்போது லிங்கனும் தம்முடைய தொப்பியைக் கையில் எடுத்துக்கொண்டு "என் நண்பரே! நீர் சொல்லியதில் பாதி சரி'' என்று கூறினர்.

## ஞானி

## 236

பண்டைக்காலத்தில் கிரீஸ் தேசத்தின் தலை நகராகிய ஆதன்ஸிலிருந்த டயோஜெனீஸ் என்னும் ஞானியை ஒரு நாள் மகா அலக்ஸாண்டர் என்னும் உலகப் பிரசித்தி பெற்ற சக்கரவர்த்தி சந்திக்க நேர்ந்தது. அப்போது ஞானி ஒரு பீப்பாயையே தமது இருப்பிடமாகக் கொண்டிருந்தார்.

அரசர் ஞானியிடம் சென்று "நான் அலக்ஸாண்டர்'' என்று கூறினர்.

"நான் டயோஜெனீஸ்'' என்று உடனே மறுமொழி எழுந்தது.

"தங்களுக்கு நான் ஏதேனும் உதவி செய்யலாமோ?'' என்று அரசர் கேட்டார்.

அதற்கு டயோஜெனீஸ் "ஆம், வெயிலை மறையாமல் நில்லும்" என்று கூறினர்.

அலக்ஸாண்டர் அரசர் அவ்விடம் விட்டு அகன்று, தம்முடைய சகாக்களைப் பார்த்து "நான் அலக்ஸாண்டராக இல்லாதிருந்தால் டயோஜெனீஸாக இருக்கவே விரும்புவேன்" என்று கூறினர்.

## தத்துவ சாஸ்திரம்

## 237

உலகப் பிரசித்தி பெற்ற இத்தாலிய மகாகவி தாஸோ என்பவருடைய தந்தை அவரைச் சட்டம் படிக்குமாறு கூறினர். ஆனல் தாஸோவோ சட்டத்தை விட்டுத் தத்துவ சாஸ்திரத்தையே படித்தார். அதனுல் ஒரு நாள் தந்தை மகனைப் பார்த்து " தத்துவ சாஸ்திரம் படித்து என்ன கற்றுக்கொண்டு விட்டாய்?" என்று கோபமாகக் கேட்டார்.

அதற்கு தாஸோ " தந்தையின் கோபத்தை சாந்தமாகப் பொறுத்துக் கொள்ளுமாறு தத்துவ சாஸ்திரம் கற்பித்துளது" என்று பதிலளித்தார்.

## தந்திரம்

## 238

அமரிக்க அரசாங்கக் காரியதரிசியரயிருந்த நாக்ஸ் என்பவரிடம் ஒரு நாள் அவருடைய நண்பர் ஒருவர் அரசாங்க விஷயம் ஒன்று பற்றிக் கேட்டார்.

அப்போது நாக்ஸ் நண்பரிடம் "நான் கூறுவதை ரகசியமாக வைத்துக் கொள்வீர்களா?" என்று மெதுவாகக் கேட்டார்.

அதற்கு நண்பர் "ஆகா, அப்படியே" என்று ஆத்திரத்துடன் கூறினார்.

அப்போது நாக்ஸ் "அப்படியேதான் நானும்" என்று சொன்னார்.

## 239

சென்ற நூற்றாண்டில் பிட் என்பவர் இங்கிலாந்தின் பிரதம மந்திரியாயிருந்தார். ஒரு நாள் ஒரு பெண்மணி அவரைப் பார்த்து "நண்பரே! அரசியல் உலகில் நடப்பதெல்லாம் தாங்கள் அறிவீர்களே, இப்போதுள்ள செய்தி யாது? சொல்லுங்கள்" என்று கேட்டாள்.

அதற்கு மந்திரி "அம்மா! எனக்குச் சொல்ல முடியவில்லை, வருத்தமாயிருக்கிறது. இன்னும் நான் இன்றைய தினசரிப் பத்திரிகையைப் படிக்கவில்லை" என்று பதில் கூறினார்.

# தந்தை

## 240

இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன் ரோமாபுரியில் பேபியஸ் என்னும் பெரியார் மகாவீரர். ஐந்து முறை கான்ஸல் என்னும் தளபதியாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார்.

அவரிடத்தில் மக்கள் வைத்திருந்த அன்பின் காரணமாக அவருடைய மகனையும் கான்ஸலாகத் தேர்ந்தெடுத்தார்கள். அப்போது தந்தை பேபியஸ் தம்முடைய மகன் மக்கள் கூட்டத்தினிடையே நிற்குமிடத்துக்குத் தமது குதிரைமீது சவாரி செய்து வந்தார்.

அதை மகன் தூரத்தில் வரும்பொழுதே கண்டுகொண்டு "கான்ஸலிடம் வரவேண்டுமானல் கால் நடை

யாக வரவேண்டும்" என்று சொல்லுமாறு தமது விக்டர் என்னும் கட்டியக்காரனை அனுப்பினர். அருகில் நின்றவர்கள் இவ்வாறு தந்தையார்க்குச் சொல்லி அனுப்பலாமா என்று வருந்தினர்கள்.

ஆனால் தந்தையோ விக்டர் வந்து சொன்னவுடன் குதிரையை விட்டு இறங்கி மகனிடம் ஓடிவந்து, கட்டித் தழுவிக் கொண்டு, கூறினர் :—

"அப்பா மகனே! நீ ஒழுங்கான முறையில் நடந்து கொள்கிருய். ஆணையிட வேண்டிய சமயம் இது என்று அறிகின்ருய். வகித்து வரும் பதவியின் உயர்வையும் அறிகின்ருய். இவ்விதமாகத் தான் நாங்களும் எங்கள் மூதாதையர்களும் ரோமை மேன்மையுறச் செய்தோம் நாங்கள் பெற்றோரையும் பிள்ளைகளையும் விட பிறந்த நாட்டின் பெருமையையே பெரிதாக எண்ணினேம்."

## 241

இரண்டாயிரத்து இருநூறு வருஷங்கட்கு முன் கிரீஸ் நாட்டிலிருந்த ஜெனபோன் என்னும் பெரியார் சாக்கரட்டீஸின் நண்பர். சிறந்த தத்துவ சாஸ்திரி. நல்ல வீரர். புகழ்பெற்ற இலக்கிய கர்த்தர்.


சாக்கரட்டீஸ்

இவர் ஒரு நாள் தலையில் பூச்சூடிக் கோவிலில் வழிபாடு செய்து கொண்டிருந்தார். அப்போது சிலர் யுத்த களத்திலிருந்து வந்து அவருடைய மகன் இறந்துவிட்டதாகக் கூறினர்கள். அவன் எவ்வாறு இறந்தான் என்று அவர் வினவினர். மகன் பகைவர்கள் பலரைக் கொன்று குவித்துவிட்டு இறந்ததாகக் கூறி அவனுடைய வீரத்தைப் புகழ்ந்தனர்,

தந்தை சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்தார். அதன் பின் அவர் "என் மகன் இறவாமலிருக்க வேண்டு மென்றோ, நீண்ட நாள் வாழ வேண்டுமென்றோ நான் கடவுளிடம் வேண்டிக் கொள்ளவில்லை. வீரனாகவும் தேச பக்தனாகவு மிருக்க வேண்டுமென்றே பிரார்த்தித்தேன். அது நிறைவேறிவிட்டது" என்று கூறிவிட்டு வழி பாட்டைச் செய்து முடித்தார்.

## தற்பெருமை

## 242

இங்கிலாந்தில் ஸர் வில்லியம் பாக்ஸால் என்பவர் லண்டனிலுள்ள தேசீய ஓவியக் கண்காட்சி சாலையின் அதிபராக இருந்தபோது ஒருநாள் ஒரு கனவான் ஒரு படத்தை எடுத்துக்கொண்டு அவரைப் பார்க்கப் போனார் அவர் பார்க்க மறுத்துவிட்டார். ஆயினும் அதிகமாக வேண்டிக் கொண்டதின்மேல் ஒருநிமிஷ நேரம் மட்டுமே தந்தார். வந்தவர் படத்தைக் காட்சி சாலைக்குத் தர விரும்புவதாகச் சொல்லி அதைப் பொதிந்திருந்த காகி தத்தை அவிழ்க்கலானார். ஆனால் தலைவர் "அவிழ்க்க வேண்டாம். எனக்கு நேரமில்லை. இங்கே வைத்துவிட்டுப் போம்" என்று கூறினார்.

அப்போது வந்தவர் "திறக்கிறேன், பாருங்கள் போய்விடுகிறேன். அவ்வளவே நான் வேண்டுவது" என்று கூறினார்.

அப்போதும் தலைவர் சம்மதிக்கவில்லை. ஆனால் அதற்குள் படத்தின் மேலிருந்த காகிதம் நழுவவே, தலைவர் தாம் 6 ஆயிரம் பவுன் கொடுத்தும் வாங்க முடியாமற் போன டெர்பார்ஷ் படம் என்று கண்டார்.

வந்தவர் "என் பெயர் வாலஸ், ஸர் வில்லியம் வாலஸ். இந்தப் படத்தைக் காட்சி சாலைக்குத் தரவே வந்தேன்" என்று கூறினர்.

அதைக் கேட்டதும் "தலை சுழல ஆரம்பித்தது" என்று பாக்ஸால் பின்னல் இந்த நிகழ்ச்சியைக் கூறிய போது சொன்னர்.

## 243

சென்ற நூற்றுண்டில் ஆங்கில நாட்டுப் பிரதம மந்திரியா யிருந்த டிஸ்ரேலியின் நண்பர் ஒருவர், புகழ் வாய்ந்த பெரியார் ஜான் பிரைட் என்பவரிடம் பேசிக் கொண்டிருந்த போது "டிஸ்ரேலி தானே தன்னை ஆக்கிக் கொண்டவராயிற்றே, அதற்காகவும் அவர் பாராட்டப்பட வேண்டியவரே அல்லவா?" என்று கேட்டார்.

அதற்கு ஜான் பிரைட் "ஆமாம், அதை நான் அறிவேன். அத்துடன் அவர் அவரை ஆக்கியவரையே வணங்குகிருர் என்பதையும் அறிவேன்" என்று பதிலிறுத்தார்.

## 244

"பிரபல ஓவியரான விஸ்லரும், பிரபல ஆசிரியரான ஆஸ்கார் ஒயில்டும் நேற்று பிரைட்டனில் சந்தித்து வழக்கம் போல் தங்களைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள்" என்று ஒரு செய்தி ஒருநாள் ஆங்கில தினசரிப் பத்திரிகையில் காணப்பட்டது.



ஒயில்டு

அதை விஸ்லர் கத்திரித்து எடுத்து ஆஸ்கார் ஒயில்டுக்கு அனுப்பி "என்ன ஆஸ்கார், இந்தப் பத்திரி கைக்காரர்கள் சரியாக எழுதக் கூடாதா. நாம் இருவரும் என்னைப் பற்றித் தானே பேசிக் கொண்டிருந்தோம்?" என்று கடிதம் எழுதினர்.

அதற்கு ஆஸ்கார் ஒயில்ட் "ஆம், விஸ்லர், நாம் இருவரும் உம்மைப் பற்றித் தான் பேசிக் கொண்டிருந் தோம். ஆனல் நான் என்னைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தேன்" என்று விஸ்லருக்குத் தந்தி கொடுத் தார்.

## 245

டிஸ்ரேலி என்பவர் ஆங்கில நாட்டுப் பிரதம மந்திரியா யிருந்தபோது ஒரு கனவான் தமக்குப் பிரபுப் பட்டம் தரவேண்டுமென்று பன்முறை வேண்டிக்கொண்டார். அப்பட்டத்தை அவருக்குத் தரக்கூடாது என்பதற்கு அநேக காரணங்கள் இருந்தன. அதனல் டிஸ்ரேலி கடைசியில் அந்தக் கனவானைப் பார்த்து "நண்பரே, இந்தப் பட்டத்தை நான் தர முடியாது என்பதை அறிவீர் கள். ஆனல் நான் தந்ததாகவும் நீர் மறுத்து விட்டதாக வும் நீர் உம்முடைய நண்பர்களிடம் சொல்லலாம். அது பட்டம் பெறுவதினும் சாலச் சிறந்ததல்லவா?" என்று கூறினர்.

# தன்னை மறத்தல்

## 246

ட்வைட் மாரோ என்னும் அமெரிக்க அறிஞர் எதை யேனும் சிந்தித்துக்கொண்டு தம்மையே மறந்துவிடுவார். ஒருசமயம் ரயிலில் நியூயார்க் நகரம் போய்ச் சேர்ந்ததும் தந்தி நிலையத்துக்கு விரைந்து சென்று தம்முடைய

காரியதரிசிக்கு—"ஏன் நான் இங்கு நியூயார்க்குக்கு வந்திருக்கிறேன்." என்று கேட்டுத் தந்தி கொடுத்தார்.

"தாங்கள் பிரின்ஸ்டன் பல்கலைக் கழகத்தில் சொற்பொழிவு செய்வதற்காக நியூயார்க் நகரத்தின் வழி போகிறீர்கள்" என்று காரியதரிசி பதில் தந்தி அனுப்பினார்.

## 247

ஜெர்மன் பேரறிஞர் லெஸ்ஸிங் என்பவர் வயதான காலத்தில் ஒரு நாள் தாம் எழுதி முடிக்க வேண்டிய


லெஸ்ஸிங்

நூலைப் பற்றியே எண்ணிக்கொண்டு வீட்டுக்கு வந்தார். கதவு பூட்டியிருந்தது. திறவுகோல் தம்மிடம் இல்லை என்று அறிந்தார். கதவைத் தட்டினார். வேலைக்காரி மாடி ஜன்னலில் தலையை நீட்டிக்கொண்டு யாரோ அன்னியர் கூப்பிடுகிறார் என்று எண்ணி "ஆசிரியர்வீட்டில் இல்லை" என்று கூறினாள்.

"அப்படியா, சரி, நான் இன்னொரு தடவை வருவதாக அவரிடம் சொல்லு" என்று கூறிக்கொண்டு வெளியே சென்றார்.

## 248

ஒரு சமயம் புகழ்பெற்ற ஆங்கில விஞ்ஞானி ஹக்ஸ்லி தாம் சொற்பொழிவு செய்யவிருந்த நகரத்துக்கு நேரம் கடந்து வந்து சேர்ந்தார். ரயிலை விட்டு இறங்கியதும் ஒரு வண்டியில் ஏறி உட்கார்ந்துகொண்டு வண்டிக்காரனைக் குதிரையை விரட்டுமாறு கூறினார். சிறிது நேரம் சென்றதும் வண்டிக்காரனைப் பார்த்து "அப்பா

நான் எங்கே போகவேண்டும் என்பது தெரியுமா?" என்று கேட்டார்.

அதற்கு அவன் "அய்யா! அது எனக்குத் தெரியாது. நீங்கள் விரட்டச் சொன்னபடி விரட்டிக் கொண்டிருக்கிறேன்" என்று கூறினன்.

## தாமதம்

### 249

பிரஞ்சுச் சக்கரவர்த்தியாயிருந்த நெப்போலியன் தமக்கு வரும் கடிதங்களை மூன்று வாரங்கள் வரை பிரிக்க வேண்டாம் என்று தமது காரியதரிசி பூரிஸ் என்பவருக்குக் கட்டளை யிட்டிருந்தார்.

மூன்று வாரங்களுக்குப் பின் பிரித்துப் பார்த்தால் முக்கால் வாசிக் கடிதங்களுக்குப் பதில் எழுதவே தேவையில்லை என்பது தெரிய வருவது வழக்கமாயிருந்தது.

## தாய்

### 250

பதின்மூன்றும் நூற்றுண்டில் பிரான்ஸ் தேசத்தை அரசாண்ட ஒன்பதாவது லூயி என்ற மன்னர் மிகுந்த தெய்வபக்தியுள்ளவராகவும் குடிகளின் க்ஷேமத்தையே பெரிதாக எண்ணுபவராகவு மிருந்ததால் போப்பாண்டவர் அவருக்கு "முனிவர்" (செயிண்ட்) என்ற பட்டத்தை அளித்தார்.

இந்த மன்னர் சிறுவராயிருந்தபோது இவருக்குப் பதிலாக இவருடைய தாயார் பிளான்ச் ராணியே ஆண்டுவந்தார். அவர் அப்போது ஒரு நாள் தம்முடைய மகனைத் தமது மார்போடு அணைத்து வைத்துக்கொண்டு

"அப்பா! என் அருமை மகனே! எனக்கு உன்னிடமுள்ள அன்பை நீ அறிவாய். ஆயினும் நீ பாவம் செய்வதைவிட இறந்துபோவதையே விரும்புவேன்" என்று கூறினர்.

## 251

இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் அமரிக்காவில் ஜனதிபதியாயிருந்த கால்வின் கூலிட்ஜ் என்பவரிடம் காணப்பட்ட முக்கியமான குணம் யாரிடமும் அதிகமாகப் பேசாதிருத்தலே யாகும்.

அவர் ஒரு நாள் ஒரு வீட்டுக்கு விருந்து சாப்பிடச் சென்றிருந்தார். அங்கே அந்த வீட்டு அம்மையாருடன் நீண்ட நேரம் பேசிக்கொண்டார். அம்மையார் ஜனதிபதியைப் பேசும்படி செய்துவிட்டதாகப் பெருமை பேசினர்.

ஆனல் அவர் சில நாட்கள் சென்றபின் ஜனதிபதியின் மாளிகைக்குச் சென்றிருந்தபோது, ஜனதிபதியின் மனைவியார் அவரிடம் "ஜனதிபதி தங்கள் விருந்தை மெச்சினர். தங்களிடம் பேசிக்கொண்டிருந்ததாகச் சொன்னர். தங்களைப் பார்த்தால் தம்முடைய தாயாரைப் பார்ப்பதுபோல் இருந்ததாம்" என்று கூறினர்.


லே ஹண்ட்

## 252

நூறு ஆண்டுகளுக்கு முன் இங்கிலாந்து நாட்டிலிருந்த கவிஞர் லே ஹண்ட் என்பவர் தமது தாயிடத்தில் அளவற்ற அன்புடையவர்.

அன்னையின் இறுதிக் காலத்தில் லே ஹண்ட் அவர் அருகிலிருந்து சிசுருஷை செய்யும் வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது. அது அவருடைய சகோதரருக்கே கிடைத்தது.

அதனல் லே ஹண்ட் அதற்காக வருந்தி "என் சகோதரர் அன்னைக்குச் செய்த சேவையை நினைந்து இன்புறும் பேறு பெற்றதற்காக நான் அவரிடம் அழுக்காறடைகின்றேன்" என்று கூறினர்.

## தியாகம்

## 253

பதினும் நூற்ருண்டில் இத்தாலியில் பிறந்து பாதிரியாயிருந்த கயர்டானே புரோனே என்பவர் ஐரோப்பா முழுவதும் தம்முடைய கருத்துக்களைப் பரப்பி வந்தார்.

போப்பாண்டவருக்கு அவருடைய கருத்துக்கள் பிடியாததால் அவரை மத நீதி மன்றத்தில் விசாரணை செய்து தீயிலிடும் தண்டனை விதித்தனர். ஏழு ஆண்டுகள் சிறையிலிருந்தபின் தீயிலிடப்பெற்றனர். இப்போது உலகமெங்கும் பெருந் தியாகி என்க் கொண்டாடப் பெறுகின்ருர்.

இந்தப் பெரியார் தமக்குத் தண்டனை விதித்த நீதிபதிகளான பாதிரியார்களைப் பார்த்துக் கூறியதாவது:

" தண்டனை விதிக்கப்பட்ட என்னைவிடத் தண்டனை விதித்த தாங்களே அதிகமாக அஞ்சுகின்றீர்கள். நான் உண்மைக்காகப் போர் புரிந்தேன். அதுவே பெரிய காரியம்; வெற்றி கடவுள் திருவுளம், எதுவாயினும் இனி வருங்காலத்து மக்கள் நான் இறக்க அஞ்சவில்லை என்பதையும், மன உறுதியில் நான் என் நண்பர்கள் எவருக்கும் சளைத்தவனில்லை என்பதையும், கோழையாக உயிர் வாழ்வதைவிட கொள்கைக்காக உயிர் துறப்பதையே விரும்பினேன் என்பதையும் ஏற்றுக்கொள்வார்கள் என்று உறுதியாக நம்புகிறேன்."

## 254

பதின் மூன்றும் நூற்றுண்டில் இத்தாலி நாட்டில் பிறந்து ஐரோப்பிய மகாகவி எனப் பேர்பெற்ற தாந்தே


தாந்தே

என்பவர் தம்முடைய பிளாரன்ஸ் நகரத்தின் தலைவர்பதவி வகித்தபோது கோல்ப் கிபலேன் என்ற சச்சரவு உண்டாயிற்று. அதன் காரணமாக இவரைக் குற்றவாளி என்றுசொல்லி நகரத்தை விட்டுத் துரத்திவிட்டனர், சொத்துக்களைப் பறிமுதல் செய்தனர்.

சில வருஷங்கள் சென்றபின் அவர் தாம் செய்த குற்றத்துக்கு மன்னிப்புக் கோருவதாயின் வரலாம் என்று கூறினர்.

அதற்கு தாந்தே "நான் என்னைக் குற்றவாளி என்று கூறினுல் மட்டுமே திரும்பி வரலாம் என்று கூறினுல், நான் குற்றவாளி என்று ஒருநாளும் கூறமாட்டேன்" என்று கூறி இருபது வருடகாலம் ஊரின்றி வீடின்றி அலைந்து ராவன்ன என்னும் ஊரில் இறந்தார்.

நூறு ஆண்டுகள் கழிந்த பின்னர் பிளாரன்ஸ் நகரத்தார் தாந்தேயின் சடலத்தைத் தங்கள் ஊருக்குக் கொண்டுவர அனுமதி தருமாறு இரந்தபோது ராவன்ன நகரத்தார் மறுத்துவிட்டனர்.

## 255

ஐரோப்பாக் கண்டத்தில் கிறிஸ்தவ மதச் சீர்திருத்தம் என்னும் பிரமாண்டமான இயக்கத்தைத் தோற்றுவித்த மார்ட்டின் லூதர் என்னும் பெரியார் காலத்தில்,

1516-ம் ஆண்டில் அவருடைய விட்டன்பர்க் நகரத்தில் பிளேக் என்னும் கொள்ளை நோய் உண்டாயிற்று.

அதற்குப் பயந்துபோய் அநேகர் நகரத்தை விட்டு வெளியேறினர். ஆனால் மார்ட்டின் லூதரோ மக்களுக்குச் சேவைசெய்வதற்காக ஊரிலேயே தங்கினர்.

"மார்ட்டின் இறந்துபோனல் உடனே உலகம் அஸ்தமித்துப் போய் விடாது" என்று கூறினர்.


லூதர்

## 256

சென்ற நூற்ருண்டின் இறுதியில் ருஷ்யா நாட்டிலிருந்த பீட்டர் குரோபாட்கின் என்ற பிரபு• பூகோள சாஸ்திர விஞ்ஞான நிபுணர். அதிகமான ஆராய்ச்சிகள் செய்தவர். பல நாட்டு விஞ்ஞானிகளால் பாராட்டப் பெற்றவர்.

அவர் ருஷ்யாவிலுள்ள பெரிய விஞ்ஞான சங்கங்களுள் ஒன்ருகிய பூகோள சாஸ்திரக் கழகத்தின் காரியதரிசியாயிருந்து ஆராய்ச்சிப் பணிகள் செய்ய விரும்பினர்.

ஆனல் அந்தக் கழகத்தார் அவரைக் காரியதரிசியாக நியமிக்க விரும்புவதாக அவருக்குக் கடிதம் எழுதியபோது அவர் கீழ்க்கண்டவாறு சிந்தித்தார்:—

"என்னுடைய விருப்பம் நிறைவேறுவது உண்மைதான். விஞ்ஞானம் என்பது உயர்ந்த விஷயம்தான். அதன் மூலம் கிடைக்கும் இன்பங்களை அறிவேன். ஆனல் எங்கு பார்த்தாலும் மக்கள் உண்ண உணவின்றித் தவிக்கும்போது நான் இந்த உயர்ந்த இன்பங்களைத்

துய்க்கலாமோ? அவர்களுக்கு உண்ண உணவும் கற்கக் கல்வியும் கிடைக்குமாறு செய்வதல்லவோ என் வேலை?''


குரோபாட்கின்

இவ்வாறுசிந்தித்துவிட்டு பூகோள சாஸ்திரக் கழகத்தார்க்கு ''தாங்கள் காரியதரிசியாக இருக்கச் சொல்வதற்காக மனமுவந்த வந்தனம். ஆனால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை'' என்று தந்தி கொடுத்தார்.

## திருட்டு

### 257

அமரிக்கா தேசத்தில் மின்னலோட்டா என்னும் நகரத்தில் நீண்டகாலம் பாதிரியாயிருந்த டாக்டர் விப்பிள் என்பவர் மேற்குக்கரை இராச்சியங்கள் ஒன்றிலுள்ள ஒரு செவ்விந்திய கிராமத்துக்கு மதபோதனை செய்வதற்காகப் போனார்.

கூட்டம் நடத்த வேண்டிய இடத்துக்குப் போகு முன்னர் அவர் செவ்விந்தியர் தலைவரிடம் ''என்னுடைய படுக்கை முதலியவைகளை இங்கே வைத்துப் போகலாமா, பத்திரமாயிருக்குமா?'' என்று கேட்டார்.

அதற்கு அந்தத் தலைவர் ''இங்கிருந்து நூறு மைல் வட்டாரத்துக்குள் ஒரு வெள்ளையர்கூட இல்லை'' என்று பதிலளித்தார்.

### 258

**செ**ன்ற நூற்றாண்டில் பிரான்ஸ் தேசத்தில் பிறந்த பேர்பெற்ற நாவலாசிரியர்களுள் ஒருவரான பால்சாக் என்பவர் ஒருநாள் இரவு உறக்கம் வராமல் படுத்திருந்த போது ஒரு திருடன் மெதுவாக வந்து அவருடைய மேசையின் பூட்டை உடைக்க முயன்றான்.

அதைக் கண்ட ஆசிரியர் குலுங்கக் குலுங்க நகைத்தார்.

திருடன் திடுக்கிட்டு அவரைப் பார்த்து "ஏன் நகைக்கிறீர்?" என்று கேட்டான்.

"அப்பா! உன் செயலைப் பார்த்துத்தான். மேசையின் சொந்தக்காரனுக்கு பகலில் அதில் காணமுடியாத பணத்தை நீ இரவில் கண்டுவிடலாம் என்று எண்ணி இவ்வளவு சிரமப்படுகிறாயே. அதை எண்ணித்தான் நகைக்கிறேன்" என்று பால்சாக் கூறினார்.

## 259

சென்ற நூற்றாண்டில் ஜெர்மனியில் பிறந்து ஆஸ்திரியாவில் வாழ்ந்து ஐரோப்பா முழுவதும் புகழ்பெற்ற சங்கீத ஆசிரியரும் வித்வானுமான பிரம்ஸ் என்பவர் ஒருநாள் தம்முடைய அறையைப் பூட்டவில்லை. அவருடைய தங்கக் கடிகாரம் திருட்டுப் போயிற்று.

இதை அறிந்ததும் போலீஸார் வந்து பிராது கொடுக்குமாறு கூறினார்கள்.

அதற்கு ஆசிரியர் "அப்பா! என்னைச் சும்மா விட்டு விடுங்கள். எனக்குத் தேவையாயிருப்பதைவிட அதிகத் தேவையாகவுள்ள ஏதோ ஒரு ஏழை தானே எடுத்திருப்பான், பாதகமில்லை" என்று கூறினார்.

# திருப்தி

## 260

பண்டைக் காலத்தில் கிரீஸ் தேசத்தின் பிரதான நகரமாகிய ஆதன்ஸில் நகரபரிபாலனம் முதலியவற்றை நடத்துவதற்காக முன்னூறு பேர்கொண்ட சபை ஒன்று ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப் பெறும்.

அந்நகரில் பெய்டேரெட்டஸ் என்ற பெரியார் ஒருவர் இருந்தார். தேர்தல் சமயத்தில் அவரையும் முன்னூறு பேரில் ஒருவராகத் தேர்ந்தெடுக்கச் சிலர் விரும்பினார்கள். ஆனால் அவர் தேர்ந்தெடுக்கப்படவில்லை.

அதை அறிந்ததும் அவர் தம்மைவிடச் சிறந்தவர்கள் முன்னூறு பேர் ஆதன்ஸ் நகரில் இருப்பது குறித்துச் சந்தோஷித்துக்கொண்டு வீடு சென்றார்.

## தூக்கு தண்டனை

### 261

இருநூறு ஆண்டுகட்கு முன் இங்கிலாந்து தேசத்தில் பார்னெட் என்னும் நீதிபதி ஒரு குற்றவாளிக்குத் தூக்குத் தண்டனை விதித்தார். அப்பொழுது அவன் அவரைப் பார்த்து "பிரபுவே! ஒரு குதிரையைத் திருடியதற்காக ஏழை ஒருவனைத் தூக்கிலிடுவது கொடுமையாகும்" என்று கூறினான்.

அதற்கு நீதிபதி பார்னெட் "அப்பா! குதிரையொன்றைத் திருடியதற்காக உன்னைத் தூக்கிலிடவில்லை, குதிரைகள் திருட்டுப் போகாமலிருப்பதற்காகவே உன்னைத் தூக்கிலிடுகிறோம்" என்று பதில் கூறினார்.

## தேச சேவை

### 262

இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன்னர் கிரீஸ் நாட்டிலுள்ள தீப்ஸ் என்னும் பகுதியில் எபாமினன்டாஸ் என்ற பெயருடைய ஒரு பேர்பெற்ற வீரர் இருந்தார். அவர் மாசற்ற வாழ்க்கையினர். தீப்ஸ் பகுதியை மேம்பாடடையச் செய்தவர்.

அவரே ஸ்பார்ட்டியரை லூக்டிரா என்னும் போர்க் களத்தில் தோல்வியுறச் செய்தார். அந்தச் சமயம் ஒரு நல்ல மனிதர் இறந்ததைக் கேட்டதும் எபாமினன்டாஸ் கூறினர் :—

"நாட்டில் இவ்வளவு அதிகமான கிளர்ச்சி உண்டா யிருக்கும்போது இந்த மனிதர்க்கு இறப்பதற்கு வேண்டிய சாவகாசம் எப்படிக் கிடைத்ததோ!"

## தேச பக்தி

### 263

18-ம் நூற்றுண்டில் பிரான்ஸ் நாட்டில் வாழ்ந்த உலகப் பிரசித்தி பெற்ற விஞ்ஞானி லூயி பாஸ்டியர் என்பவர் காலத்தில் பிரான்ஸுக்கும் ரஷ்யாவுக்கும் போர் நடந்தது.


பாஸ்டியர்

அதன் காரணமாக பாரிஸ் நகரம் ரஷ்யர் வசம் சிக்கியது. அப்போது இத்தாலி அரசர் தமது நாட்டிலுள்ள பைஸா நகரப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் வேலையும் அதற்கு மிகுந்த ஊதியமும் தருவதாக பாஸ்டியருக்கு அறிவித்தார்.

அதற்கு பாஸ்டியர் "என்னுடைய நாடு எனக்கு அதிக ஊதியம் தர முடியாதிருக்கும் இந்த நிலையில் மிகுந்த ஊதியத்தை நாடி நான் பிறநாடு செல்வேனுயின் சேனையி லிருந்து அனுமதி பெருமல் ஓடும் போர்வீரன் பெறும் தண்டனையைப் பெறத் தகுதியுடையவனுவேன்" என்று பதில் எழுதினர்.

### 264

நூறு ஆண்டுகட்கு முன் இத்தாலியில் பிறந்த உத்தம தேசபக்தர் மாஜினி என்பவர் சிறுவராயிருந்த

போது ஒருநாள் தம்முடைய அன்னையுடன் வீதியில் போகும்போது தேசபக்தி காரணமாக நாடு கடத்தப்பட்டவர்களுக்காக பணம் வசூலிப்பவரிடம் அன்னை பணம் தருவதைக் கண்டார்.

அன்னையிடமிருந்து விஷயத்தை அறிந்தார். அதனால் தேசபக்தர் நினைவாகவே இருந்தார். பாடங்களில் சிந்தை செல்லவில்லை.

உற்றார் இறந்துபோனால் கறுப்பு உடை அணிவது வழக்கம். நாட்டுக்குச் சுதந்திரமில்லாதது மரணத்துக்கு சமானமே என்று எண்ணி துக்கக் குறியாக அன்று முதல் இறக்கும்வரை கறுப்பு உடையே தரித்து வந்தார்.

## 265

**நூ**று வருஷங்களுக்கு முன் இத்தாலி தேசபக்தர் மாஜினி சிறந்த எழுத்தாளர். ஆனால் அவர் எழுதும் வேலையில் ஈடுபடாமல் தாய் நாட்டுக்குச் சுதந்திரம் தேடும் வேலையிலேயே ஈடுபட்டிருந்தார்.

அவருடைய நண்பர்கள் அவர் அரசியல் வேலையை விட்டுவிட்டு, நூல்கள் எழுதி நாட்டை கௌரவிக்க வேண்டும் என்று கூறினார்கள்.

அதற்கு அவர் கூறிய மறுமொழி :—

"என்னை மன்னியுங்கள், நீங்கள் கூறுவது எனக்கு விளங்கவில்லை. இத்தாலி என்பது யாது, அது எங்கே உளது என்பதை அறியேன். அன்னையைப் புதிதாகப் படைத்த பின்னரே அவளை கௌரவிக்க வேண்டியதாகும்"

## 266

**இ**ந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் பிரிட்டனில் பிறந்து பெல்ஜிய நாட்டில் நர்ஸ் வேலை பார்த்த எடித்

காவல் என்னும் அம்மையார்முதல் உலகயுத்த சமயத்தில் ஜெர்மானியர் பெல்ஜிய நாட்டைக் கைப்பற்றிக்கொண்ட போது அவர்களிடமிருந்து தப்பி வந்த போர் வீரர்களுக்கு அடைக்கலம் தந்து ஹாலந்து தேசம் போக வழி செய்தார்.

இதை அறிந்ததும் ஜெர்மானியர் இவரைக் கைது செய்து குற்றவாளி என்று கூறி மரண தண்டனை விதித்தனர். அவர்கள் சுடப் போகும்போது இவர் கூறிய மொழிகள் இவை :—

" கடவுள் சன்னிதானத்தில் நிற்கின்றேன், தேசபக்தி என்பது போதாது. எவரிடமும் துவேஷமோ பகைமையோ கூடாது என்பதையும் உணர்கின்றேன்."

## தேர்தல் பிரசாரம்

## 267

அமரிக்க ஜனாதிபதியாயிருந்த தியோடோர் ரூஸ்வெல்ட் என்பவர் ஒரு சமயம் தமது குடியரசுக் கட்சிக்காகப் பிரசாரப் பிரசங்கம் செய்து கொண்டிருந்தபோது, கூட்டத்திலிருந்தவர்களுள் ஒருவன் எழுந்து "நான் ஜனநாயகக் கட்சியினன்" என்று கூவினான்.

ரூஸ்வெல்ட் "ஏன் ஜனநாயகக் கட்சியினர் என்று கேட்கலாமோ?" என்று கேட்டார்.

"என் பாட்டனார் ஜனநாயகக் கட்சியினர், என் தந்தை ஜனநாயகக் கட்சியினர், நானும் ஜனநாயகக் கட்சியினன்.'

"அப்படியானால் நண்பரே உம்முடைய பாட்டனாரும் தந்தையாரும் கழுதையாக இருந்தால் நீர் எதுவாக இருப்பீர்?"

"குடியரசுக் கட்சியினனாக" என்று உடனே பதில் வந்தது.

## 268

இங்கிலாந்தில் பிரதம மந்திரியாயிருந்த டிஸ்ரேலி என்பவர் ஒரு சமயம் தேர்தலில் நின்று வோட்டுக் கேட்டு வரும்போது ஒரு குடியானவரிடம் வந்தார். தாம் வந்த காரியத்தைக் கூறியதும், அந்தக் குடியானவர் "உமக்கா வோட்டுச் செய்யச் சொல்லுகிறீர்? அதைவிடச் சீக்கிரமாக நான் சாத்தானுக்கே வோட் செய்வேன்' என்று கூறினார்.

அதற்கு டிஸ்ரேலி சாவதானமாக "அது சரிதான் தங்கள் நண்பர் வோட்டுக் கேட்க வராவிட்டால் எனக்குப் போடலாம் அல்லவா?" என்று கூறினார்.

# தொழில்

## 269

அமரிக்க ஜனாதிபதியாயிருந்த ஆப்பிரகாம் லிங்கனுடைய தந்தை தாமஸ் லிங்கன் ஒரு குடியானவர். அவர் தமது நிலத்தை விற்க எண்ணியிருந்தார். ஆயினும் அவர் அதை வெட்டித் திருத்திக் கொண்டிருந்ததைக் கண்ட நண்பர் ஒருவர் "என்ன! தாத்தா! நிலத்தை விற்கப்போவதாகச் சொன்னீர்களே" என்று கேட்டார்.


லிங்கன்

அதற்கு தாமஸ் லிங்கன் "ஆமாம், விற்கத்தான் போகிறேன், ஆனால் நான் விற்கப் போகும் விஷயத்தை என்னுடைய நிலம் அறிந்து கொள்ள நான் விரும்பவில்லை" என்று பதிலளித்தார்.

## நகைமுகம்

### 270

18-ம் நூற்றுண்டில் இங்கிலாந்திலிருந்தவரும் முதன் முதலாக ஆங்கிலத்தில் புகழ்பெற்ற அகராதி இயற்றியவரும் பெரும் புலவருமான டாக்டர் ஜான்ஸனிடம் ஒருநாள் அவருடைய தோழர் பாஸ்வெல் என்பவர் "தாங்கள் கடுகடுத்த முகமாய் இராமல் சுமுகமாயிருந்தால் அதிகமாக நன்மை செய்திருக்கலாயல்லவா ?" என்று கேட்டார்.



பாஸ்வெல்

ஜான்ஸன் "இல்லை, தம்பி! கடுகடுத்த முகமாயிருப்பதால் அதிகமான நன்மையே செய்துள்ளேன். நான் இருக்குமிடத்தில் யாரும் தெய்வ விரோதமாகவும் ஆபாசமாகவும் பேசுவதில்லை"

பாஸ்வெல்—ஆம், அய்யா! எந்தப் பாதிரியாரையும் பற்றி இவ்வாறு கூற முடியாது என்பது உண்மையே. ஆனல் என்னுடைய நண்பர் ஒருவர் தங்களிடம் பேச அஞ்சுவதாகக் கூறுகிறுர்.

ஜான்ஸன்—தம்பி! அறிவுள்ள விஷயம் ஏதேனும் இருந்தால் என்னிடம் பேச யாரும் அஞ்சவேண்டியதில்லை. அது இல்லாவிட்டாலோ அவர் பேசாமலிருப்பதே சாலவும் நன்று.

## நட்பு

### 271

இரண்டாயிரம் ஆண்டுகட்டு முன் ரோமாபுரியில் முதற் சக்கரவர்த்தியாயிருந்த அகஸ்டஸ் என்பவர் அறி

வும் அன்பும் நிறைந்த அரசராக இருந்தார். ரோமாபுரி மன்னர்களுள் கலைகளையும் இலக்கியத்தையும் வளர்த்த சிறப்புடையவர் இவரே.

அவர் தம்முடைய நண்பர் ஒருவர் இறந்து போன போது மிகுந்த துக்கமடைந்தார். அதைக் கண்ட மற்றொருவர் நண்பர் "அரசே! தங்கள் துக்கம் அவருக்கு உயிர் தராதல்லவா?" என்று கூறிச் சமாதானப்படுத்த முயன்றார்.

ஆனால் அரசர் "அதே காரணத்தினால்தானே நான் துக்கிக்கிறேன்" என்று கூறினார்.

## 272

ஆப்பிரகாம் லிங்கன் அமரிக்க ஜனாதிபதியாயிருந்த போது, இராணுவ அதிகாரிகளை மீறிய ஆயிரக்கணக்கான போர் வீரர்கள் தம்மை மன்னிக்குமாறு லிங்கனுக்கு விண்ணப்பம் அனுப்புவார்கள். ஒவ்வொரு விண்ணப்பத்துடனும் பல சிபார்சுக் கடிதங்கள் சேர்க்கப்பட்டிருக்கும்.

ஆனால் ஒரு நாள் ஒரு விண்ணப்பம் சிபார்சுக் கடிதங்கள் இல்லாமலேயே வந்தது. அதைக் கண்டதும் ஜனாதிபதி "என்ன இந்த மனிதனுக்கு நண்பர் ஒருவரும் இல்லையா?" என்றார்.

அவருடைய காரியதரிசி "இல்லை, ஒருவர் கூட இல்லை" என்று கூறினார்.

அதற்கு லிங்கன் "அப்படியானால் நான் அவனுடைய நண்பனாக இருப்பேன்" என்று கூறினார்.

# நம்பிக்கை

## 273

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் கிரீஸ் தேசத்திலிருந்த மகா அலக்ஸாண்டர் என்னும் சக்கரவர்த்தி

உலகப் பிரசித்தி பெற்ற வீரர். அரிஸ்டாட்டில் என்னும் பேரறிஞரின் மாணவர். இந்தியாமீது படையெடுத்து வந்தவர்.


அரிஸ்டாட்டில்

இவர் ஒரு சமயம் படையெடுத்துச் செல்லப் புறப்படுமுன், தம்முடைய சொந்த சொத்துக்களை யெல்லாம் தம்முடைய நண்பர்களுக்குப் பிரித்துக் கொடுத்தார். தமக்காக எதையும் வைத்துக்கொள்ளவில்லை.

அதைக் கண்ட அவருடைய தளகர்த்தகர்களுள் ஒருவர் "உமக்காக வைத்துக் கொள்ளப் போவது எது?" என்று கேட்டார்.

அதற்கு அலக்ஸாண்டர் "நம்பிக்கை" என்று பதிலளித்தார்.

"ஆம், உம்முடைய போர் வீரர்களாகிய நாங்களும் அதில் பங்கு கொள்வோம். அதைத் தவிர எங்கட்கு வேறு எதுவும் வேண்டியதில்லை" என்று அந்தத் தளகர்த்தர் கூறினர்.

## 274

**செ**ன்ற நூற்ருண்டில் இங்கிலாந்தில் வேல்ஸ் இளவரசரிடம் ஒருவர் "நாகரிகத்தைப்பற்றித் தங்கள் கருத்து யாது?" என்று கேட்டார்.

அதற்கு இளவரசர் "அது ஒரு நல்லகருத்தே, ஆனல் அதை யாரேனும் ஆரம்பித்து வைக்கவேண்டுமே" என்று பதிலளித்தார்.

## 275

**பி**ரான்ஸ் நாட்டில் நெப்போலியன் காலத்தில் மந்திரியாயிருந்த தாலிரண்டு என்பவரிடம் ஒருவர், அவருடைய

சிகாவான பௌஷ் என்பவருக்கு மலித இயல்பிடம் நம்பிக்கையில்லை என்று கூறியபோது, தாலிரண்டு "ஆமாம் உண்மைதான், அவர் தம்முடைய இயல்பையே நன்ருக ஆராய்ந்துளர்" என்று கூறினர்.

## 276

நானூறு வருடங்களுக்கு முன் இத்தாலி நாட்டில் கலிலியோ என்ற ஒரு பெரிய விஞ்ஞானியிருந்தார். அவர் புதிதாக உண்டாக்கிய விஞ்ஞானக் கருவிகளுள் டெலஸ்கோப் என்னும் தொலைநோக்கியும் ஒன்று.



கலிலியோ

அவர் அதன் மூலமாகப் பார்த்து சூரியனிடம் கறுப்புப் புள்ளிகள் காணப்படுவதாகவும் அவை சுற்றிவருவதாகத் தோன்றுவதால் சூரியன் தன்னைத் தானே சுற்றுகின்றது என்று காண்பதாகவும் கூறினர்.

சூரியன் சுற்றுவதாகச் சொல்வது கிறிஸ்தவ வேத நூலில் சொல்லியிருப்பதற்கு முரண்பட்டதாக இருந்தது. அதனல் கிறிஸ்தவ மதகுரு தம்முடைய சீடர் ஒருவரை அனுப்பி கவனித்து வருமாறு பணித்தார்.

சீடர் வந்து தொலை நோக்கி வழியாகப் பார்த்துவிட்டு அதைத் தமது குருவிடம் கூறினர்.

அதைக் கேட்டும் மதகுருவுக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. அதன் மேல் அவர் கலிலியோவுக்கு எழுதினர்:—

"நீர் கூறும் விஷயம் அரிஸ்டாட்டில் நூலில் உளதா என்று தேடினேன். காணப்படவில்லை. அதனால் உம்முடைய கண்களிலோ அல்லது உம்முடைய கருவியிலோ தான் குற்றமிருக்கவேண்டும்."

## நாகரிகம்

## 277

ஆப்பிரிக்க நாட்டின் பூகோள அமைப்புக்களை ஆராய்ந்த மங்கோ பார்க் என்னும் அறிஞர் காட்டுமிராண்டி மக்கள் வசித்த பகுதிகளை எல்லாம் பார்த்துவிட்டு ஒரு இடம் வந்தபோது தூக்குமேடை யிருப்பதைக் கண்டார்.

அதைக் கண்டதும் அவர் "ஆகா, இது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி தருகின்றது, நாகரிக மக்கள் உள்ள பகுதிக்கு வந்து விட்டேன்" என்று கூறினாராம்.

## நாடகம்

## 278

பிரபல நாடகாசிரியராக விளங்கிய ஆஸ்கார் ஒயில்ட் என்பவர் தம்முடைய நாடகம் ஒன்று நடிக்கப்பட்டதைப் பார்த்துவிட்டு நாடகக் கொட்டகையிலிருந்து தமது கிளப்பிற்கு வந்தார். வந்ததும் அவருடைய நண்பர்கள் "என்ன ஆஸ்கார்! இன்று இரவு உம்முடைய நாடகம் எவ்வாறு நடந்தது?" என்று கேட்டார்கள்.

அதற்கு ஆஸ்கார் ஒயில்ட் மிகுந்த கம்பீரத்துடன் "அதற்கென்ன, கேட்கவா வேண்டும்? நாடகம் என்னவோ பெரும் வெற்றிதான். ஆனால் கூட்டம்தான் தோல்வி" என்று பதிலளித்தார்.

## 279

சென்ற நூற்றாண்டின் இறுதியிலும் இந்த நூற்றாண்டின் முற்பகுதியிலும் ருஷ்யாவில் வாழ்ந்து உலகப் பிரசித்திபெற்ற அறிஞராயிருந்த மாக்ஸிம் கார்க்கி என்பவர் 1905-ம் ஆண்டில் எழுந்த புரட்சியில் கலந்தவர் என்று சிறையிடப்பட்டார்.

அவர் சிறையிலிருந்தபோது "சூரியனுடைய மக்கள்" என்னும் பெயருடைய நாடகம் ஒன்று எழுதலானார். அதில் பல நகைச் சுவை ததும்பும் நிகழ்ச்சிகள் காணப்படுகின்றன. அவற்றை எழுதும்போது அவர் சிரிப்பை அடக்க முடியவில்லை.

அவர் சிரிப்பதைக் கேட்டதும் சிறைக் காவலாளிகள் என்ன விஷயமோ என்று அஞ்சி உடனே ஓடிப்போய் சிறையின் தலைமை அதிகாரியை அழைத்து வந்தனர்.

## 280


பெர்னார்ட்ஷா

இங்கிலாந்து நாட்டின் பிரபல சினிமாப் படம் எடுப்பவரான ஸாம் கோல்ட்வின் என்பவர் உலகப் பிரசித்தி பெற்றநாடகாசிரியரானபெர்னார்ட்ஷாவிடம் அவருடைய நாடகங்களைச் சினிமாப் படங்களாகப் பிடிக்கும் உரிமையை விலைக்குத் தருமாறு கேட்டார்.

ஆனால் ஷா கூறிய விலை மிக அதிகமாகத் தோன்றிற்று படம் எடுக்க விரும்பியவர்க்கு. அதனால் அவர் ஷாவிடம் "தங்கள் நாடகங்களைப் படம் பிடித்தால் லட்சக் கணக்கான மக்கள் பார்த்து ரசிப்பார்கள். அதனால் கலை உணர்ச்சி வளரும் என்பதை எண்ணிப் பாருங்கள்" என்று மறுபடியும் வேண்டிக் கொண்டார்.

அதற்கு ஷா "நண்பரே! இதிலுள்ள கஷ்டம் யாதெனில் தாங்கள் கலையையே எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள், நானோ பணத்தையே எண்ணிக் கொண்டிருக்கிறேன்" என்று பதிலளித்தார்.

## நாணயம்

### 281

16-ம் நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் எட்டாம் ஹென்றி அரசாண்டபோது தாமஸ் வுல்ஸி என்பவர் பிரதம மந்திரியாயிருந்தார்.

இவருடைய சிபார்சின் பேரில் அரசர் தாமஸ் மோர் என்னும் அறிஞரைத் தமது மந்திரி சபையில் ஒருவராக நியமித்தார்.

ஆனால் பின்னால் ஒரு புதிய உத்தியோகம் உண்டாக்குவது பற்றி இருவர்க்கும் வேற்றுமை உண்டாயிற்று.

"நீர் முட்டாள்தனமான மந்திரியாக நடந்துகொள்கிறீர்" என்று வுல்ஸி கூறினார்.

அதற்கு தாமஸ் மோர் "அரசர்க்கு மந்திரி சபையில் ஒரு முட்டாள் மட்டுமே இருப்பது குறித்துக் கடவுளுக்கு வந்தனம் அளிக்கிறேன்" என்று பதிலளித்தார்.

### 282

சென்ற நூற்றாண்டில் ஜெர்மன் அரசர் பிடரிக் வில்லியம் ஒருசமயம் போட்ஸ்டாம் என்னும் நகரத்திலுள்ள சிறைக்குச் சென்று பார்வையிட்டபோது அங்கிருந்த கைதிகள் தாங்கள் நிரபராதிகள் என்று கூறி முறையிட்டனர். அதில் ஒரு அறையில் இருந்தவன் ஒன்றும் கூறாதிருந்தான்.

அப்போது அரசர் "அப்பா! நீயும் நிரபராதி தானே" என்று கேட்டார்.

அதற்கு அவன் "அரசே! நான் நிரபராதியல்ல, நான் குற்றவாளியே. இத் தண்டனை எனக்குத் தக்கதே" என்று கூறினன்.

உடனே அரசர் காவலாளிகளைப் பார்த்து "இந்த அயோக்கியப் பயலை வெளியே துரத்துங்கள். இவன் இருந்தால் இங்குள்ள யோக்கியர்களைக் கெடுத்து விடுவான்!" என்று கூறினர்.


சாக்கரட்டீஸ்

## 283

இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகட்கு முன் கிரீஸ் தேசத்தில் வாழ்ந்த உலகப் பிரசித்திபெற்ற உத்தமச் சான்ருேரான சாக்கிரட்டீஸ் என்பவர் மீது தவருகக் குற்றஞ்சாட்டி மரண தண்டனை விதித்தனர்.

மரண தண்டனை பெற்ருேர் ஹெம்லாக் என்னும் நச்சுச் செடியின் சாறு தரப்படுவர். சாக்கரட்டீஸ் அச் சாற்றைக் குடித்ததும் அவருடைய நண்பர்கள் அழுதனர். "கவலைப்படாதீர், பொறுமையாக இருங்கள்" என்று அவர் கூறினர்.

சிறிதுநேரமானதும் அவர் காலைத் தொட்டுப் பார்த்தார். உணர்ச்சி காணப்படவில்லை. "நஞ்சு இருதயத்துக்கு வந்ததும் இறுதி ஏற்படும்" என்று கூறினர்.

அதன்பின் இடுப்பில் உணர்ச்சியில்லை என்று கண்ட சமயம் நண்பர் கிரைட்டோ என்பவரைப் பார்த்து "கிரைட்டோ! நான் ஆஸ்கிலிப்பியஸுக்கு ஒரு சேவல்

தரவேண்டும். அதை ஞாபகமாகக் கொடுத்து விடுகிருயா?" என்று கூறினர்.

அதற்கு நண்பர் "ஆகட்டும், வேறு ஏதேனும் செய்ய வேண்டியது உளதோ?" என்று கேட்டார்.

பதில் வரவில்லை.

## 284

இருநூறு வருஷங்களுக்கு முன் இங்கிலாந்திலிருந்த ஹொரேஷியோ நெல்ஸன் என்பவர் மிகக் கீர்த்திபெற்ற கடற்படை வீரர்களுள் ஒருவர். அவரே நெப்போலியனுடைய கடற்படையை முறியடித்தவர். கடல் போர் ஒன்றில் வலது கையை இழந்தவர். சிறந்த சேவைக்காக பிரபு பட்டம் பெற்ருர்.

அவர் சிறுவராயிருந்தபோது ஒருநாள் அவரும் அவருடைய அண்ணனும் பக்கத்து ஊரிலிருந்த பாடசாலைக்குப் புறப்பட்டபோது பனி அதிகமாகப் பெய்து கொண்டிருந்தது. போகமுடியாதபடி அபாயமாயிருந்தாலொழியத் திரும்பவேண்டாம் என்று சொல்லியனுப்பினர்.

வழியில் பனி மிகுதியாயிருந்தபடியால் அண்ணன் திரும்பிவிட விரும்பினர். ஆனல் அபாயகரமாயில்லதாதால் நெல்ஸன் "நம் வார்த்தையை நம்பியே நம்மை அனுப்பினர்கள். அதனல் நாம் திரும்பக்கூடாது. பாடசாலைக்கே போகவேண்டும்" என்று கூறி அண்ணனை அழைத்துக்கொண்டு சென்ருர்.

## நாவன்மை

## 285

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் கிரீஸ் தேசத்தில் ஆதன்ஸ் நகரத்தில் வாழ்ந்த உலகப் பிரசித்திபெற்ற நாவலர் டெமாஸ்தெனீஸ் என்பவரிடம் ஒருநாள் ஒரு

நண்பர் நாவன்மை பெறும் முறைகளைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்.


டெமாஸ்தெனிஸ்

அப்போது அந்த நண்பர் பிரசங்கம் செய்யும்போது ஆரம்பத்தில் கவனிக்க வேண்டிய விஷயம் யாது என்று கேட்டதற்கு, டெமாஸ்தனீஸ் "சைகை" என்று கூறினர்.

இரண்டாவதாக கவனிக்க வேண்டியது யாது? அதுவும் சைகையே.

மூன்றாவதாக கவனிக்க வேண்டியது யாது? அதுவும் சைகையே என்று பதிலளித்தார்.

## நிரீஸ்வர வாதம்

### 286

சென்ற நூற்றாண்டில் ஆக்ஸ்போர்டு சர்வ கலாசாலையிலுள்ள பாலியல் கல்லூரியின் தலைவராயிருந்த டாக்டர் ஜோவெட் என்பவரிடம் ஒருநாள் ஒரு மாணவர் வந்து கடவுள் உண்டு என்பதற்குத் தக்க ஆதாரங்கள் இருப்பதாகத் தெரியவில்லை என்று கூறினர்.

அதைக் கேட்டதும் டாக்டர் ஜோவெட் "சரி, அப்பா! நீ இன்று மாலை 5 மணிக்குள் ஒரு கடவுளைக் கண்டுபிடிக்காவிட்டால் நீ இந்தக் கல்லூரியை விட்டுப் போய்விட வேண்டியவனே!" என்று கூறினர்.

### 287

பிரான்ஸ் நாட்டில் 18-ம் நூற்றாண்டில் உலகப் பிரசித்திபெற்ற ஆசிரியராக இருந்த வால்டேர் நிரீஸ்வர வாதியாக இருந்தார். ஒருநாள் டாலம்பர்ட், கண்டோர்

ஸெட் என்ற அறிஞர்கள் அவருடன் விருந்துண்டபோது நிரீஸ்வர வாதம் பற்றிப் பேச விரும்பினார்கள்.

அப்போது வால்டேர் அவர்களிடம் "இப்போது பேசாதீர்கள், வேலைக்காரர்கள் போகட்டும். இன்று இரவு என்னுடைய கழுத்து வெட்டுப்பட நான் விரும்பவில்லை" என்று கூறித் தடுத்தார்.



வால்டேர்

## 288

இங்கிலாந்து தேசத்தில் 18-ம் நூற்றாண்டில் டேவிட் ஹ்யூம் என்ற பெரிய தத்துவஞானி இருந்தார். அவர் மத நம்பிக்கையில்லாதவர், நிரீஸ்வர வாதி.

ஆயினும் அவர் ஜான் பிரௌன் என்னும் ஸ்காட்டிஷ் பாதிரியார் கோவிலில் பிரசங்கம் செய்யும்போது அங்கு போய்க் கேட்டு வருவது வழக்கம்

"நீரோ நிரீஸ்வரவாதி, அப்படியிருக்க இவ்வாறு மதப் பிரசங்கம் கேட்டு வருவதேன்?" என்று அவருடைய நண்பர் ஒருவர் கேட்டார்.

அதற்கு டேவிட் ஹ்யூம் "அவர் சொல்வது முழுவதையும் நான் நம்பவில்லை. ஆனால் அவர் நம்புகிறார். தாம் சொல்வதை நம்புகின்ற ஒருவரை வாரம் ஒரு முறை கேட்டுவர எனக்கு விருப்பம்" என்று பதிலளித்தார்.

## 289

சென்ற நூற்றாண்டில் அமரிக்காவில் இங்கர்ஸால் என்ற பெயருடைய பிரபல நிரீஸ்வரவாதி ஒருவரிருந்தார்.

பிலிப்ஸ் புரூக்ஸ் என்னும் பாதிரியார் மிகுந்த நோயா யிருந்தார். அநேகர் பார்க்க வந்தார்கள்: ஆனல் பாதிரி யார் அவர்கள் யாரையும் பார்க்கச் சம்மதிக்கவில்லை.

ஆனல் இங்கர்ஸால் பார்க்க வந்தபோது கூட்டி வரும் படி சொன்னர். இங்கர்ஸால் அவருடன் பேசிக்கொண் டிருந்தபொழுது "தாங்கள் தங்கள் நண்பர்களை வரச் சம்மதிக்காமல் நான் வரச் சம்மதித்ததன் காரணம் யாது?' என்று வினவினர்.

அதற்குப் பாதிரியார் "இதுதர்ன் காரணம்: என் னுடைய நண்பர்களை நான் பரலோகத்தில் பார்ப்பேன் என்ற நம்பிக்கையுண்டு. ஆனல் தங்களைப் பார்ப்பதோ இதுதான் கடைசித் தடவையாக இருக்கலாமல்லவா?" என்று பதிலளித்தார்.

## 290

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்து நாட்டில் கார்ப் பெண்டர் என்ற பாதிரியார் ஒரு சமயம் பிரசங்கம் செய்த பொழுது கூட்டத்திலிருந்தவர்களில் ஒருவர் எழுந்து "ஜோனு என்பவரைத் திமிங்கிலம் விழுங்கிவிட்டதாக வேதநூல் கூறுகிறதே, அதை நீங்கள் நம்புகிறீர்களா?', என்று கேட்டார்.

அதற்குப் பாதிரியார் "நர்ன் தெய்வலோகம் சென்ற தும் அதை ஜோனுவிடம் கேட்கிறேன்" என்று சொன்னர்.

"அவர் அங்கே இல்லாவிட்டாலோ?"

"அப்படியானல் நீர் கேட்கவேண்டியதுதான்" என்று சுடச்சுடக் கொடுத்தார்.

# நீதிபதி

## 291

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் கிரீஸ் நாட்டில் அரிஸ்டைடிஸ் என்ற பெயருடைய ஒரு நீதிபதியிருந்தார்; அவர் நியாயம் சிறிதும் பிறழாமல் நடந்துவந்ததால் மக்கள் அனைவரும் "நீதிமான் அரிஸ்டைடிஸ்" என்று புகழ்ந்தார்கள்.

அவர் ஒருநாள் ஒரு வழக்கை விசாரித்துக்கொண்டிருந்தபோது கட்சிக்காரரில் ஒருவர் நீதிபதியிடம் "இவர் தங்களை மிகவும் இழிவாகப் பேசினார்" என்று எதிர்கட்சிக்காரரைப்பற்றிக் கூறினார்.

அதற்கு அரிஸ்டைடிஸ் "அப்பா! நான் இங்கே உன்னுடைய வழக்கை விசாரிக்க வந்திருக்கிறேனேயன்றி என்னுடைய வழக்கை விசாரிப்பதற்காக அன்று" என்று கூறினார்.

## 292

இங்கிலாந்து தேசத்தில் 18-ம் நூற்றாண்டில் கடுந்தண்டனை விதிப்பவர் என்று எல்லோராலும் இகழப்பட்ட பிரதம நீதிபதி ஜெப்பரீஸ் என்பவர் ஒருகைதியைத் தமது பிரம்பால் சுட்டிக்காட்டி "என் பிரம்பின் ஒரு கோடியில் ஒரு போக்கிரி உளன்" என்று மிகுந்த இறுமாப்புடன் கூறினார்.

அப்பொழுது அவரால் சுட்டப்பெற்ற மனிதன் "பிரபுவே எந்தக் கோடியில்?" என்று கேட்டான்.

## 293

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டின் பிரதம நீதிபதியாயிருந்த எல்லன்பரோ பிரபுவின் முன்னிலையில் அப்போதுதான் புதிதாக நியாயவாதியாக ஆகியிருந்த

ஓர் இளைஞர் நீதிபதியிடம் "பிரபுவே! துர் அதிர்ஷ்டம் வாய்ந்த என்னுடைய கட்சிக்காரர்—பிரபுவே! துரதிர்ஷ்டம் வாய்ந்த என்னுடைய கட்சிக்காரர்—பிரபுவே——" என்று விதிர்விதிர்த்துக் கொண்டு கூறலானர்.

அப்போது எல்லன்பரோ பிரபு "சொல்லும் அய்யா! சொல்லும்! நீர் இதுவரை சொன்ன விஷயத்தில் இந்தக் கோர்ட்டாருக்கு எவ்வித ஆட்சேபமும் கிடையாது" என்று கூறினர்.

## நூல்கள்

### 294

18-ம் நூற்றாண்டில் ஜெர்மனி நாட்டில் பிறந்த மிகப் புகழ் பெற்ற நாடகாசிரியர் லெஸ்ஸிங் என்பவர் எப்போதும் நூல்கள் படித்துக் கொண்டிருப்பதில் அளவற்ற ஆசையுடையவர்.



லெஸ்ஸிங்

ஆயினும் அவர் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது தமது தாயார்க்கு எழுதிய கடிதமொன்றில் கூறுகிருர்:—

"அம்மா! நூல்களைக்கற்பது என்னைப் பண்டிதனுக்கும், சான்றோனுக்காது என்பதைக் காண்கின்றேன்"

### 295

17-ம் நூற்றாண்டில் பிரான்ஸ் தேசத்தில் கிளாட் லொரைன் என்ற பேர் பெற்ற இயற்கைக் காட்சி ஓவியர் இருந்தார். அவருடைய படங்கள் காணப்படாத ஐரோப்பியக் கண் காட்சி சாலைகளே கிடையா.

ஒருநாள் உலகப் பிரசித்திபெற்ற ஜெர்மன் மகாகவி கதே என்பவரும் அவருடைய நண்பர் எக்கர்மன் என்பவரும் கிளாட் ஓவியரைப் பற்றிப் பேச நேர்ந்தது.


கதே

எக்கர்மன் அந்த ஓவியரைப் பற்றி "கலைஞர் அகராதி" என்ற நூலில் என்ன சொல்லியிருக்கிறது என்று பார்த்தார். அதில் "கிளாடின் சிறப்பெல்லாம் அவருடைய வர்ணங்களே" என்று எழுதியிருந்தது.

கதேயும் எக்கர்மனும் ஒருவரை யொருவர் பார்த்துச் சிரித்தார்கள்.

"இதிலிருந்து தெரிகின்றதா? நாம் புத்தகங்களை நம்பி அவற்றில் கூறியுள்ளதை கேட்டுக்கொள்வது எப்படித் தவறு என்று" என, கதே கூறினர்.

## பக்தி

## 296

பதினாலாம் நூற்றாண்டில் ஸ்காட்லாந்து நாட்டு அரசராயிருந்த ராபர்ட் புரூஸ் என்பவர் ஆங்கில மன்னர்க்கு அடங்கிய சிற்றரசராக இருந்தார். ஆயினும் பலமுறை முயன்று ஆங்கிலப் படைகளைச் சிதறடித்து விரட்டி நாட்டுக்குச் சுதந்தரம் தேடித்தந்தார்.

அவர் இறக்கும் தறுவாயிலிருந்தபோது தம்முடைய மக்களை அழைத்துத் தம்முடைய அருகில் வைத்துக் கொண்டு பல புத்திமதிகளைச் சொல்லிவிட்டு இறுதியாகக் கூறினர்:—

"என் அருமைக் குழந்தைகளே! இறைவன் அருள் உங்கள் எல்லோருக்கும் உண்டாவதாக. இன்று காலை உங்களுடன் உணவு உண்டேன், இரவு என் நாதர் இயேசு கிறிஸ்துவுடன் உண்பேன்."

## 297

இயேசு கிறிஸ்துவிடம் ஒருவர் வந்து அவருடைய தாயாரும் சகோதரர்களும் அவரிடம் பேச விரும்புவதாகச் சொன்னபோது அவர்,

என்னுடைய தாயார் யார்? என்னுடைய சகோதரர்கள் யார்? என்று கூறித் தம்முடைய கையை நீட்டித் தம்முடைய சீடர்களைச் சுட்டிக்காட்டி "இதோ பாருங்கள் என் தாயாரையும் சகோதரர்களையும். தேவலோகத்திலுள்ள என் தந்தையின் விருப்பம் போல் யார் நடக்கிறாரோ, அவரே என்னுடைய சகோதரர், சகோதரி, தாயார்"

## 298

இயேசு கிறிஸ்து ஒரு சமயம் கோவிலில் உண்டியல் பெட்டி அருகில் உட்கார்ந்திருந்தார். மக்கள் அதில் பணம் .போட்டார்கள். மிகுந்த செல்வம் படைத்தவர் மிகுதியாகப் போட்டார்,

பிறகு ஒரு ஏழை விதவை வந்து இரண்டு பைசாக்களைப் போட்டார்.

அதைக் கண்டதும் இயேசு தம்முடைய சீடர்களைக் கூப்பிட்டுச் சொன்னார்:—

"இதுவரை இந்த உண்டியல் பெட்டியில் போட்ட வர்கள் அனைவரிலும் இந்த ஏழை விதவையே அதிகமாகப் போட்டவள்.

ஏனெனில் அவர்கள் தாங்கள் அனுபவித்து மிகுந் ததைப் போட்டார்கள். ஆனால் அவளோ தான் கஷ்ட திசையிலிருந்தும் தனக்கு நாளைக்கு வேண்டுமே என்ற எண்ணமின்றித் தன்னிடமிருந்ததை எல்லாம் போட்டு விட்டாள்."

## 299

16-ம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் ஜெர்மன் பாதிரி யார் மார்டின் லூதர் தோற்றுவித்த கிறிஸ்தவ மதச் சீர்திருத்தக் கொள்கையை ஆதரித்த தன் காரணமாகப் பலவிதமான இன்னல்களுக்கு ஆளான பெரியார்களுள் ஸ்காட்டிஷ் பாதிரியாரான ஜான் நாக்ஸ் என்பவரும் ஒருவர்.


லூதர்

அவர் மிகுந்த கஷ்டப்பட்டு நோயாய்ப் பேசமுடியாமல் படுத்திருந்தபோது அவரைக் கஷ்டப் படுத்திய வர்கள் "உம்முடைய கட்சி வெல்லும் என்று இன்னும் உமக்கு நம்பிக்கையிருக்கிறதா?" என்று கேட்டனர்.

அப்போது நாக்ஸ் பெரியார் பேச முடியாததால் தம்முடைய விரலைக் கொண்டு மேலே காட்டி விட்டு இறந்து போனார்.

## பகைமை

### 300

சென்ற நூற்றாண்டில் பிரஷ்யாவுக்கும் பிரான்ஸுக்கும் போர் நிகழ்ந்த போது ஒருநாள் உலகப் பிரசித்தி பெற்ற ஜெர்மன் மகாகவி கதேயிடம் அவருடைய நண்பர் எக்கர்மன் "இந்தச் சமயம் நீர் போர்ப்பாடல்கள் இயற்றி தேசத்துக்கு உதவி செய்யவில்லை என்று குறை கூறுகிறார்களே!" என்று சொன்னார்.

அதற்கு கதே சொன்னார்:—"எல்லோரும் ஒரே விதமாகச் சேவை செய்யமுடியாது. ஒவ்வொருவரும் கடவுள் தந்துள்ள சக்திக்குத் தக்கபடி சேவை செய்வார். அத்துடன் துவேஷம் கொள்ளாமல் துவேஷப் பாடல்கள் பாடுவது எப்படி? என் மனத்தைத் திறந்து உம்மிடம் கூறுகிறேன். பிரஞ்சுக்காரர்கள் கையில் சிக்காததற்காகக் கடவுளைப் போற்றிய போதிலும் நாம் பிரஞ்சுக்காரர்களைத் துவேஷிக்கவில்லை. பண்பாடு குன்றிய விடத்திலேயே பகைமையுணர்ச்சி மிகுந்து தோன்றும்."

## படாடோபம்

### 301

அமரிக்காவில் பிரபலமான ராஜதந்திரியும் வக்கீலுமான ஜான்கோர்நாட் என்பவரிடம் ஒரு நாள் ஒரு படாடோபமான இளைஞர் வந்தார். வக்கீல் அதிக வேலையாக இருந்தபடியால் அவரை ஒரு நாற்காலியில் உட்காரும்படி கூறினார். ஆனால் இளைஞர் ஆத்திரப்பட்டுக் கொண்டு "நான் பிளாங் பாதிரியாருடைய மகன்" என்று சொன்னார்.

"அப்படியரானல் தயவு செய்து இரண்டு நாற்காலிகளில் உட்காருங்கள்" என்று வக்கீல் சொன்னார்.

## பணியாள்
## 302

17-ம் நூற்றாண்டில் பிரான்ஸ் நாட்டில் மிகக் கீர்த்தி வாய்ந்தவராகயிருந்த தளபதி டூரின் என்பவரிடம் பணியாளாக இருந்தவன் சேனையில் மிகுந்த பலமுள்ள வனாகயிருந்த ஒரு போர்வீரன். அவன் அடிக்கடி மற்றொரு பணியாளனாகிய ஸ்டீவன் என்பவனுடன் அடிக்கடி சண்டையிடுவதுண்டு.

ஒரு நாள் தளபதி தம்முடைய கைகளை இடுப்பில் வைத்துக்கொண்டு குனிந்து நிற்க நேர்ந்தபோது அந்தப் பணியாள் அந்த அறைக்குள் வந்தவன் ஸ்டீவன் என்று எண்ணி முதுகில் பலமாகக் குத்தினான்.

தளபதி திரும்பியபோது தவறு செய்து விட்டதை அறிந்து அவருடைய காலில் விழுந்து, ஸ்டீவன் என்று எண்ணிவிட்டேன், மன்னிக்க வேண்டும் என்று கெஞ்சினான்.

அப்போது தளபதி அடிபட்டு வேதனை தந்த யிடத்தைத் தடவி விட்டுக்கொண்டு "அது சரிதான், ஆனாலும் ஸ்டீவன் என்றாலும் இவ்வளவு பலமாகக் குத்த லாமா?" என்று கேட்டுவிட்டு அவனை மன்னித்து அனுப்பினார்.

## பணிவு
## 303

பண்டைக் காலத்தில் ரோமாபுரியில் பெரிய மனிதர் களுக்குச் சிலை நாட்டுவது பெரு வழக்காயிருந்தது. அதைக் கண்டதும் கேட்டோ என்னும் பேரறிஞர் "ஏன் கேட்டோவுக்குச் சிலை நாட்டியுள்ளர் என்று மக்கள் கேட்ப

தற்குப் பதிலாக, ஏன் கேட்டோவுக்குச் சிலை நாட்டவில்லை என்று கேட்பதையே நான் விரும்புகின்றேன்" என்று கூறினார்.

## 304

ஆப்பிரகாம் லிங்கன் அமெரிக்க நீதிபதியாயிருந்த காலத்தில் ஒரு நாள் அவர் தம்முடைய பூட்சுகளைத் துடைத்துச் சுத்தம் செய்துகொண்டிருந்தார்.


லிங்கன்

அதைக் கண்ட நண்பரொருவர் நாட்டின் தலைவர் சாதாரணப் பணியாள் போல் வேலை செய்வதற்காக ஆச்சரியப்பட்டு லிங்கனிடம்" என்ன, நீங்கள் உங்கள் பூட்சுகளைத் துடைத்துக் கொள்கிறீர்களே" என்று கேட்டார்.

அதற்கு ஆப்பிரகாம் லிங்கன் "அப்படியானால் நான் யாருடைய பூட்சுகளைத் துடைக்க வேண்டும் என்று கூறுகிறீர்கள்" என்று பதிலளித்தார்.

## 305

ஆங்கில மொழியில் முதன் முதலாக அகராதி தயாரித்தவர் டாக்டர் சாமுவெல் ஜான்ஸன் என்னும் பேரறிஞர். அவரிடம் ஒருநாள் இரண்டு பெண்கள் வந்து அவர் தம்முடைய அகராதியில் அசங்கியமான சொற்களைச் சேராதிருந்தற்காகப் பாராட்டினார்கள்.

அதைக் கேட்டதும் டாக்டர் ஜான்ஸன் " அப்படியானால், நண்பர்களே! நீங்கள் அந்தச் சொற்களைத் தேடினீர்களோ?" என்று கேட்டார்.

## 306

பேர்பெற்ற ஜெர்மன் நாவலாசிரியர் தாமஸ் மேன் என்பவர் ஒரு சமயம் அமரிக்காவுக்குச் சென்றிருந்த போது ஓர் அமரிக்க எழுத்தாளர் அவரைப் பார்க்க வந்தார். அவர் மேனிடம் "தங்களைப் போன்ற கலைஞர் முன்னிலையில் நான் ஒரு அற்ப ஆசிரியன்" என்று மிகுந்த பணிவுடன் கூறினர்.

அவர் விடைபெற்றுக் கொண்டு போனபின்னர் தாமஸ் மேன் தாம் தங்கியிருந்த வீட்டாரிடம் "ஆனலும் இவ்வளவு சிறியவராகத் தம்மை ஆக்கிக்கொள்ள இவருக்கு உரிமை கிடையாது. இவர் அவ்வளவு பெரியவர் அல்லவே?" என்று கூறினர்.

## 307

ஜெர்மனியில் பான் நகரத்தில் பீட்ஹோவன் என்ற பெயருடைய மிகப்பெரிய இசைவலாளர் ஒருவர் இருந்தார். அவருடைய வீட்டை ஞாபகார்த்தப் பொருட்காட்சி சாலையாகச் செய்தனர். ஒரு நாள் ஓர் அமெரிக்கப் பெண் அங்கு போனபோது அங்கிருந்த காவலாளிக்குப் பணம் கொடுத்து பீட்ஹோவன் பயின்ற பியானேவில் பயின்று பார்க்க அனுமதி பெற்றுள். காட்சிசாலையை விட்டு வெளியே வரும்போது அவள் அக் காவலாளியிடம் "இங்கு வரும் சிறந்த சங்கீத வித்வான்கள் எல்லோரும் இந்த வாத்தியத்தில் வாசித்துப் பார்த்திருப்பார்கள் அல்லவா?" என்று கேட்டாள்.

அதற்கு அந்தக் காவலாளி "அம்மா! இல்லை. இரண்டு ஆண்டுகட்கு முன் பத்ரேஸ்கி வந்திருந்தார். அதைத் தொடக்கூட நான் அருகனல்லேன் என்று கூறினர்" என்று சொன்னர்.

பத்ரேஸ்கி என்பவர் போலந்து நாட்டில் பியானே வாசிப்பதில் மிகக் கீர்த்தி பெற்றவர்.

## 308

இத்தாலி நாட்டில் 15-ம் நூற்றுண்டிலிருந்த உலகப் பிரசித்தி பெற்ற ஓவியர் லியனர்டோ டா வின்ஸி என்பவர் இறக்கும் தருவாயில் இருந்தபோது அவரைப் பார்த்து தைரியம் கூறுவதற்காக அந்த நாட்டு அரசர் வந்தார்.

அவரைக் கண்டதும் வின்ஸி சிரமத்துடன் தலையைத் தூக்கிக் கொண்டு "நான் கலைக்காக எவ்வளவு பாடுபட்டிருக்க வேண்டுமோ அவ்வளவு பாடுபடாமல் கடவுளுக்கும் மனிதர்க்கும் அபசாரம் செய்து விட்டேன்" என்று கூறி வருந்தினர்.

## பரம்பரை

## 309

உலகப் பிரசித்திப் பெற்ற பிரஞ்சு நாவலாசிரியர் டூமாஸ் என்பவரிடம் ஒரு நாள் ஒரு பத்திரிகை நிருபர் வந்து பேசிக் கொண்டிருந்தார். நிருபர் ஆசிரியருடைய குலத்தைப் பற்றி கேட்க விரும்பி "தாங்கள் குவாட்ரூண் (அதாவது கால்வாசி நீக்ரோ ரத்தம் உடைய) குலம் என்று கூறுகிறுர்களே, அது உண்மைதானு?" என்று கேட்டார்.

அதற்கு டூமாஸ் "ஆம் உண்மைதான்" என்று பதிலளித்தார்.

"அப்படியானல் தங்கள் தந்தை—?"

"ஒரு முலாட்டோ (அதாவது ஐரோப்பியருக்கும் நீக்ரோவருக்கும் பிறந்தவர்)"

"உம்முடைய பாட்டனரோ?"

"அவர் நீக்ரோவர்".

டூமாஸ்க்கு கோபம் உண்டாய்க் கொண்டிருந்தது. ஆனாலும் நிருபர் தைரியமாக "உம்முடைய பாட்டனார் யார் என்று கூறலாமா?" என்று கேட்டார்.

அதற்கு டூமாஸ் "அய்யா! அவர் ஒரு குரங்கு! ஆம் ஒரு குரங்குதான், உம்முடைய குலம் எங்கு முடிவுற்றதோ அங்கேயே என்னுடைய குலம் தொடங்கியது" என்று முழங்கினார்.

## பழக்கம்

## 310

பண்டைக் காலத்தில் கிரீஸ் நாட்டிலிருந்த உலகம் புகழும் பேரறிஞரான பிளேட்டோ என்பவர் ஓர் இளைஞர் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டதும் அதைக் கண்டித்தார்.


பிளேட்டோ

அப்போது அவ்விளைஞரும் "இந்த அற்ப விஷயத்திற்காகக் கண்டிக்கிறீர்களே?" என்று சொன்னார்.

அதற்கு அவர் "அப்பா! பழக்கம் என்பது அற்பமான விஷயமல்லவே?" என்று கூறினார்.

## பாண்டித்தியம்

## 311

பிரான்ஸ் நாட்டிலுள்ள பேர்பெற்ற இலக்கியக் கழகமானது ஒரு சமயம் ஒரு பெரிய அகராதி தயார் செய்தது.

அதில் நண்டு என்பது "பின்நோக்கி நடக்கும் சிறிய சிவந்த மீன்" என்று எழுதியிருந்தது.


கூவியர்

அதைக் கண்ட உலகப் புகழ் வாய்ந்த உயிரியற் புலவரான கூவியர் என்பவர் "நண்டு மீனுமில்லை, சிவந்ததுமில்லை, பின்நோக்கி நடப்பதுமில்லை. மற்றப்படி இந்த அகராதி கூறும் இலக்கணம் சரிதான்!" என்று கூறினர்.

## பாரம்பரியம்

## 312

அமரிக்க ஹாஸ்ய ஆசிரியர் மார்க் ட்வைன் என்பவர் ஒரு சமயம் இங்கிலாந்துக்குப் போயிருந்தபோது அங்குள்ள நண்பர் ஒருவர் அவரைப் பொருட்காட்சி சாலைக்கு அழைத்துப் போனர். அங்கே அவர்கள் இருவரும் படங்களைப் பார்த்து வரும்போது ஆங்கில மன்னன் முதலாம் சார்லஸை விசாரணை செய்து தூக்குத் தண்டனை விதித்த நீதிமன்றத்தைச் சித்திரித்த படம் ஒன்று இருந்தது.

அந்த நீதி மன்றத்தின் குமாஸ்தாக்களுள் ஒருவரைத் தொடடுக் காட்டி மார்க் ட்வைனுடன் வந்த நண்பர் "இவர் என்னுடைய மூதாதையர்களுள் ஒருவர்" என்று கூறினர்.

இந்த மாதிரி பெருமை பேசுவது ட்வைனுக்குப் பிடிக்காது. அவர் உடனே நீதிபதிகளுள் ஒருவரைத் தொட்டுக் காட்டி "இவர் என்னுடைய மூதாதையர்களுள் ஒருவர். ஆனால் அது ஒரு பெரிய காரியமில்லை. எனக்கு இன்னும் பல மூதாதையர்கள் உளர்" என்று கூறினர்.

# பாவம்

## 313

இயேசு கிறிஸ்து தாம் கூறும் உபதேசங்களை நம்பின யூதர்களைப் பார்த்து "நீங்கள் என்னுடைய சொற்களில் உறுதியுடையவர்களானால், நீங்கள் என்னுடைய சீடர்களே ஆவீர்கள். நீங்கள் உண்மையை அறிவீர்கள், உண்மை உங்களுக்கு விடுதலை அளிக்கும்" என்று கூறினார்.

அப்போது அவர்கள் "நாங்கள் ஆப்பிரகாம் வம்சத்தினர், ஒருநாளும் யாருக்கும் அடிமையாயிருந்ததில்லை. அப்படியிருக்க நீங்கள் விடுதலை பெறுவீர்கள் என்று கூறுகிறீரே, அது எங்ஙனம்?" என்று கேட்டார்கள்.

அதற்கு இயேசு கிறிஸ்து "நான் உறுதியாகச் சொல்வதைக் கேளுங்கள். எவன் பாவம் செய்கின்றானோ அவன் பாவத்தின் அடிமையாவான்" என்று பதிலளித்தார்.

## 314

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் அமரிக்காவில் எட்வின்பூத் என்ற ஒரு பிரபல நடிகர் இருந்தார். அவர் ஷேக்ஸ்பியர் இயற்றிய நாடகங்களை நடிப்பதில் உலகப் பிரசித்தி பெற்றவர்.

அக்காலத்தில் நாடகங்களைப் பார்ப்பது பாவம் என்று பாதிரிமார்கள் கருதினார்கள். ஆயினும் எட்வின் பூத் நடிப்பதைப் பார்க்கவேண்டும் என்ற ஆசை பாதிரியார் ஒருவருக்கு அளவுகடந்து உண்டாயிற்று.

ஆனால் அவர், தாம் நாடகக் கொட்டகைக்கு வருவது யாருக்கும் தெரியாவண்ணம் வேறு வாசல் வழியாக வர ஏற்பாடு செய்யவேண்டுமென்று நடிகர் பூத்துக்குக் கடிதம் எழுதினார்.

அதற்கு பூத் "கடவுள் காணமுடியாத வாசல் எதுவும் என்னுடைய நாடகக்கொட்டகையில் இல்லை" என்று பதில் அனுப்பினார்.

## பிரசங்கம்

### 315

ஹென்றி வார்ட் பீச்சர் என்ற பிரபல அமரிக்க மத போதகர் ஒருநாள் ஓர் ஊரில் பிரசங்கம் செய்துகொண்டிருந்தபோது ஒரு குடிகாரன் சேவல் கூப்பிடுவதுபோலக் கத்தினான்.

அதைக் கேட்டதும் பீச்சர் கொஞ்சமும் மனம் குழம்பாமல், தம்முடைய கடிகாரத்தை எடுத்துப் பார்த்துவிட்டு "என்ன! அதற்குள் விடியற்காலை ஆய்விட்டதா? அப்படி எனக்குத் தோன்றவில்லை. ஆனால் கோழிகள் கூவுவதை மறுக்க முடியாது" என்று கூறினார்.

### 316

டாக்டர் வால்டர் வில்லியம்ஸ் என்னும் அறிஞர் சைனா தேசத்துக்குப் போயிருந்தபோது அவர் அங்குள்ள ஒரு பல்கலைக் கழகத்தில் பிரசங்கம் செய்ய நேர்ந்தது.

வில்லியம்ஸ் ஆங்கிலத்தில் பேசியபடியால் அவர் பேசப் பேச சீன அறிஞர் ஒருவர் சீன மொழியில் மொழிபெயர்த்து ஒரு கரும்பலகையில் எழுதிக்கொண்டு வந்தார்.

ஆனால் தாம் பேசும்போது சில சமயம் நீண்டநேரம் சீன அறிஞர் எழுதாதிருப்பதைக் கண்டு வில்லியம்ஸ் பிரசங்க முடிவில் அதன் காரணத்தைக் கேட்டார்.

அதற்கு அவர்கள் "பிரசங்கத்தில் ஏதேனும் சாரமான விஷயம் இருந்தால்தான் நாங்கள் எழுதுவது வழக்கம்" என்று கூறினார்கள்.

## 317

19-ம் நூற்றுண்டில் ஸ்விட்ஜர்லாந்து நாட்டிலிருந்த பேர்பெற்ற உயிரியற் புலவரான அகாஸிஸ் என்னும் பேராசிரியரை ஒரு சங்கத்தில் வந்து பிரசங்கம் செய்யு மாறு அழைத்தார்கள்.

அவர் வர மறுத்தார். அவரை அழைக்க வந்தவர் அவருடைய சொற்பொழிவுக்குத் தக்கவாறு சன்மானம் செய்வதாகக் கூறினர்.

அப்பொழுது அகாஸிஸ் " அது எனக்குப் பெரி தன்று, பணம் உண்டாக்குவதற்காக நான் என்னுடைய நேரத்தை வீணுக்க முடியாது" என்று கூறினர்.

## 318

அமரிக்கர்வில் நகைச் சுவை அரசர் என்று போற்றப் பெற்ற மார்க் ட்வைன் என்பவர் ஒரு சமயம் பிரசங்கம் செய்வதற்காக ஓர் ஊருக்குச் சென்றிருந்தார்.

பிரசங்கம் செய்வதற்குள் க்ஷவரம் செய்துகொள்ள ஒரு சலூனுக்குச் சென்ருர். நாவிதருக்கு இவர் யார் என்று தெரியாது.



ட்வைன்

" தாங்கள் அயலூர் போலிருக் கிறதே. இன்று மார்க் ட்வைன் பிர சங்கம் நடக்கப்போகிறது. தாங்கள் அதற்குப் போகிறீர்களா? அதற்கு டிக்கட் வாங்கிவிட்டீர்களா?" என்று கேட்டார்.

அதற்கு மார்க்ட்வைன் " ஆமாம் போகப்போகிறேன், ஆனல் இன்னும் டிக்கட் வாங்கவில்லை" என்று பதி லளித்தார்.

" அப்படியானால் நீங்கள் நிற்க வேண்டியதுதான் "

" ஆமாம், அப்படித்தான் நான் மார்க்ட்வைன் பிரசங்கம் கேட்கும்போதெல்லாம் நேரிடுகிறது " என்று ட்வைன் கூறினார்.

## 319

பிரசித்தி பெற்ற ஆங்கில எழுத்தாளர் சார்ல்ஸ் லாம் என்பவர் ஒரு சமயம் பிரசங்கம் செய்துகொண்டிருந்த போது, யாரோ ஒருவர் " ஹிஸ் " என்று தொனி செய்தார்.

பிரசங்கம் கேட்டுக்கொண்டிருந்தவர்கள் வருத்தப் பட்டார்கள். ஆனால் லாம் அணுவளவும் கலங்காமல் "ஹிஸ் என்று ஒலிப்பன மூன்று தான். ஒன்று வாத்து, ஒன்று பாம்பு, ஒன்று முட்டாள், இப்போது ஹிஸ் என்று ஒலித்தது இந்த மூன்றில் எது? அதை அறியும் பொருட்டு இங்கு வரட்டும் " என்று கூறினார்.

# பிரயாணம்

## 320

இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் கிரீஸ் தேசத்திலிருந்த சாக்கரட்டீஸ் என்னும் சான்றோரிடம் ஒரு சமயம் ஒருவர் வந்து தாம் பல நாடுகளில் பிரயாணம் செய்துவிட்டுவந்த விபரங்களைக் கூறினார்.

இறுதியில் அவர் தம்முடைய பிரயாணங்களால் எவ்வித பயனும் அடையவில்லை என்பதாகச் சொல்லி முடித்தார்.

அதைக்கேட்ட சாக்கரட்டீஸ் " ஆமாம், அது உண்மைதான். நீர் உம்மை உம்மோடு கூட்டிப்போனது தான் காரணம் " என்று கூறினார்.

## பிரார்த்தனை
## 321

அமரிக்காவில் ஜனாதிபதி ஆப்பிரகாம் லிங்கன் அடிமை நிலையை அகற்றிவிடுவதற்காகப் போர்செய்ய நேர்ந்தபோது ஒருநாள் ஒரு பாதிரியார் அவரிடம் "ஜனாதிபதி அவர்களே! கடவுள் நம்முடைய பெரிய இயக்கத்துக்குத் துணையாக இருந்துவருகிறார் என்று உறுதியாக நம்புவோமாக!" என்று கூறினார்.

அதற்கு ஆப்பிரகாம் லிங்கன் "அதைப்பற்றி நான் கவலைப்படவேயில்லை. ஏனென்றால் கடவுள் எப்போதும் நியாயத்துக்குத் துணையாகவே யிருப்பார். ஆனால் நான் சதாகாலமும் கவலைப்படுவதும் பிரார்த்திப்பதும் யாதெனில், நானும் இந்த நாட்டு மக்களும் கடவுளுக்குத் துணையாக இருக்கவேண்டுமே என்பதே யாகும்" என்று பதில் கூறினார்.

## பீத்தற்பெருமை
## 322

அமரிக்காவின் முதல் ஜனாதிபதியாயிருந்த பேர் பெற்ற தளபதி வாஷிங்டனுடைய வீடு மவுண்ட் வெர்னன் என்னுமிடத்திலிருந்தது. அதையும் அதைச் சுற்றியுள்ள தோட்டங்களையும் மக்கள் போய்ப் பார்த்து வருவதுண்டு.



வாஷிங்டன்

ஒருநாள் ஓர் ஆங்கில இளைஞர் தோட்டத்தைப் பார்த்துவரும்போது தோட்டக்காரரிடம் "என்ன, இந்த வேலி அழகாயிருக்கிறது, இதைத் தளபதி இங்கிலாந்திலிருந்து பெற்றார் என்று எண்ணுகிறேன்" என்று மிகுந்த இறுமாப்புடன் கூறினார்.

அதற்குத் தோட்டக்காரர் மெதுவாகச் சிரித்துக் கொண்டு “ஆமாம், அங்கிருந்துதான் பெற்ருர். ஆனல் அதுமட்டுமா பெற்ருர்? இந்த அழகான அமரிக்க நாடு முழுவதையுமே இங்கிலாந்திட மிருந்துதான் பெற்ருர்” என்று கூறினர்

## புகழ்

## 323

17-ம் நூற்ருண்டில் இங்கிலாந்து தேசத்தில் இருந்த உலகப் பிரசித்திபெற்ற பௌதிக சாஸ்திரத்தின் தந்தை என்று கூறப் பெறும் நியூட்டன் என்னும் பெரியார் ஒளியியல் பற்றி பல புது உண்மைகளைக் கண்டுபிடித்தார்.


நியூட்டன்

ஆனல் அதுபற்றி அறிஞர்கள் அநேகவிதமான சர்ச்சைகள் செய்தனர். அவர்களுடன் விவாதங்கள் செய்வது நியூட்டனுக்கு அதிக வேதனையாயிருந்தது. அதனல் அவர் ஜெர்மன் கணித சாஸ்திரியும் தத்துவ சாஸ்திரியுமான லீப்னிட்ஜ் என்னும் பேரறிஞர்க்குக் கீழ்க் கண்டவாறு கடிதம் எழுதினர்:—

“இவ்வாறு விவாதங்கள் கிளம்பி விட்டதால் கையிலகப்படாத புகழ் என்னும் நிழலை நாடிக், கையிலகப்பட்ட மனச் சாந்தி என்னும் நலத்தை இழந்து விடத்தக்க அறிவிலியாக ஆய்விட்டேன்.”

## 324

18-ம் நூற்றாண்டின் மத்தியில் பிரஷ்யாவின் அரசரா யிருந்த இரண்டாம் பிரடரிக் என்பவர் காலத்தில் நாடு விசாலமடைந்ததாலும் நாட்டினர் க்ஷேமமாக வாழ்ந்ததா லும் அவரை மகா பிரடரிக் என்று கூறுவார்கள்.

அவர் பல போர்களில் வென்றவர். ஒரு போர்க்களத் தில் அவருடைய போர்வீரர்கள் எதிரிப் படையினரைத் தாக்கத் தயங்கியபோது அவர் அவர்களைப் பார்த்து "என்ன, நீங்கள் அமரத்துவம் பெற விரும்புகிறீர்களா இல்லையா ?" என்று கேட்டார்.

அவ்வளவுதான், வீரர்கள் ஆவேசத்துடன் தாக்கி வெற்றி கொண்டனர்,

## 325

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் பிரதம மந்திரியாயிருந்த பீக்கன்ஸ்பீல்டு பிரபு அரசியல் துறையி லும் இலக்கியத் துறையிலும் புகழ் படைத்தவர். சிறந்த நாவலாசிரியர்.

அவர் விருத்தாப்பிய காலத்தில் நண்பர் ஒருவர் அவ ருடன் பேசிக்கொண்டிருந்தபோது "தாங்கள் புகழுக்காக நீண்டநாள் சிரமப்பட்டீர்களே இப்போது புகழ்பெற்றது இன்பம் அல்லவா ?" என்று கேட்டார்.

அதற்கு பீக்கன்ஸ்பீல்டு மெதுவாகத் தம்முடைய இரண்டு கைகளையும் கன்னங்களில் வைத்துத் தலையை அசைத்தார். ஏதோ தமக்குத் தாமே பேசுவதுபோல் தோன்றிற்று. பிறகு "கனவுகள்—கனவுகள்—கனவுகள்" என்று மெல்லிய குரலில் கூறினார்.

## 326

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்து தேசத்துப் பெரும் கவிஞர்களுள் ஒருவரான பைரன் பிரபுவும் ஐரிஷ் கவிஞர் தாமஸ் மூர் என்பவரும் ஒரு நாள் தேம்ஸ் நதிக் கரையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தபோது புகழ் என்பது பற்றிப் பேச நேர்ந்தது.


பைரன்

அவர்கள் புகழ் என்பது எத்தகையது என்பதுபற்றி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது நதியில் சென்ற ஒரு தோணியிலிருந்த மக்கள் மூர் இயற்றிய ஐரிஷ் கீதங்களில் ஒன்றைப் பாடிக்கொண்டிருந்தார்கள்.

பைரன் பிரபு உடனே குதித்தெழுந்து மூர் கவிஞரின் தோளில் கையை வைத்து "நண்பரே! புகழ் என்பது இதுதான்" என்று கூறினர்.

## பூமி ஆசை
## 327

சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்து தேசத்தில் புகழ் பெற்ற அரசியல் அறிஞராயிருந்த ரிச்சர்ட் காப்டன் என்பவர் ஒரு சமயம் அமரிக்காவுக்குச் சென்றிருந்தபோது ஓர் அம்மையாரிடம் "அமரிக்காவில் மனித சஞ்சார மில்லாத பகுதிகள் ஏராளமாக இருக்கின்றனவே, அப்படியிருக்க அயலார் நாட்டின்மீது ஆசைப்படுவதேன்?" என்று கேட்டார்.

அதற்கு அவ்வம்மையார் "ஆம், அந்தக் குணம் அதர்மமானதுதான், அதை நான் ஏற்றுக்கொள்கிறேன் ஆனல் அந்த ஆசையை நாங்கள் நியாயமான வழியி

லேயே பெற்றோம். அதை நாங்கள் இங்கிலாந்திட மிருந்தே பரம்பரை பாத்தியமாக அடைந்தோம்'' என்று கூறினர்.

## பெண்

### 328

**கி. மு.** ஐந்தாம் நூற்றாண்டில் கிரீஸ் நாட்டிலுள்ள ஸ்பார்ட்டா என்னும் பகுதியில் அரசரா யிருந்த லியோனிதாஸ் என்பவர் மிகச் சிறந்த வீரர். முன்னூறு ஸ்பார்ட்டா வீரர்களுடன் தெர்மாபோலி கணவாயில் பாரசீகப் படை வெள்ளத்தை எதிர்த்து நின்று வீர சொர்க்கம் புகுந்தவர்.

அவருடைய மனைவியார் கார்கோ என்பவரிடம் ஒரு நாள் அன்னிய நாட்டு அம்மையார் ஒருவர் பேசிக் கொண்டிருந்த போது ''ஆண்களை ஆளும் பெண்கள் இந்த நாட்டுப் பெண்கள் மட்டுமே'' என்று கூறினர்.

அதற்கு கார்கோ அம்மையார் ''ஆமாம், அதற்குக் காரணம் நாங்கள் மட்டுமே ஆண்களைப் பெறுகின்றோம்'' என்று பதிலளித்தார்.

## பெண் கல்வி

### 329

**ப**தினெட்டாம் நூற்றாண்டில் இங்கிலாந்து நாட்டில் பெரும் புகழ் படைத்த கடற்படைத் தளபதியாயிருந்த காலிங்வுட் பிரபு என்பவர் காயமடைந்து கப்பலில் இறக்கும் தருவாயிலிருந்த போது தம்முடைய மனைவியார்க்கு எழுதியனுப்பிய கடிதத்தில் கீழ்க் கண்ட மொழிகள் உள:—

''நம்முடைய குமாரிகளை வீண் பொழுதுபோக்கும் சீமாட்டிகளாக வளர்த்து விடலாகாது. அவர்களுக்கு

உலக அறிவு தரவேண்டும். அவ்வாறு செய்தால் நீயும் நானும் தேவலோகம் சென்ற பின்னர் அவர்கள் தங்களைக் காப்பாற்றிக்கொள்ளக் கூடிய ஆற்றல் வாய்ந்தவராக இருப்பார்கள். என்னுடைய வாழ்த்தை அவர்களிடம் கூறி அவர்கள் எப்போதும் சுருசுருப்பா யிருக்கவேண்டும் என்று கூறு"

## பெண்கள் ஓட்டுரிமை

### 330

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்து தேசத்தில் பெண்கள் தாங்கள் ஆண்களுடன் சரிசமமானவர்களே என்றும் தங்களுக்கும் ஆண்களுக்கு வழங்கியுள்ளது போல் ஓட்டுரிமை வழங்க வேண்டு மென்றும் பெருங் கிளர்ச்சி செய்தார்கள். அதன் காரணமாகப் பலர் சிறை புகவும் நேர்ந்தது.

அவ்வாறு சிறை சென்றவர்களுள் பல முறை சிறை சென்று பழகிய ஒரு வயதான பெண் அடைபட்டிருந்த அறைக்கு அடுத்த அறையில் முதன் முதலாகச் சிறை அனுபவம் பெற்றுள்ள ஒரு சிறு பெண் அடைபட்டிருந்தாள்.

இந்தச் சிறு பெண்ணுக்கு சிறையிலிருந்தது கஷ்டமாயிருந்தது. அதை அறிந்த வயதான பெண் அவளிடம் "அம்மா பெண்ணே! வருந்தாதே. கடவுளிடம் நம்பிக்கை கொள். அவள் உன்னைக் காப்பாள்" என்று கூறினாள்.

## பெரியோர்

### 331

இருநூறு வருடங்கட்கு முன் ஐரோப்பா முழுவதும் மிகச் சிறந்த இசைவலாளர் என்று புகழ்படைத்த மோஜார்ட் என்பவர் மிகச் சிறுவயதிலேயே இசைவன்மை பெற்றவர்

அவர் இத்தாலி சென்று தமது புகழ்க்கொடி நாட்டி வரும்போது ஜெர்மனியிலுள்ள தம்முடைய தமக்கை யார்க்கு எழுதிய கடிதமொன்றில் "அக்கா! இங்கே கடையில் சமான்கள் வாங்கினல் விலையைச் சரியாகக் கூட்டிக் கணக்குப் பண்ணத் தெரியவில்லை. அது வெட்கமாயிருந்தது. அதனல் என்னுடைய கணக்கு வாய்பாடு புஸ்தகத்தை எனக்கு அனுப்பிவை" என்று எழுதினர்.

## பெருந்தன்மை

### 332

ஸர் மோஸஸ் மாண்டிபியோர் என்பவர் இங்கிலாந்து நாட்டிலிருந்த ஒரு பிரபலமான யூதர். அவர் ஒரு விருந்துக்குச் சென்றிருந்த பொழுது ஒருவர் மாண்டிபியோர் யூதர் என்பதை மறந்து அந்தப் பக்கமாகச் சென்ற ஒரு யூதப் பெண்ணின் லட்சணத்தைப் பற்றிக் குறை கூறினர்: ஆனல் உடனேயே தம் பிழையை உணர்ந்து கொண்டு மாண்டிபியோரிடம் "தாங்கள் என்னை மன்னித்தருளவேண்டும், நான் மறந்து பேசியது என் முட்டாள் தனம். நீங்கள் என்னை கோபமாகப் பார்க்கிறீர்கள். என்னை விழுங்கிவிடாதபடி இறைஞ்சுகின்றேன்" என்று மன்னிப்புக் கோரினர்.

அப்பொழுது மாண்டிபியோர் "அய்யா! தங்களை விழுங்குவது முடியாத காரியம். என்னுடைய மதம் தடுக்கின்றது." என்று கூறினர்.

### 333

அமெரிக்காவில் பிரடரிக் டக்ளாஸ் என்னும் நீக்ரோ ஆசிரியரை ஜனதிபதி ஆப்பிரகாம் லிங்கன் ஒரு சமயம்


லிங்கன்

தம்முடன் விருந்துண்ண வருமாறு அழைத்திருந்தார்.

அதைப் பற்றிப் பேச நேர்ந்தபோதெல்லாம், அந்த ஆசிரியர் "ஒருமணி நேரம் பேசிக்கொண்டிருந்தாலும் நான் ஒரு நீக்ரோ என்பதை நினை ஊட்டாமலிருந்த முதல் வெள்ளையர் லிங்கனே" என்று மிகுந்த மகிழ்ச்சியுடன் கூறுவார்.

## 334

உலகப் புகழ் பெற்ற அமெரிக்க ஜனாதிபதி ஆப்பிரகாம் லிங்கன் அந்தப் பதவி வருமுன் வக்கீலாக இருந்தார். ஒரு நாள் ஒரு கட்சிக்காரர் வந்து தம்முடைய வழக்கைப்பற்றி லிங்கனிடம் கூறிக்கொண்டிருந்தபோது, லிங்கன் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு கடைசியில்— "அப்பா! சட்டப்படி பார்த்தால் உன்னுடைய வழக்கு சரியானதே. ஆனால் தர்ம நியாயப்படி பார்த்தால் அநியாயமானதாகும். அதனால் உனக்காக நான் நீதிமன்றத்தில் பேசினால் என்னுடைய மனம், என்ன லிங்கன்! பொய் பேசுகிறாயே என்று கேட்டுக் கொண்டே இருக்கும். என்னை மறந்து நான் அதை வாய்விட்டுக் கூறினாலும் கூறிவிடுவேன்" என்று கட்சிக்காரரிடம் கூறினார்.

## 335

பிரான்ஸ் நாட்டில் 17-ம் நூற்றாண்டில் பெரும்புகழ் படைத்த மந்திரியா யிருந்த ரிச்லோ என்பவரிடம் ஒரு நாள் ஒருவர் வந்து அவருக்குப் பிரியமா யிருக்குமென்று எண்ணி அவரைப் பற்றிச் சிலர் அவதூறாகப் பேசுவதாகக் கூறினார்.

அவருக்குக் கோபம் உண்டாயிற்று, "என்ன சொல்லுகிறாய்? பிறர் கூறியதாகச் சொல்லிக்கொண்டு என்னை ஏச வந்திருக்கிறாயோ?" என்று கூறிவிட்டுத் தம்முடைய பணியாளைக் கூப்பிட்டு "இந்தப் பயலை வெளியே துரத்து" என்று கூறினார்.

## 336

ஒரு நாள் நியூயார்க் நகரத்தில் நீக்ரோ ஒருவர் கனத்த பைகள் இரண்டைத் தூக்கிச் கொண்டு ரயில்வே ஸ்டேஷனிலிருந்து தமது ஹோட்டலுக்குப் போய்க் கொண்டிருந்தார்.

அப்போது அந்தச் சாலையில் நடந்துவந்தவர் ஒருவர் "நண்பரே! அதிகக் கனம் போல் தெரிகிறது, ஒன்றை என்னிடம் தாரும், நானும் அந்தப் பக்கம் தான் போகிறேன்" என்று கூறினார்.

நீக்ரோவருக்குப் பிரியமில்லை. ஆயினும் வந்தவர் வற்புறுத்தவே சம்மதித்தார். இருவரும் பழைய நண்பர்கள் போல் பேசிக்கொண்டே நடந்தார்கள்.

பிற்காலத்தில் கீர்த்தி பெற்ற நீக்ரோ அறிஞர் புக்கர் வாஷிங்டன் என்பவர் "அதுதான் நான் முதன் முதலாக தியடோர் ரூஸ்வெல்டைச் சந்தித்ததாகும்" என்று கூறினார். தியடோர் ரூஸ்வெல்ட் அமரிக்க ஜனாதிபதியாயிருந்த பெரியார்.

## 337

16-ம் நூற்றாண்டில் ஸ்பெய்ன் தேசத்தை அரசாண்ட ஐந்தாம் சார்ல்ஸ் என்னும் மன்னர் மிகுந்த புகழுடையவராயிருந்தார். அவருடைய முக்கிய நோக்கம் கிறிஸ்தவ மதச் சீர்திருத்த இயக்கத்தை ஒழிப்பதாகவே இருந்தது. ஆனால் அவர் அதில் வெற்றிபெறவில்லை.

அவர் ஒருநாள் அந்த இயக்கத்தைத் தோற்றுவித்த மார்டின் லூதர் என்னும் பெரியாருடைய கல்லறையைக் காண நேரிட்டபோது அவருடன் வந்தவர்கள் நமக்கு விரோதியானவருடைய கல்லறை இது, அதைத் திறந்து உடலை எடுத்து எரிக்க வேண்டும் என்று யோசனை கூறினார்கள்.

அப்போது சார்ல்ஸ் மன்னர் "நான் இறந்தவர்களுடன் போர் புரிவதில்லை" என்று கூறினார்.

## 338

இருநூறு ஆண்டுகட்கு முன் பிரான்ஸ் தேசத்தில் நெப்போலியன் என்னும் சக்கரவர்த்தி அரசாண்ட காலத்தில் அந்த நாட்டுக்கும் இங்கிலாந்துக்கும் பகைமையாகவே இருந்து வந்தது.



டேவி

ஆயினும் மின்சார விளக்கு முதலிய பல விஞ்ஞான உண்மைகளைக் கண்டுபிடித்த பேரறிஞர் ஸர் ஹம்பிரி டேவி என்பவரைப் பாராட்டி பிரான்ஸ் கழகம் என்னும் அறிஞர்குழாம் அவருக்குத் தங்கப் பதக்கம் அளிக்க விரும்பியது.

அப்பொழுது அவருடைய நண்பர்களில் சிலர் பிரான்ஸ் நாட்டினரிடமிருந்து பெறுவதா என்று எண்ணி அதை மறுத்துவிடுமாறு டேவியிடம் கூறினார்கள்.

ஆனல் டேவியோ "இரண்டு நாடுகளோ அரசாங்கங்களோ போர் புரிந்தாலும் விஞ்ஞானிகளாகிய நாம் போர் புரிவதில்லை" என்று பெருந்தன்மையுடன் கூறினர்.

## 339

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் மகா அலக்ஸாண்டர் என்னும் கிரேக்கச் சக்கரவர்த்தி கீர்த்தி பெற்ற வீரர். அவர் இந்தியா மீது படை யெடுத்து வந்தார். அவரை போரஸ் என்னும் இந்திய அரசர் எதிர்த்தார். ஆனல் வெற்றி பெறவில்லை. அலக்ஸாண்டருடைய போர்வீரர்கள் போரஸ் அரசரைச் சிறைப்படுத்தி அலக்ஸாண்டரிடம் கொண்டுவந்து நிறுத்தினர்கள்.

அப்போது அலக்ஸாண்டர் போரஸ் அரசரை நோக்கி "நான் உம்மை எவ்விதம் நடத்த வேண்டும் என்று விரும்புகின்றீர்?" என்று கேட்டார்.

அதற்குப் போரஸ் மன்னர் "ஓர் அரசனைப்போல்" என்று பதிலளித்தார்.

அலக்ஸாண்டர் அவருக்கு அவருடைய நாட்டைத் திருப்பித் தந்து அனுப்பினர்.

# பெருமை

## 340

இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் கிரீஸ் தேசத்திலிருந்த மகா அலக்ஸாண்டர் என்னும் அரசர் பெரிய வீரர், இந்தியாமீது கூடப் படையெடுத்தவர்.

அவர் பிறந்தபொழுது அவருடைய தந்தை பிலிப் என்னும் அரசர் உலகப் பிரசித்தி பெற்ற பேரறிஞர் அரிஸ்டாட்டில் என்பவருக்கு மகன் பிறந்துள்ள செய்தி குறித்து எழுதிய கடிதம் இது:—

"அரிஸ்டாட்டிலுக்குப் பிலிப் எழுதிக்கொள்வது யாதெனில் வணக்கம். எனக்கு மகன் பிறந்துள்ளான் என்பதை அறியவும். குழந்தை பிறந்திருப்பதற்காகக் கடவுளுக்கு வந்தனம் அளிப்பதைவிட அதிகமாக அவன் தங்கள் காலத்தில் பிறந்திருப்பதற்காக வந்தனம் அளிக்கின்றேன். தங்களிடம் கல்வி பயின்று இந்தக் குடும்பத்தின் புகழை உயர்த்தக்கூடிய அரசனாவான் என்று நம்புகிறேன்"

## 341

இயேசு கிறிஸ்துவின் சீடர்கள் தங்களுக்குள் பெரியவர் யார் என்பதுபற்றி விவாதித்தார்கள்.

அதை யறிந்ததும் இயேசு அவர்களை அழைத்து இவ்வாறு கூறினார்:—

"யாரேனும் முதன்மை பெற விரும்பினால் அவர் அனைவரிலும் கடையராகவும் ஊழியராகவும் இருக்கக் கடவர்."

## 342

ஐம்பது ஆண்டுகட்கு முன் ஆங்கில நாட்டில் பிரதம மந்திரியாயிருந்த ஸர் ஹென்ரி காம்பல் பானர்மன் என்பவர்க்கு ஸ்காட்லாந்து தேசத்தில் வீடும் தோப்புக்களும் துரவுகளுமிருந்தன.

அவர் அங்கு போனால் தோட்டங்களை சுற்றிப் பார்ப்பார். பார்த்து வரும்போது தமக்குப் பிரியமான மரங்களிடம் வந்ததும் தம்முடைய தலையிலுள்ள தொப்பியை எடுத்து வணக்கம் செய்வார்.

## 343

**செ**ன்ற நூற்றாண்டில் இங்கிலாந்து தேசத்தில் கார்லைல் என்ற பெயருடைய ஒரு பேரறிஞர் இருந்தார்.

அவர் செல்ஸி என்ற இடத்தில் வாழ்ந்ததால் அவரை செல்ஸி ஞானி என்று கூறுவர். அவர் சிறந்த எழுத்தாளர், விமர்சகர்.

அவர் புரூட் என்னும் சரித்திராசிரியருடன் அடிக்கடி போகக்கண்ட பஸ் கண்டக்டர் ஒருவர் ஒருநாள் புரூட் தனியாக வந்தபோது "தங்களுடன் வருவாரே, அவர் ஒரு பெரியார். அவரைப்பற்றி நாங்கள் அடிக்கடி பேசுவதுண்டு" என்று கூறினர்.

அதற்கு புரூட் "ஆமாம், அதனல்தான் அரசியாரும் அவருக்கு ஒரு பட்டம் அளிப்பதாகக் கூறினர். ஆனல் அவர் அதை வேண்டாம் என்று மறுத்துவிட்டார்" என்று சொன்னர்.

"அரசியார் கொடுப்பதாகச் சொன்னதும் சரி, அவர் வேண்டாம் என்று சொன்னதும் சரி, அவரைப் போன்றவரை யாரால் தக்கபடி கௌரவிக்க முடியும்?" என்று பஸ் கண்டக்டர் கூறினர்.

## 344

இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன் கிரீஸ் தேசத்தில் மக்கள் சம்மதத்துடன் அரசாண்ட பெரியாரான பெரிக்ளிஸ் என்பவர் இறக்கும் தறுவாயிலிருந்தபோது அவருடைய நண்பர்கள் அவர் பெற்ற போர் வெற்றிகளேயும், செய்த பெரிய காரியங்களேயும் பாராட்டிப் பேசிக் கொண்டிருந்தனர்.

பெரிக்ளிஸ் அவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டு இருந்து விட்டுக் கடைசியில் அவர்களேப் பார்த்து "இவற்றை எல்லாம் இதன் முன் இருந்த வீரர்களும் செய்துள்ளார். இவை எல்லாம் பெரும்பாலும் அதிர்ஷ்டவசமாக ஏற்படக்கூடியவையே. நீங்கள் பாராட்ட வேண்டியதைப் பாராட்டவில்லே. என்னல் யாரும் துக்கம் அடைந்ததில்லே. அதுவே பெருஞ் செயல்" என்று கூறினர்.

## 345

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்தில் கேர்ஹார்டி என்ற பெயருடைய பிரபல பார்லிமெண்டு அங்கத்தினர் ஒருவர் இருந்தார். அவர் சிறு வயதில் நிலக்கரி சுரங்கத்தில் வேலை செய்தார். பின்னர் எழுத்தாளராகி சட்டசபை மெம்பரானார்.

அவர் ஒருநாள் சட்ட சபைக்குச் சென்றபோது அவருடைய எளிய உடையைக் கண்டதும் வாசலில் நின்ற போலீஸ்காரர் அவரை ஒரு வீடுகட்டும் தொழிலாளி என்று எண்ணி "தம்பி! இங்கே வேலை செய்கிறாயா?" என்று கேட்டார்.

"ஆம்" என்று கேர்ஹார்டி கூறினார்.

"கூரையின் மீதா?"

"இல்லை, தளத்தின் மீதே" என்று கேர்ஹார்டி பதிலளித்துவிட்டுச் சட்ட சபைக்குள் சென்றார்.

## 346

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்து தேசத்தில் வாழ்ந்த ஸர் வில்லியம் ஹெர்ஷல் என்பவரே யுரானஸ் என்னும் கிரகத்தைக் கண்டுபிடித்தார். மிகப் புகழ் வாய்ந்த வானசாஸ்திரி.

அக்காலத்தில் இங்கிலாந்தை அரசாண்ட மூன்றும் ஜார்ஜ் மன்னர் ஹெர்ஷலுக்கு "ஆஸ்தான வானசாஸ்திரி" என்ற பதவியைத் தந்து அவருக்கு இருநூறு பவுன் சன்மானமளித்தார்.

அப்பொழுது ஹெர்ஷல் அறிஞருடைய நண்பரான ஸர் வில்லியம் காட்ஸன் என்பவர் "இதற்கு முன் எந்த அரசரும் தமக்கு கௌரவத்தை இவ்வளவு மலிவாக தேடிக்கொண்டதில்லை" என்று கூறினர்.

## 347

சென்ற நூற்றுண்டில் இங்கிலாந்து நாட்டை ஆண்ட மூன்றும் ஜார்ஜ் மன்னர் லாலண்டு என்னும் புகழ்வாய்ந்த வான சாஸ்திரிக்குப் பணம் தந்து கௌரவித்தார்.

அந்த அறிஞர் அதற்காக அரசர்க்கு நன்றிக் கடிதம் ஒன்று எழுதி அனுப்பினுர்.

அதைப் பெற்றதும் அரசர் "யுத்தம் நேர்ந்தால் அதற்குப் பணம் செலவழித்தாக வேண்டியிருப்பதால் செலவு செய்கிறேன். ஆனால் விஞ்ஞானத்தின் பொருட்டுச் செலவு செய்வதோ எனக்குச் சந்தோஷமாயிருக்கிறது, இது யாருக்கும் துக்கம் உண்டாக்குவதில்லை. மனித குலத்தை கௌரவிப்பதாகவு மிருக்கிறது" என்று கூறினுர்.

## பேச்சுரிமை

## 348

பண்டைக் காலத்தில் ஸிஸிலித் தீவிலிருந்த சைரக்கூஸ் என்னும் பேர் பெற்ற நகரத்தில் டிமோலியன் என்ற பெரியார் ஒருவர் இருந்தார். அவர் மிகவும் பாடுபட்டு நல்லவிதமான சட்டங்கள் அமையுமாறு செய்தார், மக்கள் எல்லோரும் அவரிடம் பேரன்பு செய்தார்கள்.

ஒருசமயம் அவர் நீதிமன்றத்தில் ஒரு வழக்குத் தொடர நேர்ந்தபோது அவர் ஜாமீன் தரவேண்டுமென்று லாப்பிஸியஸ் என்பவர் வற்புறுத்தினுர். அதைக் கண்டு பொதுமக்கள் லாப்பிஸியஸைக் கேலி செய்ய ஆரம்பித்தார்கள், ஆனால் டிமோலியன் "அப்படிச் செய்வது தவறு. சட்டத்துக்கு விரோதமாக நடக்கக் கூடாது என்று தானே நான் இடைவிடாது பாடுபட்டேன் அந்தப்படி நடக்குமாறு தானே அவர் வற்புறுத்துகிறுர்" என்று கூறி மக்களைத் தவறு செய்யாதபடி தடுத்தார்.

## பொதுமக்கள்

### 349

சென்ற நூற்றாண்டில் ஐரோப்பிய மகாகவிகளுள் சிறந்தவர் என்று பேர் பெற்ற ஜெர்மன் ஆசிரியர் கதே என்பவரிடம் ஒருசமயம் அவருடைய நண்பர் எக்கர்மன் என்பவர் "தங்களுடைய "சிறந்த விழா" என்பதை நடிக்க ஏற்பாடு செய்கிறார்கள். எல்லா ஏற்பாடுகளும் அழகாகச் செய்யப்பட்டதும் பொதுமக்கள் அவற்றை ரசிக்கத் தக்க அறிவும் உணர்ச்சியும் உடையவர்களாக இருப்பார்களோ?" என்று கூறினார்.

அதற்கு கதே "தம்பி! பொதுமக்களைப் பற்றி இனிமேல் என்னிடம் சொல்ல வேண்டாம். அவர்களைப் பற்றி நான் எதுவும் கேட்க விரும்பவில்லை. நாடகத்தை எழுதிவிட்டேன், மக்கள் என்ன வேணுமோ செய்து கொள்ளட்டும்" என்று கூறினார்.

## பொய்

### 350


அரிஸ்டாட்டில்

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் கிரீஸ்தேசத்திலிருந்த அரிஸ்டாட்டில் என்பவர் உலகத்தில் இதுவரை தோன்றியுள்ள ஒரு சில பேரறிஞர்களுள் ஒருவர். அவர் பிளேட்டோவின் மாணவர், பிளேட்டோ சாக்ரட்டீஸின் மாணவர்.

அரிஸ்டாட்டிலிடம் ஒருசமயம் அவருடைய மாணவர்களுள் ஒருவர் "மக்கள் பொய் கூறுகிறார்களே, அதனால் அவர்கள் பெறும் இலாபம் யாது?" என்று கேட்டார்.

அதற்கு அரிஸ்டாட்டில் "அவர்கள் உண்மை பேசும்போது யாரும் அவரை நம்பமாட்டார்கள். அதுதான் அவர்கள் பெறும் இலாபம்" என்று பதிலளித்தார்.

Printed at Asian Printers, Madras-5

சென்னை அரசாங்கத்தார்

குழந்தைகள் நூல் நிலையங்களுக்கும்

சமுதாய அபிவிருத்தி

நூல் நிலையங்களுக்கும் வாங்கும்

## சிறந்த குழந்தை இலக்கியங்கள்



ஜவஹர் கதை

*அரசாங்கம் பரிசு தந்தது*

கேள்வியும் பதிலும்

அப்பாவும் மகனும்

*அரசாங்கம் பரிசு தந்தது*

தந்தையும் மகளும்

அண்ணனும் தங்கையும்

குழந்தை எப்படிப் பிறக்கிறது?

*அரசாங்கம் பரிசு தந்தது*



## காந்தி நிலையம்

ராயப்பேட்டை சென்னை-14

Wrapper Printed at Raghu Printers, Madras-14.